உ

ஓம் ப்ரும்மைவ ஸத்யம்
ஸ்ரீ ஸத்குரு பரமாத்மனே நம:
ஸ்ரீ புவனேஸ்வர்யை நம:

20-5

புதுக்கோட்டை

ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள்

அருளிய

# இதயபோதனை - ஆத்மபோதனை




வெளியீடு

மதராஸ் ரிப்பன் பிரஸ்,
புதுக்கோட்டை.



ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவப்ரம்மேந்த்ர
சரஸ்வத் யவதூத ஸ்வாமிகள்

# ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸதாசிவ பிரும்ஹேந்த்ர ஸரஸ்வத் யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம்

## புதுக்கோட்டை.

## ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அருளிய

# இதயபோதனை, ஆத்மபோதனை

## நூன் முகம்

*ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களுடைய மெய், மனம், புத்தி, அந்தக்கரணம், அந்தராத்மா வென்ற பல நிலைகளில் அவர்கள் பெற்ற அனுபூதிகள் ஏட்டில் பதிவு பெற்று இருக்கின்றன. எந்நிலையிலும் ஏதவத்தை யிலும் கண்ட அனுபூதிகளைக் காட்டிலும் தன்னிலையிலும் அஹம்பிரும்ஹானுபூதியிலும் தேறி தெளிந்து நிலைபெற்றநிலை யின் பூர்ணனந்தப் பதிவுகள் மனித உலகத்துக்கோ தேவை யான ஒரு விலையிலா மாணிக்கப் பெட்டகம். மானிட தேகத் தில் சிறைப்பட்டு கிடக்கும் தேஹியின் மாய பித்தம் தெளிய யோகத்திலிருந்து மோனத்தில் பற்றி பேரின்ப மருந்துப் பேழை. இம்மருந்து அந்தந்த மனிதனின் பரிபக்குவத்திற்கு தகுந்ததுபோல் அளவுப்படி அடைத்து வைக்கப்பட்ட ரஸ மணிகளின் பேழை.*

*இவை அவரவர்களுடைய அறிவு, பக்தி, சிரத்தை இவைகளுக்கு தகுந்தது போல புலப்படும். இது ஒரு ஸ்படிக லிங்கத்தைப் போன்றது. நித்ய முக்த பரிசுத்த விபுத்த ஆத்மஜோதி; இந்தஸ்படிகத்தில் அப்படியே காமக்ரோத லோப, மோஹ, மத, மாத்ஸர்யங்களுக்கு ஆறு வர்ணங்கள் தனித்தனியே இந்த ஸ்படிகத்தில் பிரவேசித்தால் அந்தந்த வர்ணத்தை அது கொண்டாதாகயிருக்கும். இப்போதைய ஸ்படிகலிங்கத்தை அந்த ஆறு வர்ணங்களின் எதைக் கொண்டும் பார்க்கக்கூடாது, ஷட்வைரிகளையும் அகற்றி அகச் சுத்தத்தோடு பார்ப்பவருக்கு அபரோக்ஷானுபூதி கிட்டும். துரியாச்ரமத்திலிருந்துகொண்டு கண்டு களித்து*

[illegible] இருக்கும் அமுத விதைகள் [illegible] செழித் தோங்கும் [illegible] க்ஷேத்திரங்களாக தத்தம் மனோ புத்திகளைச் செய்து கொண்டு இப்போதனை களைப் படித்து அவைகளின் பொருளை மனனம் செய்து தியானம் செய்து பிறருக்கு எடுத்துரைத்துச் சுவைக்க வேண்டும். இதையே ஆதிசங்கர பகவத் பாதர்கள் "ஸர்வாத்மத்வம் மஹாவிபூதி" என்று அருளியிருக்கிறார்கள் இந்த மஹா விபூதி கிடைத்தால் ஸர்வ ஐசுவர்யமும் கிடைக்கும் இவை கிடைப்பதற்கு ஸ்ரீ ஸத்குரு ஸ்வாமிகளின் க்ருபாகடாக்ஷம் வேண்டும்.

சாஸ்திர விஹிதமான விதிகளைவிட்டு விலகினால் மனிதருக்கும் மனோவியாதிகளுடன் சரீர வியாதிகளும் அவனைப் பீடிக்கின்றன. வியாதிகள் அவனுடைய மனதையும் வியாபித்து நல்லது எது கெட்டது எது என்று சோதித்துப் பார்க்கும் சக்தியை இழக்கிறான், இந்த நிலையில் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சாந்தானந்த ஸத்குரு ஸ்வாமிகளின் இந்த அமுத மொழிகளைப் படித்து பொருள் தெரிந்து கொண்டு மனனம் செய்தானால், அன்று ஜடாமண்டலதாரியாய் சந்திர கலையைத் தரித்து கபால பாணியாய் கபால மாலையை அணிந்து அவதூத அவசரத்தில் கபால ஸூத்திரங்களைப் பாடிக்கொண்டு நம் ஆத்மாக்களை பிக்ஷையாக யாசித்து கொண்டு சென்ற பிக்ஷாடன மூர்த்தியின் கபால ஸூத்திரங்களைக் கேட்டு ஆனந்தங்கொண்டு சந்திரகலை உருகி கபால மாலையில் வழிந்ததாம். அந்த அமுத பிந்துக்கள் பட்ட மாத்திரத்தில் உயிர் பெற்ற கபாலங்களும் பாடினவாம்.

அந்த பிக்ஷாடன மூர்த்தியின் நிகம ஸாரத்துக்கு ஒப்பான ஸ்ரீஸத்குரு ஸ்வாமிகளின் பொன் மொழிகளை நாம் யாவரும் படித்துப்படித்து அவர்களுடைய கருணைக்கு பாத்திரர்களாகி இக பர சுகம் இரண்டையும் அடைவோமாக.

V. S. கணபதி சாஸ்திரிகள் B.A.B.L.,

அட்வகேட்,

புதுக்கோட்டை.

20-5

புதுக்கோட்டை ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் அனுக்கிரஹித்தருளிய

# இதய போதனை

1. ஏ மனமே! உன்னிடம் இருக்கும் சுயநலம் என்று ஒழியுமோ அன்றுதான் நீ உண்மையான அன்பை உன்னுள் உணர்ந்து செலுத்த முடியும்; அக்ஞானம் உள்ள வரை மெய்யன்பை உணர முடியாது. பந்தமும், பற்றுதலும், அன்பின் வளர்ச்சிக்கு விரோதிகளாவார்கள். பற்றற்ற நிலையில் உண்மையான அன்பை நீ உணர்ந்து அனுபவிக்க முடியும். உலகில் மக்களில் பெரும்பாலோர் தங்கள், தங்கள் சுய நலத்திற்காக ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துகிறுர்கள். சுய லாபத்தை எதிர்பார்ாமல் அன்பு செலுத்துபவர்கள் ஆயிரத்தில் ஒருவர் இருப்பது கூட அரிதாகும். வயிற்றுப் பிழைப்பு ஒன்றிற்காகவே உலகில் பலகோடி மக்கள் அன்பு செலுத்துவதைப்போல், நீயும் அன்பு செலுத்தி, தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ளாதே. கடவுளிடம் மெய்யன்பு செலுத்த அறியாதவன் இம்மையில் உயரிய ஞானம் ஏதும் பெறல் அரிதாகும். மனமே! உனக்கு அமைதி வேண்டுமா? சுய நலத்தை விட்டு விடு. நீ கடவுளை அடைந்துய்ய மெய்யன்பை அவர்மீது செலுத்தும் முயற்சியில் உன் முழு மனமும் தீவிரமாக ஈடுபடுமானல், இப்பிறவியிலேயே உன் மனதில் அமைதி நிறைந்து விடும். அமைதியிருப்பின் உன் மனதிற்கு ஆசையிராது. ஆசையற்றவனுக்கு சுயநலமுமிராது. சுயநல மற்றவனிடம் மெய்யன்பைக் காணலாம். மெய்யன்பினுல் கடவுளின் திருவருள் மயமாகவே நாம் மாறிவிடலாம் என்பதை மறவாதே.

---

*அதிஷ்டானம், புதுக்கோட்டை.*

1—350

2. ஏ மனமே! நீ பொம்மலாட்டத்தைப் பார்த்திருக்கிருயா? அந்த பொம்மைகள் தாளுகவா ஆடுகின்றது பொம்மைகளை ஆட்டுவிப்பவன் திரைக்குப் பின்னுல் மறைந்து கொண்டு கயிற்றில் கட்டிய பொம்மைகளை ஆட்டுவிக்கின்ருன். பொம்மலாட்டக்காரனைப் போல் பிரபஞ்சமாகிய உலக நாடக மேடையில் பராசக்தியான அன்னை தன் திருவிளையாட்டால் அனைவரையும் ஆட்டுவிக்கிருள், என்பதை நீ மறவாதே. உலகிலுள்ள அனைவரும் அவள் கைப் பொம்மைகளாகும். உயிராகிய கயிற்றினுல் மக்களனைவரையும் கட்டிவைத்து, ஆட்டி வருகிருள். நீ பராசக்தியின் கையிலிருக்கும் பொம்மையாவாய். அன்னை பராசக்தி பலகோடி மக்களுக்கும் பல வேஷத்தைப் போட்டு, நாடகத்தை நடத்தி வருகிருள் அரசனுக வேடம் போட்டவனையே, ஆண்டி வேடத்தில் வந்து காட்சி தரும்படி ஏற்பாடு செய்கிருள். உலகில் அனைவரையும் இப்படியெல்லாம் ஆட்டி வைக்கிருள் பராசக்தியான அன்னை. அவள், தான் நடத்தும் நாடகம் நன்கு நடப்பதற்காக, உலகையும், அதில் மக்களையும் சிருஷ்டித்து. பலரையும் பற்பல பாத்திரங்களாக நடிக்க வைத்துள்ளதை நீ மறந்து விடாதே. மனமே! நீ நாடகத்தில் நடிக்கவே தோன்றியுள்ளாய். நாடகத் தலைவியோ பராசக்தியாவாள். அவளிட்ட கட்டளையை நன்கு நிறைவேற்றுவதில் கவனம் முழுவதையும் செலுத்துவாயாக. வாழ்க்கை முழுவதும் நீ நன்கு நடித்தாக வேண்டும். நாடகமாகிய விளையாட்டு முடிந்தவுடன், குழந்தையாகிய நீ உன் தாயை நோக்கி விரைந்து ஓடி. அன்னையின் மடியில் அமர்ந்து கொள்வாய். குழந்தைகள் விளையாடும்போது, தாயையும் மறப்பது சகஜமேதான். நீ இப்பொழுது உன் தாயை மறந்து உலக அரங்கில் நடித்து விளையாடி வருகின்ருய். மனமே! நீ விளையாடும்போது நீ நாடகத்தில் நடிக்கின்ருய் என்பதை மாத்திரம் நினைவில் வைத்துக்கொள், மறந்து விடாதே. உனக்கு ராஜவேஷம் போட நேரும்போது

சந்தோஷப்படாதே. அடுத்த நிமிஷமே மிகத் தரித்திரனுன பிச்சைக்கார வேஷத்தை நீ போட நேரும்போது துக்கமும் உனக்கு வரக்கூடாது. நாடகத்தில் எந்த வேஷம் போட்டா லென்ன? நாடகம் முடிந்தவுடன் உன் வேஷம் கலேக்கப்படும். அப்பொழுது நீ யார்? உனக்கு என்ன பேர்? எந்த ஊர்? நீ எங்கிருந்து வந்தாய்? என்பதெல்லாம் புரியும். நாடகத்தில் நடிக்கும் போதே நான் யாரென்று தெரிந்து கொண்டு நடிப் பாயானுல் உனக்கு கவலேயிராது. சுகமோ, துக்கமோ, உண்டாகாது. நாடகத்தில் நீ சாட்சியாக நடித்து வெற்றி காண்பாய். பொம்மலாட்டம் போல் தான் உலகை அன்னே ஆட்டி வருகிருள் என்பதை மறவாதே. நீ அன்னேயின் கை பொம்மை என்பதை நம்பு. பற்றற்று உனக்குக் கொடுத்த வேலேயை செய்து வா, ஜாக்ரதை!

3. ஏ மனமே! உன் அறிவால் அறிந்த உண்மைகளே நீ ஏன் அனுபவத்திற்கு கொண்டுவரத் தயங்குகிருய்? உனக்கு அனுபவம் ஏற்படாதவரை நீ ஒரு படித்த முட்டாள் என்று அனுபூதியுள்ள மஹான்கள் நினேத்து ஒதுக்குவார்கள். உன் அறிவிற்கும் அறிவான வஸ்துவை நீ அறிந்து அனுபவத் திற்குக் கொண்டு வருவதே அனுபூதியாகும். தன்னிலும் வேருக ஒன்றுமில்லே. உலகத் தோற்றமே ஒரு கற்பனேதான். நீ ஒன்றையும் கற்பனே செய்யாதே. நீ வேருென்றை நினேத்துக் கற்பனே செய்தால், கற்பனே கடந்த ஜோதி உனக்குள் மறைந்துவிடும். உன்னே மறைப்பது கற்பனேயே தான். நீ கற்பனேகளேத் தியாகம் செய்துவிடு. பரிபூர்ண நிலேயை அடைந்து விடுவாய். கற்பனேகள் உன் அறிவிற்கும் அறிவை மறைத்துவிடுகிறது. கற்பனே செய்து உன்னே நீயே ஏன் மறைத்துக் கொள்கிருய்? உன்னே நீயே கெடுத்துக் கொள்ளாதே. உன்னே நீ அறிய வேண்டுமானுல் முதலில் கற்பனேகளுக்கு நீ இடம் தரலாகாது. அது உன்னே

வஞ்சித்துக் கெடுக்கும். கற்பனைகளை அறவே விட்டு, கற்பனை கடந்த ஜோதியாய்ப் பிரகாசிப்பாயாகுக.

4. ஏ மனமே! உன்னை நீ அறிந்து உய்வதற்கான சாதனைகளால் உன் உடலே போனாலும் போகட்டுமே. தன்னைத்தான் அறியாது உடலை மாத்திரம் வளர்த்து வருபவன் பூமிக்குப் பெரிய பாரமல்லவா? தன்னைத்தான் அறிய நீ வந்து விட்டாய். உனக்கு உடலைப் பற்றியதும், உலகைப் பற்றியதுமான கவலை எதற்கு? பிரபஞ்சத்தை சொப்பனமாக நினைத்துவிடு. கனவில் கண்டது உண்மையாகுமா, சொல்? பிரபஞ்சம் கனவு என்ற நம்பிக்கை உனக்கு முதலில் உண்டாக வேண்டும். சொப்பனத்தை மெய்யாக நீ நம்பினால், உனக்கும், சாதாரண மனிதனுக்கும் என்ன பேதமிருக்கிறது; ஜீவன் முக்தனாக வேண்டுமென்று நினைத்தால் போதுமா, சொல்? பிரபஞ்சத்தைக் கனவாகக் காண்பவன் அல்லவா ஜீவன் முக்தனாக முடியும். ஜீவன் முக்தனுக்குப் பிரபஞ்சத்தைப் பற்றிய கவலை ஏது? நீ பிரபஞ்சத்தைப் பற்றிய நினைவை விட்டுவிடு. பிரபஞ்சத்தை சிருஷ்டித்த கடவுள் பார்த்துக் கொள்வார். நீ கவலையை அறவே விட்டு உன்னை நீ அறிந்து உய்வாயாகுக.

5. ஏ மனமே! உன்னிடம் ஜீவன் இருக்கிறதா? ஜீவன் இருக்கிறதென்பதைப் போல் ஈஸ்வரனும் இருக்கிறானென்பதை நம்பிவிடு. ஜீவன் இருக்குமிடத்தில் ஈஸ்வரன் இருந்தே ஆக வேண்டும். ஜீவனுக்கு ஈஸ்வர சம்பந்தமில்லை யென்றால், ஜீவனிருக்காது. ஜீவனில்லாத இடத்தில் ஈஸ்வரனைக் காண முடியாது. நம்பு. ஸந்தேகம் வேண்டாம். உன்னுடைய ஜீவனில் ஈஸ்வரன் கலந்துதானிருக்கிறான். ஈசனைக்காண உனக்கு இனி சிரமமில்லை. ஈசனைத்தேடி ஓடவேண்டாம். கவலையை விட்டு உன் ஜீவனில் இரண்டறக் கலந்திருக்கும் ஈசனை உன்னுள் கண்டு கொள்.

6. ஏ மனமே! நீ பொய்ப் பொருளாகிய மண், பொன் மற்றுமுள்ள அநித்யமானவைகளில் உன் மனதைச் செலுத்தியும், அற்பவிஷயங்களைப் பற்றியே நினைத்தும், அவைகளே நித்யமென நம்பியும், உன் உடம்பிலும், உணவிலும், உடையிலும் உள்ளத்தைச் செலுத்தி வருகிறாயே; இந்தக் காரியங்களை உலகில் பல கோடான கோடி முட்டாள்கள் செய்து அலுத்துச் செத்ததை நீ அறிவாயோ? பொய்ப் பொருள்களில் ஆசை வைப்பது மூட்டாள்களின் முதல்தரமான வேலையல்லவா? நீயும் மூட்டாளாகிவிடாதே. முன் ஜாக்ரதையாக இருந்து கொள். பொய்யான உலகில் மடையர்கள் மெச்சும் காரியத்தைச் செய்து விட்டு, நீ பெருமையடித்துக் கொள்கிறாயே? மனமே! என்றைக்கு நீ அனைத்தையும் அசத்தென உதறி எறிந்து விட்டு, மெய்ப் பொருளைக் காணப்போகிறாய்? மெய்ப் பொருளாகிய ஆத்மாவை நீ அறியத் தவறிவிட்டாய். மண்ணிடமும், மற்றவைகளிடமும், உள்ள ஆசையை அறவே விட்டு விடு. அவைகள் உன்னைத் தாழ்த்திவிடும். உன்னை ஆசையானது, கீழ் நிலைகளுக்குக் கொண்டு சென்று நரகத்தில் தள்ளிவிடும். மறவாதே. ஜாக்ரதை!

7. ஏ மனமே! நீ உலகில் ஒரு கடவுள் இருக்கிறாரா? பல கடவுள் இருக்கிறாரா? என்று வீண்வாதம் புரிந்து உன்னை நீயே ஏன் கெடுத்துக் கொள்கிறாய். நீ வீண்வாதம் செய்யும் நேரத்திற்குள் உன்னை விட்டு உன் உயிர் பிரிந்து விடப் போகிறது. உன் உடலில் உயிர் இருக்கும்போதே ஒழுக்கத்துடன் இருந்துவா. வீண்வாதத்தை விடு. சத்யத்தை நம்பு. கடவுள் சத்யமானவர். சத்யமே கடவுளின் உருவம். கடவுளான சத்யத்தை உண்மையாக நம்பு. நீ சத்யமாக கடவுளை நம்பினால்தான் உனக்குள் கடவுள் ஒருவரா, பலரா என்ற சந்தேகம் ஒழியும். ஸந்தேகத்தை விட்டொழிப்பாயாகுக. சந்தேகம் ஒரு பெரிய நரகமாகும். சந்தேகமிருப்

பவனுக்கு நரகமே கதி. அவன் நரகத்திலிருந்து மீள முடியாது. நீ நரகத்தை அடையவா பிறந்தாய்? உனக்கு சந்தேகம் வேண்டாம். கடவுளை சத்தியமாக நம்பு. நீ கடவுளாகவே மாறி விடுவாய். சந்தேகம் உன்னை நரகத்தில் தள்ளி, உயிருடன் உன்னை சித்திரவதை செய்யுமென்பதை மறவாதே. ஜாக்ரதை.

8. ஏ மனமே! நீ மெய்ப் பொருளை அடைய வேண்டு மானால் முதலில் உன் குருவைக் கடவுளாக நம்பி விடு. சத்ய மாக நம்பிவிடு. பிறகு குருநாதன் உபதேசித்த மந்திரத்தைக் கடவுள் உனக்குக் கொடுத்த மெய்ப்பொருளாக நம்பி, ஏத்திப் போற்றுவாயாகுக. ஸத்குருவான கடவுள் கொடுத்த மந்திரத்தை இடை விடாமல் தியானம் செய்வாயாகுக. கடவுளாகிய குருநாதன் கொடுத்த மந்திரத்தை, இடைவிடாமல் ஏத்தி, தியானித்து வருவதால், நீ யோகிகளுள் சிறந்த யோகி யாகவும், ஞானிகளுள் சிறந்த ஞான பாஸ்கரனாகவும், நீ விளங் குவாய். ஸத்குரு பகவானின் அருள்வாக்கை நம்பினவர் களுக்கு, இந்த உலகத்தில் அடையமுடியாதது, சாத்திய மற்றது என்பது எதுவுமில்லை. ஆண்டவனாகிய குருநாதனை நீ நம்பினால் நீயும்அவனாவாய். கடவுளை சத்யமாக நம்பி னவன்(கடவுளை அறிந்தவன்) கடவுளேயாவான். மனமே! குருவாக்யபரிபாலனம் செய்வாயாகுக. ஸத்குரு வேறு,தெய்வம் வேறு என்ற எண்ணம் உனக்கு உண்டாகக் கூடாது. ஸத் குருவினால் உபதேசிக்கப் பட்ட மந்த்ரம் வேத வேதாந்தங் களின் சாரமாகும். அந்த மந்த்ரம் உன்னை மெய்ப் பொரு ளோடு இரண்டறக் கலக்கும்படி செய்துவிடும். ஸத்குரு, மந்த்ரம், கடவுள் மூன்றும் ஒன்றேதான். மூன்றும் முடிவான ஒரே வஸ்து(ப்ரம்மம்) என்பதை மறவாதே. உனக்கு ஸத்குரு வினிடம் ச்ரத்தா பக்தி இருக்குமாயின் இனிமேலும் பிறப்பு, இறப்பு என்பது உனக்கில்லை. நீ நித்யமுக்தனவாய். நம்பி விடு. நம்பிவிடு.

9. ஏ மனமே! உன்னை மகிழ்விக்க வேறு யாரும் உனக்குத் தேவையில்லை. உன்னை நீ உனக்குள் கண்டு மகிழ வேண்டுமென்பதை மறந்து விட்டாயா? உனது மகிழ்ச்சிக்காக நீ வேறு யாரையாவது எதிர் பார்ப்பாயேல், அடிமையாகி அவதிப்பட நேருமென்பதை மறந்துவிடாதே. நீ தவறு செய்தது போதும். இனிமேல் தவறுகளைச் செய்வதில்லையென்று உறுதி கொள். உன் கடமைகளை நீ அலட்சியம் செய்யாதே. முதலில் உன் கடமைகள் என்று சொல்லி நீ எதைச் செய்துவருகிறாய். கடமை, கடமை என்று சொல்லி உன்னை நீயே மிகக் கொடிய பந்தத்தில் மேலும் அழுத்திக் கொள்ளாதே. உன் கடமை எதுவென்று உனக்குத் தெரியுமா? சொல்கிறேன் கேள். முதலில் உன்னை நீ அறிந்து கொள்வது தான் உன் முதற் கடமையாகும். மறந்து விடாதே. கடமை என்று சொல்லி இனி நீ ஏமாற்ற முடியாது. உன் கடமையை நீ தெரிந்து கொண்டாயா? இனியாவது உன் கடமையை ஒழுக்கத்துடன் செய்துவா. பிறரினால் நீ மகிழ்ச்சி அடைந்து விட முடியாது. உன்னை நீ அறிய உனக்குப் பிறருடைய ஒத்தாசை எதற்கு? உன்னை நீ அறிய, பிறரை நீ நம்புவதானது உன்னை நீயே பந்தப் படுத்திக் கொள்வதாகும். நீ மகிழ்ச்சியடைய, பந்தங்களை முதலில் உதறி எறிவாயாகுக. பற்றுதலை விட்டு பற்றற்ற நிலையை நீ அடைந்தால் தான் உனக்கு உண்மையான மகிழ்ச்சி கிட்டும். நீ பிறரால் (பிற வஸ்துவால்) ஒரு நாளும் மகிழ்ச்சியடைய முடியாதென்பதை மறந்து விடாதே. மகிழ்ச்சி வெளியில் இல்லை. உனக்குள்ளேயே இருக்கிறது. நம்பு.

10. ஏ மனமே! நீ மாத்திரம் எங்கிருந்து வந்தாயென்று நினைக்கிறாய்? உலகிலுள்ள அனைத்தும், அன்னையிடமிருந்து தான் வெளியேறிருக்கிறது. நீயும் அன்னையிடமிருந்தே வந்துள்ளாய். உனக்கும், மற்றவர்களுக்கும், ஒரு வித்தியாச

மூமில்லை. எல்லோரும் ஜகதாம்பிகையின் குழந்தைகள் ஆவோம். ஆதிபராசக்தியான அன்னை தன்னுடைய கர்பத்தி லிருந்து உலகிலுள்ள ஜீவன்களனைத்தையும் பெற்றுள்ளாள். நீ காணும் அனைவரும் உனக்கு அண்ணன், தம்பிகளாவார்கள் என்பதை நீ மறந்து விடாதே, உன் கூடப்பிறந்தவர்களை நீ வெறுத்தல் தகாது. நீ வெறுத்தாலும்அவர்கள் உன்னைவிட்டுப் பிரிய மாட்டார்கள். நீ காட்டுக்குச் சென்றாலும் அங்கும் உன் கூடப் பிறந்தவர்களாகிய ஜீவராசிகள் இருப்பது நிச்சயம். நீ எந்த ஜீவனை வெறுக்கின்றாயோ, அந்த ஜீவனாகவே நீ இருக்கின்றாய் என்பதை மறந்து விடுகின்றாய், விருப்பு, வெறுப்புகள், உனக்கு வேண்டாம். உலகிலுள்ள ஜீவன்களில் நீயும் ஒருவன். கடல் நீரை குடங்களில் அடைத்து வைத்திருப் பதைப் போல, மக்களின் உடலாகிய குடத்தில், ஜீவனாகிய இறைவனை அடைத்து வைக்கப்பட்டிருப்பதை நீ மறந்து விடாதே. நீ பிறரை வெறுப்பதும், விரும்புவதும் உன்னுடைய அறிவீனத்தை நீயே காட்டிக் கொள்வதாகும். அறிவற்ற வனாகி விடாதே. நல்லறிவு உன்னுள் இருக்கின்றது. உன் அறிவினால் நீ எங்கிருந்து வந்தாய் என்பதை நன்கு நினைத் துக்கொள். உனக்கு நலமுண்டாகும்.

11. ஏ மனமே! நீ எங்கிருந்து வந்தாயோ அங்கேயே முடிவில் செல்லப் போகிறாய், கடல் நீர் ஆவியாக மாறி, பின் மழை ஜலமாகக் கிடைப்பதைப் போல், நீ முதலில் ஈஸ்வரனாக இருந்தாய். உலகின் நலத்திற்காக நீ ஜீவனாக பூமியில் அவதரித்துள்ளாய். முடிவில் நீ ஈஸ்வரனாக மாறித்தானாக வேண்டும். இந்த ரகசியத்தை நீ மறந்து விடாதே. உண்மை யில் உனக்கும் ஈஸ்வரனுக்கும், யாதொரு பேதமும் கிடையாது நம்பு. நலமடைவாய்.

12. ஏ மனமே! கடல் நீரே ஆவியாக மாறி ஆகாயத்தி லிருந்து மழையாக வருகிறது, என்பதை உலகில் எல்லோரும்

நன்கு அறிவார்கள். நீயும் நன்கு அறிவாய். ஆகாயத்திலிருந்து மழையாக பூமியில் விழுந்த நீருக்கு எத்தனை பெயர்கள் சொல்கிறார்கள் பார்த்தாயா? கங்கை என்றும், யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நர்மதை என்றும், காவேரி என்றும், இன்னும் பல நதிகளில் வரும் நீருக்கு பல பேர்களைச் சொல்லி அழைப்பதை கவனித்தாயா; கடல் நீரே ஆவியாகி பூமியில் விழுந்து மேற்கண்ட பெயர்களுடைய நதிகளின் வழியாக கடலையே திரும்ப அடைகிறது. இப்படித்தான் உலகில் அனைவரும் ஒரே இடத்தில் இருந்து வந்தோம். வந்த இடத்திற்கே அனைவரும் போகின்றோம். இதன் நடுவில் நமக்குப் பல பெயர்கள், ஊர்கள், பற்பல சுபாவங்கள், குணங்கள் எல்லாம் ஒவ்வொருவருக்கும் மாறி, மாறி ஏற்பட்டு, தான் எங்கிருந்து வந்தோம் என்பதையும் மறந்து, அகந்தையினால் திமிர் பிடித்து, தன்னை கெட்டிக்காரனாகவும், மற்றவர்களை முட்டாள்களாகவும் மதித்து, நடக்கிறான் மனிதன். என்ன, அறிவீனம்! அனைவரும் ஒரே இடத்தில் இருந்து வந்தோம், முடிவில் வந்த இடத்திற்கே திரும்பப் போகிறோம். இதன் நடுவில் அவனவனுக்கு கிடைத்த வேலையை சரிவரச் செய்து, சந்தோஷமடையாமல் ஒருவரைப் பார்த்து ஒருவர் பொறாமை ஏன் கொள்ள வேண்டும். மனமே! உனக்கு ஞானமிருக்குமாயின் நான் சொல்வதை மறவாதே. நீ வந்த இடம், திரும்பிப் போகுமிடம் எல்லாம் சிந்தனை செய்து பார். நன்கு விசாரணை செய்து பார். உனக்கு பேத புத்தி ஏற்படாது, ஒருவரையும் வெறுக்கவோ, விரும்பவோ மாட்டாய். ஞானமுள்ள உனக்கு அனைவரும் இறைவனாக காட்சி அளிப்பார்கள், கடல் நீர் ஆவியாக மேல் சென்று, மழையாக மறுபடியும் கடலை அடைவதைப்போல், நீ கடவுளிடமிருந்து, உலகில் வந்தாய், முடிவில் நீ கடவுளோடு இரண்டறக் கலக்கப் போகிறாய். நடுவில் நடப்பது நாடகம். நாடகத்தில் நீ ஒரு நடிகன். உனக்கிட்ட வேஷத்தைப் போட்டு நன்கு திறமையாக நடித்து

நல்ல பேர் பெற்று முடிவில் முக்தியின் இருப்பிடமாகிய கடவுளோடு இரண்டறக் கலப்பாயாகுக.

13. ஏ மனமே! உண்மைப் பொருள் சத்தியம் ஒன்றுதான் உளது என்பதை நன்கறிந்தும் ஏன் உனக்கு இன்னும் சந்தேகம். சத்தியம் எந்த தேசத்திலும் ஒன்றுகத் தான் இருந்தாக வேண்டும். நெருப்பு எந்த தேசத்திலும் சுடத்தான் செய்யும். அப்படிப் போல் சத்தியம் எவ்வுலகத்திலும் மாறுபடாத ஸ்வயம்ப்ரகாசமாகத்தான் இருக்கும். மாறுபடுவது அனைத்தும் உன் மனத்தின் சேஷ்டைகளாகும். உன் மனத்தை செம்மைபடுத்திஞல் சத்தியம் உன்னுள் பிரதிபலிக்கும். ஆன்ம ஒளியைக் காண்பாய்.

14. ஏ மனமே! உன் அறிவிற்கும், அறிவாகிய ஆதி பராசக்தி உன்னுள் ஆத்மாவாக இருக்கும்போது, அவளை நான் அறியவில்லை. எப்பொழுது அம்மையைக் காண்பேன், எந்த மலைக்குகைக்குச் சென்ருல் காணலாம், எந்த நதியில் மூழ்க வேண்டும், எவருடைய ஒத்தாசை வேண்டும் என்று புலம்பிக் கொண்டு காலத்தைக் கடத்தி வருகிருயே. இது உனக்கு நியாயமாகப்படுகிறதா சொல் மனமே! உன் அறிவோ உன்னுள் இருக்கிறதை நீ நன்கறிகிருய். அறிந்தும் அறிவான அன்னையை வெளியுலகில் தேடுகிருய். உன் அறிவிற்கோ எவ்வகையான உருவமோ, தோற்றமோ கிடையாது. குணம், குறியில்லாத உன் அறிவை மனத்தால் எப்படி நீ அறிவாய். உன்னுளிருக்கும் அறிவை நீ என்றும் கண்டு கொள்ள முடியாது. அது பரப்ரம்மமாகும். ப்ரம்மத்திற்கு உருவம் ஏது? உருவத்தோடு இருப்பின் அதை நீ நேரில் கண்டு கொள்ளலாம். எங்கும் நிறைந்த ப்ரம்மத்தை எப்படி நீ கண்களால் காண முடியும். முடிவற்ற வஸ்துவை (அறிவை) நீ உன் கண்களால் பார்ப்பது என்பது இயலாத காரியம். அறிபவஞகிய அறிவை,

அறிவு எப்படி அறியும். அறிவு அறியும் பொருளல்லவே. அறியும் பொருளாய் அறிவு இருப்பின் அனைத்தும் அறிபவனும் அறிவு இருக்க இயலாது. மனமே! அழிவில்லாத பேரின்பமாய் உன் அறிவு இருக்கின்றது. உன் உள்ளத்தினுள்ளே ஸ்வயம் ப்ரகாசமாய் அது இருக்கின்றது. உன் அறிவை சலன மற்ற மனத்தில் நீ ''நான், நான்'' என்று கோஷிக்கும் நிலையில் காணலாம். அதுவே உனது ஆன்மாவாகும். உன் ஆன்மா ஒப்புயர்வற்றதாகும். எல்லையற்ற உன் ஆன்மாவை நீ நன்கு அறிந்து கொள். தூய நிலையில் அமைதியாக இருந்து கொண்டு உன்னை, நீ உன்னுள் உன் அறிவிற்கும் அறிவாய் அறிந்து கொண்டு விடு. வேறு எதையும் நீ நாடாதே, தேடாதே. முடிவற்ற இன்பம் உனக்குக் கிட்டும்.

15. ஏ மனமே! இவ்வுலகில் மிக உயர்ந்த சிருஷ்டி எது என்று நினைக்கின்றாய்? அது மனிதன் தான். உலகில் மனிதன் ஒருவனே பேரின்பத்தை அனுபவிக்க முடியும். மனித உடலில் தான் பகுத்தறிவு இருக்கிறது. மனிதன் ஒருவனே துக்கத்தைப் போக்கிக் கொண்டு மாசற்ற இன்பத்தை இம்மையில் (இவ்வுலகில் இருக்கும் போதே) அனுபவிக்க முடியும். தேவர்களும் கூட மனிதராய்ப் பிறந்துதான் நிறைவு பெறுகிறார்கள். மனிதனே உலகில் மிகமிகச் சிறந்தவனாவான். மோக்ஷத்தை மனிதன், இங்கேயே, இப்பொழுதே பெற முடியும். ஆன்மானுபூதி பெறவே மனிதனை இறைவன் படைத்துள்ளான். மனமே! உன்னைக் கடவுள் எதற்காக மனிதனாகப் படைத்துள்ளான் என்பதை நீ கண்டு அறிந்து கொண்டாயா? வாழ்வில் ஆன்மானுபவத்தைப் பெற்று விடு. உனக்கு ஆன்மானுபவம் வந்து விட்டால், நீ காணும் எல்லாவற்றுள்ளும் இறைவனையே காண்பாய், மாறவாதே. உனக்குக் கிடைத்த மனித உடலைக் கொண்டு ஆனந்தானுபவத்தைப் பெற்றுய் வாயாக.

---

16. ஏ மனமே! அன்பைப் பற்றியும் அன்னையைப் பற்றியும் மணிக்கணக்காக நீ பேசினால் அன்பும், அன்னையின் அருளும் உனக்குக் கிட்டி விடுமா? ஏன் பா ரங்கு செய்கிறாய்? நீ கூலியை விரும்பித் தானே அன்பு செலுத்துகிறாய். அன்போடு பேசுகிறாய். அன்னையை அன்போடு பக்தி செலுத்துகிறாய். கூலி குறைந்தாலோ அல்லது கூலி கிட்டா விட்டாலோ நீ அவர்களிடம் அன்பு செலுத்துவாயா? உண்மையைச் சொல். அன்பைப் பற்றி புஸ்தகங்களில் படித்ததை ஒப்பிப்பதால் உண்மையான அன்பின் உணர்ச்சியை நீ அடைந்து அனுபவிக்க முடியுமா? வீண் பேச்சினால் தொண்டை வறட்சி ஏற்படுமே ஒழிய, உண்மை யான அன்பின் ரசத்தை அனுபவிக்க இயலாது. படித்த வனுக்கு என்ன அடையாளம். படித்தபடி நடப்பதல்லவா? உன்னிடம் கடுகளவு உண்மையான அன்பிருந்தால் போது மானது. சிறிதளவு நெருப்பிருந்தால் போதும். அதை மிகப் பெரிய அளவினதாகச் செய்து கொண்டு விடும் விவேகிகளை நாம் பார்க்கின்றோம். சிறு நெருப்பானது ஊரையே எரித்து விடுவதும் நீ பார்த்ததில்லையா? மனமே! உன்னிடம் கடுகளவு உண்மையான அன்பிருந்தால் போதுமானது. அதை நீ அன்னையிடம் செலுத்துவாயானால் அது காட்டுத் தீயாக மாறி விடும். அன்பானது ஸர்வசக்தி வாய்ந்தது. அன்பே, அன்னை பராசக்தியின் நிஜமான உருவமாகும், வடிவமாகும். அன்பை யும், அன்னையையும் பற்றிப் பேசி பொழுதைப் போக்காதே. உண்மையான அன்பை அன்னையிடம் செலுத்தி, அருள் மயமாகி விடுவாயாகுக.

17. ஏ மனமே! நீ அழியக்கூடிய, அநித்யமான உடலிலும், மற்றவைகளிலும், பித்துப் பிடித்து அலைகிறாயோ உனக்கு இதனால் மோக்ஷமா கிட்டப் போகிறது, நரகத்தின் வழிகாட்டியல்லவா பற்றுகள் மண், பொன் மற்றவைகளில்

உனக்கு கடுகளவு பற்றுதல் இருந்தாலும் போதும், அது உன்னை நரகத்தில் கொண்டு விட்டுவிடும், ஸந்தேகம் வேண்டாம், மறந்து விடாதே. மனமே! நீ க்ஷேமத்தை இப்பொழுதே அடைய வேண்டுமானால் நான் சொல்வதைக் கேள். நீ அநித்யமானவைகளில் வைத்துள்ள பித்தை கடவுள் மீது வைத்து விடுவாயாகுக. கடவுள் மீது உண்மையாக உனக்குப் பிடிப்பு இருக்குமானால், நீ இருக்குமிடம் ஸ்வர்க்க மாகிவிடும். பாபங்கள் உன்னை விட்டுப் பறந்தோடும். பற்றுதல்கள் அனைத்துமே உன்னை விட்டு விடும். இறைவனிடம் பித்துப் பிடித்த்வர்கள், இறைவனைப் பித்தா என்று பாடுவதை நீ கேட்டு இருக்கிறாயா; அதன் பொருள் என்ன என்று நினைத்தாய்? இறைவன் ஒரு பெரிய பித்தன். தன்னிடம் பித்துப் பிடித்தவர்களை விடாது பற்றிக் கொள்ளும் பித்தனுவான் அவன். உனக்கு இறைவனிடம் உண்மையான பித்து பிடித்தால்போதும்,அந்த எல்லாம்வல்ல இறைவன் ஓடோடியும் வந்து, உன்னையும் பித்தனாக்கி விடுவான். பக்தர்களை அவன் உயிருடன் விழுங்குவதே அவனுடைய பித்தாகும். இறைவனிடம் பித்துப் பிடித்தவர்கள் செத்துப் போக மாட்டார்கள். சாவென்பது அவர்களுக்குக் கிடையாது. என்றும் அமரனாகி விடுவார்கள்.அவர்களை ஜீவன் முக்தனென்று போற்றுவார்கள். இறைவனிடம் பித்துள்ளவனை கடவுள் விழுங்கி விடுவதால் அந்தப் பித்தன் இறைவனோடு இரண்டறக் கலந்து விடுகிறான். இறைவனுக்கும், அவனுக்கும் யாதொரு வித்தியாசமுமில்லை. இறைவனும் பக்தனும் ஒன்றேயாகிவிடுகிறார்கள். பித்தனே இறைவன். இறைவனே பித்தன். பித்தன் தன் பித்தை இறைவனிடம் வைத்து விட்டான், இறைவனோ பக்தனை தன்மயமாக்குவதென்று, ஒரே பித்துக் கொண்டவனான தால் தன் பக்தனாகிய பித்தனை பித்துப் பிடித்தவனாக்கி விடுகிறான். மனமே! என்ன அதிசயம் பார்த்தாயா? நீ ஒரு நிமிஷமும்

சோம்பேறியாய் சும்மா இராதே. இறைவனிடமே பற்றை வைத்து விடு. அந்தப் பித்து ஒன்றே உன்னிடம் இருக்கட்டும். அது ஒன்றிருந்தால் மற்ற பற்றுதல்கள் எல்லாம் உன்னை விட்டு விடும்.இறைவனிடம் பித்தேறி உன்னை நீ காப்பாற்றிக் கொள், ஜாக்ரதை.

18, ஏ மனமே! உன்னிடமிருக்கும் அன்பு முழுவதையும் அன்னையிடம் வைத்துவிடு, எதையும் அன்னையிடமிருந்து எதிர்பாராதே; ஒன்றையும் நாடி தேவியிடம் செல்லாதே, அன்னையின் உருவம் அன்பேயாகும், அன்பின் வடிவமாக அன்னையை நினைத்துவழிபடுக; அன்பில்லாதவன் அம்பிகையை வழிபடமுடியாது, பலகோடி ரூபாய்களை செலவு செய்து வழிபட்டாலும் அன்பில்லையெனில் அனைத்தும் பாழாகிவிடும். அம்மை, உன்னிடமிருக்கும் அன்பை கேட்கிறாள், அதைக் கொடுக்காது, மற்றவைகளைக் கொடுத்து நீ ஏமாற்றப் பார்க்கிறாய், மனமே! அன்னையை நீ ஏமாற்ற முடியாது, ஏமாற்றும் சிந்தனைகளையெலாம் விட்டுவிடு, ஆதிபராசக்தி அன்புமயமான அருள் கடலாகும், அவளுடைய மாபெரும் சக்திக்கு முன் உன்னுடைய ஏமாற்றும் சிந்தனைகள் எல்லாம் நில்லாது, சூரியனைக் கண்ட இருள் ஓடி ஒளிவதைப்போல். அன்னையின் அபார சக்திக்குள் உன்னுடைய மாயா ஜால வித்தை,அல்லது வேறு எதுதான் நிற்கமுடியும்? மனமே! உலகை சிருஷ்டித்த (பெற்றெடுத்துள்ள) அன்னையை நீ ஏமாற்ற நினைப்பதானது உன்னுடைய மூடத்தனத்தை நீயே வெளிக் காட்டிக் கொள்வதாகும், அறிவு கெட்டவனே! உன் அறிவிற்கும், அறிவான தெய்வத்தை வேண்டிக்கொள், மேலும் மன்றாடி வேண்டிக் கொள், அன்னை மன்னித்து விடுவாள், அவள் அன்பே உருவானவள், உன் அசட்டுத் தனத்தைப் போக்கி, உன்னை ரக்ஷிப்பாள், தம்பி, உலகில் நீ எவரையும் ஏமாற்ற முடியாது. எல்லோருடைய அறிவிற்கும் அறிவானவள் அன்னை, அன்னை

இல்லாத இடமேயில்லை. அவனே அனைத்தும் ஆவான், அவனை நீ ஏமாற்ற நினைப்பது உன்னை நீயே ஏமாற்றிக் கொள்வதாகும். மனமே! உன்னுடைய வேலையெல்லாம், சிந்தனைகளெல்லாம், பராசக்தியை உண்மையாக நம்பி அவளிடம் அன்பை செலுத்துவதில் முனையட்டும். அதுவே உன் குறிக்கோளாகட்டும் உலகில் இனி நீ யாரையுமே ஏமாற்ற முடியாதென்பதை மறந்து விடாதே.

19. ஏ மனமே! நடமாடும் நரகக்குழியாகிய இந்த உடலை பற்றியே இடைவிடாது, ஓய்வொழிச்சலில்லாமல், சிந்தித்துக் கொண்டிருக்கின்றாயே. இது உனக்கு பெருந்தொல்லையாக துக்கமாகப் படவில்லையா? மிகக் கேவலமானதும், மல, மூத்திரத்தை உண்டு பண்ணி, அதைச் சுமக்கும் இந்த உடற் கூட்டின் மீது செலுத்தும் மனத்தை (பற்றை) கடவுளிடம் கடுகளவு நேரம் நிறுத்திவைப்பாயேயாகில், இந்த உலகம் முழுவதுமே உன் வசமாகத் தொடங்கிவிடுமே. கடவுளின் மீது அன்பெனும் பற்றுதல் கடுகளவு ஏற்பட்டதற்கு இவ்வுலகமே வசமாகுமென்றால், கடவுளை நீ முழுமனதுடன் நம்பி சிக்கெனப் பற்றிக் கொண்டு, அன்பு செலுத்தினால், ஏற்படும் லாபத்தை ஆயிரம் நாவுபடைத்த ஆதிசேஷனாலும் சொல்ல முடியுமா, சொல்? மனமே! அநித்யமானதும், அழியக் கூடியதும், துர்க்கந்தத்தை உண்டாக்கி, அதை சுமந்து திரியும் இந்த மலக் கூட்டினிடம் இருக்கும் பற்றுதலை கடவுளிடம் வைத்துவிடு. கடவுளிடம் உண்மையான பற்றுதல் வைத்தவன் வானோரால் புகழப்படுவன். அவனுக்கு அனைத்தும் கிட்டும். எல்லாம்வல்ல கடவுளின் அருள் கிட்டப்பட்டவனுக்கு எதுதான் கிட்டாது. கடவுளைப் பற்றிக்கொள். மற்ற பற்றுதல்கள் அனைத்தும் உன்னை விட்டு ஓடும். நீ கவலையற்றவனாகிவிடுவாய். உனக்கு மற்ற பயமிராது. நீ முக்தனாகி விடுவாய். முழுமனதோடு இறைவனைப் பற்றிக் கொள். மறந்து விடாதே.

---

*அதிஷ்டானம், புதுக்கோட்டை.*

20. ஏ மனமே! உன்னிடம் உண்மையான மெய்யன்பு இருக்க வேண்டுமானால், நீ முதலில் பற்றிக் கொண்டிருக்கும் பற்றுதல்கள் அனைத்தையும் தியாகம் செய்தாக வேண்டும். தியாகம் ஒன்றினால்தான் எல்லையற்ற அன்பை நீ பெற முடியும். அன்பொன்றுதான் நிரந்தரமானது. மற்றவைகள் மறைந்துப் போகக் கூடியவைகள் என்பதை மறந்துவிடாதே. நீ அனைத்தையும் மறந்து அன்பு மயமான கடவுளை அன்பினால் போற்றிப் பணிவாயாக. அன்பை வழிபட்டு, அன்பு மயமானவர்களுக்கு எல்லா துக்கங்களும் பறந்து போய் விடும். மனமே! நீ அன்பாகிய இன்ப சாகரத்தில் குதித்து. ஆழ்ந்து விடு. அங்கு அன்பு மிக்க ஆனந்தத்தைப் பருகுவாய். உன்னைத் தவிர வேறு ஒருவரையும் அங்கு காண முடியாது. நீ ஒருவனாகவே இருப்பாய். அநித்யமான உலகம் மறைந்தே போகும். உன்னை மட்டுமே அங்கு காண்பாய். நீ எல்லை யற்ற நிரந்தரமான அன்பு மயமாகி விடுவாய். அன்பு மயமான உனக்கு அன்னியமான மற்றெல்லாம் மறைந்து விடும்.

21. ஏ மனமே! இறைவனுக்குப் பல ஆயிர நாமாக்கள் இருப்பினும், மிகமிகச் சிறந்ததும், அபார சக்தி வாய்ந்ததுமான நாமம் சத்தியமாகும். சத்தியமான இறைவனை நீ சத்தியமாக வழிபடுவாயானால், உன் அகத்தில் மெய்யுணர்வில் சத்திய ஒளி பிரகாசிக்கும். சத்யம் ஞானமயமானது. எங்கும் நிறைந்தது. அதைப் ப்ரும்மம், என வேதங்கள் கூறுகின்றது. நீ ப்ரும் மானந்த ஸாகரத்தில் மூழ்கிவிடுவாயேல் பந்தமற்றவனாகத் திரும்பி வருவாய். மனமே! சத்தியத்தை புஸ்தகங்களில் நீ தேடினால், அது உனக்கு ஒருக்காலும் கிட்டாது. சத்தியத்தை உன்னகத்துள் தேடுக. சத்தியத்தைத் தன்னுள் காணவே உனக்கு பகுத்தறிவை இறைவன் தந்துள்ளான். உன் அறிவிற்கும், அறிவாக சத்தியம் இருந்து வருகின்றது.

சத்தியத்தை சரணடைந்து விடு. சத்தியத்தை சத்தியமாக நம்பு. நீ நித்யனாகி விடுவாய்.

22. ஏ மனமே! உண்மையாக உன்னை நீ அறிந்து கொண்டுவிட்டால், எதனாலும் உன் மனம் சலனமடைய மாட்டாது. தன்னைத்தானே அறிந்தவன் தன்னிடமனைத்தையும், அனைத்திலும் தன்னையும், காண்பான். இத்தகைய ஜீவன் முக்தனால்தான் உலகிற்கு நன்மை உண்டு. ஜீவன் முக்தன் எல்லாவற்றுள்ளும் தன்னையே (இறைவனையே) கண்டு களிப்பான். இத்தகைய மேலான இன்பத்தைக் காண்பவனுள் இறைவன் இடைவிடாமல் உறைவன். எல்லாம்வல்ல இறைவனின் இருப்பிடமாக ஜீவன் முக்தன் ப்ரகாசிப்பன். இவனே சுதந்திர புருஷன், விடுதலை பெற்ற வீரனாவான். அச்சமில்லாதவன் இவனுக்கு மனம் சலிக்காது. இவன் பிறவிப் பெருங்கடலைக் கடந்தவனாவான். மனமே! விடுதலை பெற்றுய்வதே உன் வாழ்க்கையின் லக்ஷியமாகட்டும். நீ மனிதனாகப் பிறந்ததினால், அடையும் பெருமை அனைத்திலும் நீ இறைவனையே பார்க்க வேண்டும். நீ அன்னையை வழிபடுவது உண்மையானால், பொது நோக்கைப் பெற்றுய்வாயாக. பொது நோக்குள்ள ஞானி நடமாடும் கடவுளாவான். பேத உணர்வு, மஹான்களாகிய ஞானிகளுக்கு உண்டாகாது. நீ காணும் அனைத்திலும் கடவுளைக் காண வேண்டுமானால், முதலில் உனக்குச் சித்த சுத்தியாகவேண்டும். இறைவனான உன் ஆத்மாவை அறிய உனக்குத் தீவிர ஆசையும், பெரு முயற்சியும் இருத்தல் வேண்டும். உனக்கு வெற்றிகிட்ட வேண்டுமானால், நீ எவ்வளவு தீவிர முயற்சி செய்தாலும் நல்லதாகும். உன்னை நீ அறிவதென்பது அவ்வளவு சுலபமல்ல. விளையாட்டாகக் கருதி விடாதே. ஒரு நாளில் ஆகக் கூடிய காரியமன்று. நிதானம் தவறாமல் இடைவிடாமல்

தியானம் செய்து வருவாயாக. மற்றப் பற்றுகளை விட்டு விட்டு உன்னை அறிய வேண்டுமென்று தீவிரமான ஆசை ஒன்று மாத்திரம் தான் உனக்குப் பெருக்கெடுக்க வேண்டும். மற்ற ஆசைகள் இருப்பின் ஒரு நாளும் உன்னை நீ அறிந்துய்ய முடியாது. ஆசைகள் மேலிட்டவனுக்கே மனச்சலனம் அதிகமாக இருக்கும். அவன் மனம் காற்றில் இருந்துவரும் தீபம் போல் அலைமோதிக் கொண்டிருக்கும். பற்றுகளை விட்டொழிப் பாயாகுக. உன்னை அறிந்தால் நீ அனைத்திலும் இறைவனைக் காணலாம்.

23. ஏ மனமே! அன்பு கடலைப் போன்றதாகு மென்பதை மறந்து விடாதே. சிலர் இன்று அன்பு செலுத்துவார்கள். மறுகணம் அம்பு தைப்பதைப் போல சுடச்சுட நாவினால் சுட்டுத் தள்ளுவார்கள். ஒருவனிடம் உண்மையான மெய்யன்பு உதயமாகி விட்டால், அவன் அன்புக் கடலோடு இரண்டறக் கலந்து விடுவான். பிறகு அவனிடம் அன்பு ஒரு நாளும் குறையாது. கடல் நீரை எவ்வளவுதான் எடுத்தாலும் வற்றிவிடுமா, சொல்? கடல்போல் அன்புமயமானவனிடமிருந்து அன்பு வெளிச் சென்றால், அதனால் அன்பு குறைந்தாவிடும்? பாமரர்கள் தங்கள் சுய நலத்தின் பொருட்டு அன்பு செலுத்துவதாக பாசாங்கு செய்து, தங்கள் காரியங்கள் முடிந்தவுடன் நன்றி மறந்து, பதிதனைப்போல், அன்பில்லாமல் கெட்டு விடுகின்றார்கள். மஹான்களிடமுள்ள மெய்யன்போ கைமாறு கருதாததாகும். ஒன்றையும் பிறரிடமிருந்து கேட்காது, பரம தரித்திரனிடமும் மெய்யன்பைக் கண்டு, அன்பு செலுத்து. உன்னிடம் எல்லையற்ற கடல்போல் அன்பிருப்பின் உலகிலுள்ள கேடுகளை மறந்து அவனிடத்திலும், அன்பையே கண்டு மெய்யன்பைப் பொழிவாய் நீ. மனமே! நீ மெய்யன்புடைய வனாகிவிடு. உன்னிடம் நன்றி கெட்ட பொய்யன்பிற்கு இடம் தராதே. போலி அன்பு உலகைக் கெடுத்துவிடும். அன்பிருப்

பவன் போல் நடிப்பவன் கேட்டையே தேடிக் கொள்பவனுவான் ஜாக்ரதை !

24. ஏ மனமே!உன்னிடம் உண்மையான அன்பிருப்பின் உன் கையில் மோக்ஷமிருப்பதாக நம்பி விடு. அன்பிலாத வனுக்கு முக்தி ஒரு நாளும் கிட்டாது. உன்னை சிருஷ்டித்த அன்னை உன்னிடமிருந்து அன்பு ஒன்றையே கேட்கிருள். அன்னைக்கு உன்னிடம் கொடுக்க வேறு என்ன இருக்கிறது? சொல். உனக்காக அவள் பட்டுள்ள கஷ்டத்திற்கு என்ன கைமாறு செய்யமுடியும். மனமே, உன்னிடமுள்ள மெய் யன்பையாவது உண்மையாக அன்னைக்கு செலுத்துவாயாக. அவள் எதிர்பார்ப்பது அன்பு ஒன்றைத்தான். நீ நன்றி கெட்டவனுகிவிடாதே. அன்பே சிவம். அன்பே கடவுள். அன்பே ப்ரும்மம். அன்பே அனைத்தும். உலகில் எல்லோரி டத்தும் அன்பையே எதிர்பார்க்கிருர்கள். ஒருவருக்கொருவர் அன்பை செலுத்தவே முயற்சிக்கிருர்கள். அன்பை செலுத்தவே மனிதனுகவே பிறந்துள்ளார்கள். அன்பில்லாதவன் நடமாடும் பிணத்திற்கு சமமாவான். அன்பில்லாதவனை உயிருள்ள பிணமாகவே நம்பிவிடவும். அன்பில்லாதவர்களை உலகில் பார்க்கமுடியாது. மனமே! அன்பே கடவுள் என்பதை மறந்து விடலாகாது. கடவுள் அங்கிங்கெனுதபடி எங்கும் நிறைந்த வராவர். கடவுளிடம் அன்பு செலுத்தி, அன்புக் கடலில் உன்னைக் கரைத்துக் கொண்டுவிடு.

25. ஏ மனமே! நீ உன்னை மறந்து இவ்வுலக போகங் களில் சிக்கி மேலும் துக்கத்தை அனுபவித்து வருகிருயே? என்று நீ தன்னைத்தான் அறிந்துகொண்டு ப்ரும்மானந்தத்தில் நிலை பெற்றிருக்கப் போகிருய்? நீ தேகத்தையே ஆத்மாவென்று அதை தினம் குளிப்பாட்டித்துடைத்து,நல்ல வஸ்திரங்களால் அலங்கரித்துக் கொள்வதோடல்லாமல் உன் தேகத்தின்

அழகை கண்ணாடியில் பார்ப்பதையே வேலையாகவும் பழகி விடுகிறாயே? உன்னழகை பிறர் பார்க்க வேண்டுமென்ற அவா தானே உன்னை இப்படிச் செய்யத் தூண்டுகிறது. முட்டாளே! உன்னுடைய நினைவைப் போலவே உலகிலுள்ள ஒவ்வொருவரும் தங்களைப் பிறர் பார்க்க வேண்டுமென்பதற்காக தங்களைத் தாங்களே அலங்காரம் செய்து கொண்டு தலை நிமிர்ந்தபடியே அஹங்காரத்துடன் செல்வது உனக்குத் தெரியாதோ? அவனவன் தன்னையே அனைவரும் காணவேண்டுமென அகந்தையுடன் வணங்காமுடிகளாக தெருவில் சென்றால் யார் யாரைப் பார்ப்பார்கள்? அறிவு கெட்ட நாயே, அஹங்காரிகள் ஒருவரையொருவர் பார்க்க வெட்கப்படுகிறார்கள். எல்லோரும் தங்களைப் பார்க்க வேண்டுமென்ற திமிர்பிடித்து, இந்த உயிருள்ள பிணமாகிய உடலை அலங்கரித்துக் கொண்டு, உடலே அனைத்துமென நம்பி, உடலை வளர்க்கிறார்கள் அஹங்காரிகள். இந்த உடல் அழியக் கூடிய உயிருள்ள பிணம் என்பதை மறந்து போய் விட்டார்கள். மனமே! இந்த உடல் நடமாடுவதற்கும், நீ பார்ப்பதற்கும், பேசுவதற்கும், இவ்வுலக இன்பங்களை அனுபவிப்பதற்கும், யார் காரணமென்பதை நீ உனக்குள் சற்று யோஜித்துப் பார். அனைத்தும் உனக்குப் புரிந்துவிடும். மூடனே! உன் உடலில் ஜீவனிருப்பதால் தானே நீ இந்த உடலைப் போற்றி வளர்க்கின்றாய். உன்னுடலிலிருந்து ஜீவன் பிரிந்து விட்டால், நீ எப்படி இந்த உடலைக் கொண்டு உலக இன்பங்களை அனுபவிக்க முடியும். உன் உடலையே நீ மெச்சிப் பேசுகின்றாயே; துர்நாற்றமுள்ள இந்த உடலில் உன்னை காப்பாற்றக் கங்கணம் கட்டிக் கொண்டு குடியிருக்கும் ஜீவாத்மாவாகிய கடவுளை நீ, என்று அறிந்து போற்றப் போகிறாய்? மனமே! உனக்கு ஒரு வார்த்தை சொல்கிறேன், கேள். இந்த வுடல் அழிந்து விடுமுன் உனக்குள்ளிருக்கும் ஜீவாத்மாவை நீ அறிந்து கொண்டுவிடு. உலக இன்பங்களனைத்தும் அநித்யமானது. நம்பிவிடு.

சத்தியமாகச் சொல்கிறேன் கேள். நீ நலம்டையவே சொல்கிறேன் கேள். மறவாதே. உன் உடலிடம் வைத்த பற்றை உன் ஆத்மாவிடம் வைப்பாயாகுக, மறவாதே.

26. ஏ மனமே! அரைக் கணம் கூட சும்மா இருக்க மாட்டேன் என்கிருயே. ஏன் உனக்கு இந்த துன்பம். துன்பத்தை ஒழிக்கத்தானே இறைவன் இந்த உடம்பை உனக்குத் தந்தான், இறைவன் இந்த உடலை உனக்குக் கொடுத்ததோடல்லாமல். அவன் உன் அறிவிற்கும், அறிவு ஆகவும் இருந்து வருவதையும் நீ மறந்துவிட்டாய். நன்றி கெட்ட மனமே! நான் சொல்வதை மேலும் மறந்து விடாதே. சும்மா இருப்பாயேல் உனக்கு சுகம் கிட்டும் என்று மஹான்கள் கூறியதை நம்பிவிடு. பரபரப்போடும், சுறுசுறுப்போடும் நீ வெளியுலகில் திரிந்தால் போதாது. உன் பரபரப்பையும், சுறுசுறுப்பையும், உன் உள்ளத்துள் செலுத்து. உன் மனம் அபாரமான கற்பனைகளை கற்பிப்பதில் முதல் தரமாக ஈடுபட்டு உள்ளதை நிறுத்தச்சொல். உன் மனதிற்கு நீ ஒரு ஆணை பிறப்பித்துவிடு. அதாவது இனி கற்பனை செய்யாதே. செய்வாயேல் உன்னை ஒழித்து விடுவேன் ஜாக்ரதை, என்று உறுதியாக ஆக்ஞையிட்டு விடு. உன் ஆக்ஞையை மனம் மீறுமாளுல் நீ உயிருடன் இருந்து என்ன பிரயோஜனம். மனத்திற்கு எஜமானனுகிய உன் மானம் போய்விடும் என்பதை மறந்து விடாதே. நல்லறிவே! நீ அடிமையாகவே இருக்கப் போகின்ருயா? அல்லது நீ எஜமானன் என்பதை மறவாமலிருக்கப் போகிருயா? சொல். நீ எஜமானன் என்ருல் நீ இட்ட கட்டளைப்படி உன்மனம் இனிமேல் சும்மா இருக்க வேண்டும். மனம் மேலும் கற்பனையை செய்யுமாளுல் நீ மனத்தின் அடிமையாவாய் என்பதை மறந்து விடாதே. எஜமானன் தன் அடிமையிடம் தான் அடிமையாகிவிட்டால், எஜமானனின் புத்திசாலித்தனத்தை என்ன சொல்லி

அழைப்பது? மனமே! உலகில் பலகோடிப் பேர்களில் தன் மனத்தைத் தான் அடக்கி அடிமை கொண்டவர்கள் ஒருவர் கிடைப்பது கூட துர்லபமாகுமென்ற பகவானின் வாக்குப் பொய்யாகுமென்பதை நீ நிரூபிக்கிறாய் போலும். பகவானே உன்னைக் காப்பாற்ற உன் அறிவிற்கும், அறிவாயிருந்தும் நீ அறிவிலியாக இருப்பதை வெட்கக்கேடான விஷயமாகும். மனம் போன வழியில் நீ செல்லாதே, உன் மனத்தை நீ அடக்கி ஆள முடியாவிட்டால் உலகில் நீ என்ன காரியங்கள் சாதிக்க முடியும். பிறரை அடக்குவதில் நீ தீரனாய் இருப்பதும் வீரன் என்று மதிகெட்ட மக்கள் உன்னைப் புகழ்வதாலும், என்ன பிரயோஜனம்? உன் மனதை நீ அடக்காதவரையில் நீ ஒரு முட்டாள், சோம்பேறி, அறிவுகெட்டவன், அடிமை, கோழை என்று உன் அந்தராத்மா இடித்துரைப்பது உன் காதுகளில் கேட்கவில்லையா? சொல். மதிகெட்டவனே, பிறரை அடக்கி ஆள்வதில் உனக்கென்ன கவலை. பிறரை நினைப்பதே பெரிய தவறாகும். அவர்களை அடக்கியாள வேறு நீ முந்துகிறாய். என்ன உன் மதியீனம். உன் மனதை நீ அடக்காதவரை உனக்கு சாந்தி கிட்டாது. துக்கத்தையே சதா விரும்புவது, துக்கத்தை இடைவிடாமல் அனுபவிப்பதே மனத்தின் தீவிர வேலையாகுமென்பதை மறந்து விடாதே. பேய் மனத்தோடு உனக்கு உறவு வேண்டாம், மனத்தைச் சும்மா இருக்கச் செய்வதே உனது வேலையாகும். வேறு வேலைகள் உன்னைப் பாழ் நரகத்தில் செலுத்தும். கண்டவித மானதும், பிறப்பை உண்டு பண்ணுவதுமான வேலைகளை நீ ஒரு நிமிஷமும் செய்யாதே. உன்னுடைய வேலை சும்மா இருப்பதாகும். சும்மா இருந்து சுகமடைவாயாகுக. சும்மா இருப்பதாக நினைத்து தூங்கி விடாதே. விழிப்புடன் சும்மா இருப்பதைக் கவனித்து வா, ஜாக்ரதை!

27. ஏ மனமே! உனக்குண்டாகும் துக்கங்களுக்கெலாம் காரணமென்னவென்று நீ அறிந்தாயோ? உனக்கு

நல்லறிவைக் கடவுள் தந்துள்ளார். விவேகமோ நிரம்பி இருக்கின்றது. நீயோ பிறருக்கு உபதேசம் செய்வதில் தீரனாகவும், வீரனாகவும், இருக்கின்றாய். பிரபஞ்ச விவகாரங்களையே நீ பேசி வருகிறாய். உன் புகழோ எங்கும் பேசப் படுகிறது. நீயோ விஷயங்களைப் பற்றிய சிந்தனையுள்ளவனாகவே இருக்கின்றாய். உன் மனத்தின் மாயா காரியத்தை நம்பி மனம்போன போக்கெல்லாம் போய்க்கொண்டிருக்கிறாய். மனமே!என்று நீ விஷய சிந்தனைகளையெல்லாம் விட்டொழித்து உன்னை நீ, நான் யார் என விஜாரித்துப் பார்த்து, ஆன்ம ஸாக்ஷாத் காரத்தை அடைந்துய்யப் போகின்றாய்? என்று உன்னிடமுள்ள அகங்காரம் ஒழியப் போகிறது. நீ அகங்காரத்தைவைத்துக் கொண்டு பிறருக்கு உபன்யாஸம் வேறு செய்கிறாயே?உனக்கிது நியாயமாசொல். நீசொல்கிறபடி பிறர் கேட்க வேண்டுமென்ற துடிப்பே உன்னிடம் நிறைந்திருக்கின்றது. நீ சொல்வதெலாம் உன்சொந்தத்திற்கு உபயோகப் படாதோ சொல்; மடையனாக இருக்கின்றாயே. உன் பேச்சை எவன்கேட்பான் அறிவுகெட்டவனே;உன்னை நீ முதலில் திருத்திக் கொள். நீ பிறருக்குச் செய்யும்உபதேசம் உனக்குமுதலில் பயன் படும்படி நீ செய்து கொள். உன்னிடமுள்ள மூர்க்கத்தனமான அகங்காரத்தை முதலில் விரட்டு. நீ அகங்காரத்தோடு எது சொன்னாலும் அனைத்தும் வீணாகுமென்பதை மறவாதே. பெயருக்கும்,புகழுக்கும் ஆசைப்பட்டுதிண்டாடியதுபோதாதா? இன்னுமா உனக்கு விவேகமில்லை.பிறர் விவேகி என்று உன்னை அழைக்கிறார்களே; என்ன முட்டாள்தனம். பாமர ஜனங்களுக்கு உன் அவிவேகம் தெரியவில்லை. நீ சொல்வதை அவர்கள் முழுதும் நம்பும் படியாக செய்யக் கூடிய திறமை சாலியல்லவா நீ ? மதி கெட்டவனே, உனக்கொரு நல்ல வார்த்தை சொல்கிறேன் கேள். நீ நல்லவனாகில் உனக்கு ஏற்படும் துக்கங்கள் எல்லாம் தூர விலகியோடும். மனமே ! முதலில் உன்னை நீ திருத்திக்கொள். உன்னிடமுள்ள அகங்

காரத்தை நீயே சோதித்துப்பார்த்துக்கொள். பிறர் அறிந்தால் உன்னை தூற்றுவார்கள். உலகம் தூற்றும் முன் உன்னை நீ அறிந்துகொள்; நல்லவனுவாய்.

28. ஏ மனமே! நீ செய்வதெலாம், சொல்வதெலாம், உன் அந்தராத்மா சம்மதிக்கின்றதா சொல்? மனசாட்சிக்கு விரோதமானதை நீ செய்து வருவது உனக்கு நியாயம்தானு? உன்னுள் மனசாட்சியாயிருப்பது யாரென்று நினைத்தாய். மூடமே, அதுதான் கடவுள். கடவுளுக்காக நீ எல்லாம் செய்து வருவதாகச் சொல்கிருயே? அந்தக் கடவுள்தான் உன் அந்தராத்மாவாக உன்னுளிருந்து கொண்டு, நீ செய்வதை எல்லாம் இடைவிடாமல் பார்த்துக் கொண்டு வருகிருர். இது தெரியாதா உனக்கு? கடவுள் வெளியே கோவிலில் இருக்கின்ருர். கோயில் இருக்கின்றது. இது சமயம் கோயில் பலம் பொருந்திய மிகப்பெரிய கதவுகளால் தாளிட்டுப் பூட்டப் பட்டுள்ளது. கடவுள் வெளிவர முடியாது இருப்பதால், நீ செய்வதைக் கடவுளால் பார்க்க முடியாது என்று நினைத்துத் தானே நீ உன் மனம் நினைக்கும் கெட்ட காரியங்களில் ஈடுபட்டாய். கடவுள் உன்னுள் இருப்பதை நீ அறியாயோ. மதி கெட்ட மூடமே! கடவுள் உன் அகத்துள் அந்தராத்மாவாக இருந்து கொண்டு நீ செய்யும் செய்கைகள் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பதை நீ இனி அரை நிமிஷமும் மறந்து விடாதே. நீ செய்வது ஒன்றும் ஒருவருக்கும் தெரியாதென்று நினைத்து விட்டாயல்லவா? உலகிற்கே அரசனுன இறைவன் ஒருவன் மட்டும் நீ செய்யும் தவறை அறிந்தால் போதாதா. உனக்குத் தண்டனை கொடுப்பவன் யாரென்று நீ நினைத்தாய். பாபிகளை தண்டிப்பவன் அரசன் என்பதை மறந்து விடாதே. எல்லாம் வல்ல கடவுளாகிய சக்ரவர்த்தியின் ப்ரஜைகளில் நீயும் ஒருவன். நீ செய்யும் தவற்றை அவர் அறியார் என்ற எண்ணத்தை உடன் விட்டுவிடு. எல்லாவற்றையும்

அறிந்தும் அறியாதவாறு இறைவன் சாட்சியாக உன் உள்ளத்தில் இருந்து வருகிறான். இறைவனின் கோபத்திற்கு நீ ஆளாகி விடாதே. உடனடியாக நீ இறைவனின் அருளுக்குப் பாத்திரமாகி விடுவாயாக. இறைவன் மிகவும் கருணையுள்ளவன். ஒரு தரம் அவன் நாமத்தை உள்ள முருகச் சொன்னால் போதும். அவன் தயாளன். கிருபைக் கடல். பாபிகளை ரக்ஷிப்பவன். உன் பாபத்தையெல்லாம் துடைத்துக் காத்து ரக்ஷித்து விடுவான். நம்பு. நம்பு. மனம் போன போக்கில் போகாதே. உனக்குள் எல்லாம் வல்ல இறைவன் மனசாக்ஷியாகயிருந்து. நீ நினைக்கும் அனைத்தையும் அறிந்தபடி இருந்து வருகிறான். கருணைக் கடலாகிய இறைவன் எங்கேயோ இருப்பதாக நினைத்து ஏமாந்து விடாதே. அடாத காரியங்களை விட்டொழித்து, மனசாக்ஷிக்கு விரோதமாகச் செய்யாதே. இறைவனை நம்பு. அவன் நாமத்தைச் சொல் மறவாதே.

29. ஏ மனமே! பற்றற்றவனாகிவிட்டால் உன்னை ஜனன மரணமும், மற்றுமுள்ள உபாதிகளும் என்ன செய்துவிடும்? ஸ்திரமான உன் ஆத்ம ஸ்வரூபத்தில் உன்னைக் கரைத்து விடுவாயேல் அனைத்தும் உன் ஆத்ம ஸ்வரூபம் ஆகிவிடும். பிறகு உனக்கு அன்னியமானவைகள் ஒருக்காலும் இராது. அநித்யங்களான அனைத்தும் ஒழிந்து போகும். ஸாஸ்வதமான ப்ரும்ம ஸ்வரூபமான உனக்கு பயமிராது. கவலையிராது. உலகமனைத்தும் நீ பார்த்துக் கொண்டிருப்பினும் அவற்றின் சம்பந்தம் உனக்கிராது. அனைத்திற்கும் நீ சாக்ஷியாகவே இருப்பாய். ஸர்வசங்கத்தோடு நீ இருப்பினும் ஸர்வசங்க பரித் தியாகியாகவே நீயிருப்பாய். உன்னைப் பற்றுதல்கள் (மாயைகள்) ஒன்றும் செய்து விடமுடியாது. தன் நிழலைத் திரும்பி பார்த்தவுடன் நிழல் மறைவதைப் போல அனைத்தும் உன் ஆத்ம பலத்தால் மறைந்துபோய் அங்கு நீ மாத்திரம் ஸ்வயம் ப்ரகாசமாக இருந்து வருவாய். இரண்டாவது

வஸ்துவின் தோற்றமுண்டாவதில்லை. த்வைத பாவம் அறவே போய்விடும். அது ஸமயம் நானே ப்ரும்மம் என்ற அறிவு ஏற்பட்டுவிடும். உனக்கு நீ ப்ரம்மமே ஆகிவிடுவாய். மனமே! நீ ப்ரும்மமாவதற்கு முதலில் பற்றற்றவனாகி விடுவாயாக! பற்றுதல் பந்தத்தை உண்டு பண்ணும். பற்றற்ற நிலை பந்தங்களை அறவே நிவர்த்தி செய்து விடுகின்றது. பற்றற்றவனை உபாதிகளொன்றும் செய்யாது.அவன் ஜீவன் முக்தனாகி விடுகிறான்.

30. ஏ மனமே! நீ உன் ஆன்மாவை என்று அறிகிறாயோ அன்றுதான் உனக்கு விடுதலை ஏற்படும். உன் ஆன்மாவை நீ அறியாமல் சுதந்தரம் பெற்று விட்டதாக நினைத்து ஏமாறாதே. உன்னிடம் சங்கற்பங்கள் மலைபோல் இருந்து வரும் போது உனக்கு எப்படி சுதந்திரம், விடுதலை கிட்டும். உன்னிடம் சங்கற்பம் இருக்கும் வரை நீ அடிமையாவாய். நீ சுதந்தரமடைய வேண்டுமானால் உடன் சங்கற்பங்களை விட்டொழித்து, நான் சுதந்தரமானவன். நான் ப்ரும்மமாவேன். எனக்கழிவில்லை. நான் சிரஞ்சீவி, எனக்குப் பிறப்போ இறப்போ என்றுமே கிடையாது. நான் நித்திய முக்தன். ஜீவன் முக்தன் நானே, நான் என்றும் நானாகவே தானிருக்கிறேன், நான் வேறொன்றாக இருக்கமுடியாது. நான் இல்லாத இடமில்லை. உலகமெங்கும் நானே இருக்கின்றேன். நானில்லாவிட்டால் ஒன்றுமியங்காது. நானே உலகைப் படைத்தவன். நான் நினைத்தால் இவ்வுலகம் கண் இமைப் பதற்குள் மறைந்து விடும். மனமே! உலகிலுள்ள ஜீவன்களனைத்தும் யாரென்று நினைத்தாய் நீ. ஒவ்வொரு ஜீவாத்மாவும் நானேதான். நான் ஜீவனாக இருக்கின்றேன். ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறு இல்லை. இரண்டு மொன்றேதான் நம்பு. உன்னைத் தேடுவதில் உனக்கென்ன சிரமமிருக்கிறது, சொல். உலகிலுள்ள அனைவரிடத்தும் நீ

தானே இருக்கின்றாய். நீ இல்லாத இடம் எங்கே உளது? உலகில் நீ ஒருவன்தானே இருக்கின்றாய். உலகில் ஒருவனாயிருக்கும் உன்னை நீ அறிவதில் கஷ்டமென்பது உனக்கு வெட்கமாக இல்லையா, சொல், மனமே. ஒன்றே உலகிலுள்ளது. அது நீதான். அதைத்தான் உனதாத்மா என்கிறது சாஸ்திரங்கள். மனமே! கோழையாகயிராதே. உன்னையறிவதில் கஷ்டமிருப்பதாக நினைத்து தப்பியோட முயலாதே. வெற்றியும், தோல்வியும், மறந்து விடு. பற்றுதல்களை அறவே விட்டு தியாக உள்ளத்துடன் உன்னை நீ அறிய ஓயாமல் பாடுபடுவாயாக. நீ வெற்றியடைந்து விடுவாய். வெற்றி உன் கையிலேயே இருக்கிறது. நீ வெற்றி அடைந்துய்யவே பிறந்துள்ளாய். சுதந்தரமாயிருப்பாய், நம்பு.

31. ஏ மனமே! மோக்ஷத்தையடைய முதலிலுனக்கு வைராக்யம் வேண்டும். வைராக்யம் எவனுக்கிருக்கின்றதோ அவனே மோக்ஷமடையத் தகுதியுள்ளவனாவான், என்பதை நீ மறந்து விடாதே. விஷயங்களில் (உலக இன்பங்களில்) ஆசையுள்ளவனுக்கும், மோக்ஷத்திற்கும் வெகு தூரமாகும். பற்றுள்ளவனுக்கு மோக்ஷம் கிட்டாது. ஆத்ம ஞானமும் பக்தியுமுள்ள உனக்கு மிகவும் அவசியமாகும். பற்றற்றவனுக்கே ஆத்மஞானமுண்டாகும். மனமே! உன் ஆத்மாவை மறைப்பது அகந்தையும், மமதையும் ஆகும். அழியக்கூடிய உன்னுடம்பில் இருக்கும் அபிமானத்துக்கு அகந்தை என்றும்; மனைவி மக்கள், மற்றுமுடலுக்கு வேண்டிய விஷயங்களிடம் ஏற்படும் அபிமானத்திற்கு மமதையென்றும், பெயராகும். அகந்தையும், மமதையுமுனக்கு இருக்கும் வரை வைராக்யம் உண்டாகாது. மூடனே! இந்த உடலையே நான் என்று அகந்தையோடு காண்கின்றாயே; உன்னுடல் உனக்கு எப்படிக் கிடைத்தது என்ற வரலாற்றை கவனித்துப்பார். அருவறுக்கத்தக்க பல அசுத்தமான, கபம், மூத்திரம், மலம்

முதலியவைகள் நிறைந்த கர்பத்தில் உன் ஜீவன் நுழைந்த விந்தையை கவனித்தாயா? தாயின் கர்ப்பத்திலிருந்து உன்னுடைய ஜீவன் வெளிப்படும் போது உண்டாகும் கொடிய துன்பங்களையும், ஆபத்துக்களையும் நினைத்துப்பார். சொல்ல முடியாத துன்பங்களுக்கு உள்ளாகி வந்துள்ள உன்னுடலையும், நீ வந்த வரவையும் விஜாரித்துப்பார். அப்பொழுது தான் உன் தேகத்தினபிமானம் உனக் கொழியும். தேகத்தையே நான் என்கின்ருயே, உன் தேகத்தின் சரிதத்தை நினைத்துப் பார்த்தால் வெட்கமாக அல்லவா இருக்கிறது. மலம் நிறைந்த இந்த அழியக்கூடிய நாற்றஉடலை, நான் என்கிற நினைவை, இந்த நிமிஷமே விட்டொழிப்பாயாக. முதலில் அகந்தை ஒழிந்தால் மமதையுமொழிந்து விடுமென்பதில் உனக்கு சந்தேகம் வேண்டாம்.

32. ஏ மனமே! ஒரேயொரு ஆத்மாதான் உலகிலுளது. மஹான்கள் அதைப் பரம்பொருள் என்று போற்றுகிருர்கள். உலகிலுள்ள ஜீவராசிக்குள் எல்லாம் உன் ஆத்மாவாகிய பரம் பொருளே நிறைந்து நிற்கின்றதை நீ மறந்து விடாதே. உன் ஆத்மாவாகிய பரம்பொருளின் சம்பந்தத்தினுல்தான் ஜடமான உடல்கள் பற்பல காரியங்களில் ஈடுபட்டு வருகிற தென்பதை நிமிஷமும் மறவாமல் ஞாபகத்தில் கொள்வாயாக. மனமே! உனக்கொரு வார்த்தை, உண்மையைச் சொல் கிறேன், கேள் நம்பு. மறந்து விடாதே. சொல்வதை நம்புவையேல் சுகமுண்டாமுனக்கு. மனமே, உலகில் உன் ஆத்மாவாகிய பரம்பொருளான, பரமாத்மாதான் அனைத்தையும் ஆட்டி வைக்கின்றதென்பதை நீ சொப் பனத்திலும் மறந்து விடாதே. மனமே! மிகப் பெரிய ரகஸியத்தை நீ தெரிந்து கொண்டு விட்டாய். சத்யமாக நம்பு நீ சத்யத்தை அறிந்தவனுவாய். ஞானமுன்னிடம் கோடி சூரியன் போல் பிரகாசிக்கும். நீ நித்யானந்தமாகிவிடுவாய்.

உன்னைத் தேவர்களும் போற்றுவார்கள். நம்பு. நம்பு. நம்பு. நம்பினால் நமனை ஜெயித்தவனாவாய்.

33. ஏ மனமே! உலகில் மக்கள் அனைவரும் சர்க்கரை கரும்பிலிருந்துதான் வருகிறதென்பதைநன்கறிந்துள்ளார்கள். உலகில் மக்களனைவரும் உபயோகித்து வரும் நகைகளனைத்தும் ஒரே தங்கத்திலிருந்துதான் உண்டாக்கப்பட்டுள்ளதென்பதையும், எல்லோரும் நன்கறிந்து கொண்டுள்ளார்கள். உலகம் எங்கும் சர்க்கரை என்றவுடன் கரும்பின் ஞாபகமும், நகைகளென்றவுடன் தங்கத்தின் ஞாபகமும் தானே அனைவருக்குமுண்டாகிறது. அப்படிப் போல், மனமே உலகில் ஒரே ஆத்மாதான் உளதென்றும், பரம்பொருளாகிய அதன் சைதன்யமே உலகிலுள்ள ஜீவராசிகளிடம் இருந்து வருகிறதென்ற சத்தியபுத்தி மாத்திரம் ஏன் உனக்கு ஏற்படமாட்டேன் என்கிறது? நகைகள் என்றவுடன் மாத்திரம் தங்கத்தின் ஞாபகம் வருகிறதே உனக்கு, உலகிலுள்ள தங்கமெல்லாம் வித்யாசமில்லாமல் தங்கமாகவே யிருப்பதைப்போல் உலகிலுள்ள ஆத்மாவெல்லாம் ஒரே ஆத்மாவென்று சத்யமாக நம்புவாயாக. நகைகளில் வித்யாசமிருப்பினும் தங்கத்தில் வித்யாசமிராது என்பதை மறவாதே. சர்க்கரையினால் செய்யப்பட்ட பலகாரங்களுக்கு வித்யாஸமிருப்பினும், பலவிதமாகக் காணும் தித்திப்பு பலகாரங்களுக்குள் உள்ள இனிப்பு ஒன்றேதான் என்பதில் சந்தேகம் ஏற்படாததைப் போல், உலகிலுள்ள ஜீவராசிகள் பலவாறாகத் தெரிந்தாலும், அனைத்துள்ளும் உன் ஆத்மசைதன்யம் ஒன்றேதான் என்பதை நீ நம்பிவிடு. உனக்குள்ளிருக்கும் உன் ஆத்மாவே உலகில் நீ காணும் அனைவரிடத்திலும் காட்சி கொடுக்கிறது. நீ பார்க்கும் ஜீவனிடமெல்லாம் உன் ஆத்மாவையே நீ பார்க்கின்றாய். முகம் பார்க்கும் கண்ணாடி முன் நீ சென்றால் கண்ணாடிக்குள் வேறொருவருடைய முகமா தெரியும்? உன்

முகம் தானே உனக்குத் தெரியும். இதிலுனக்கு சந்தேகமுண்டா சொல். மனமே! உலகில் காணும் ஜீவராசிகளனைத்தும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு முகம் பார்க்கும் கண்ணாடியென்று நம்புவாயாக. நீ எந்த ஜீவனைக் காண்கிருயோ அந்த ஜீவனுன் கண்ணுடியில் உன் ஆத்மாவாகிய உன் முகத்தை நீ காணவேண்டுமென்பதை மறவாதே. நீ எல்லோரிடத்திலும் உன்னையே கண்டு வருவாயாளுல் துன்பமுண்டாகாது. காண்பவர்கள் அனைவரையும் தன்னைக் காட்டிலும் வேருக நீ காண்பேயாளுல், மிகக் கொடிய துன்பத்தை அனுபவிப்பாய். ஜாக்ரதை. மனமே! உலகிலுள்ள ஜீவராசிகள் அனைத்தும் உன் ஆத்ம சைதன்யமான பரம்பொருளேயாகும். நீ அவர்களை வேருக நினைத்து ஏமாந்துவிடாதே. நீ பிறருக்கு செய்யும் சேவை அவர்களுக்கல்ல. உனக்கே நீ செய்து கொள்வதாகும் உலகமனைத்தும் உன் ஆத்மசைதன்யத்தின் ஒளியினுல்தான் இயங்கிக் கொண்டிருப்பதை நீ மறந்து விடாதே. மனிதன் முதல் மற்றுமுள்ள நாய், நரி, பன்றி, கழுதை, குதிரை, யானை எருமை, பசு, பக்ஷிகள் முதலான எல்லா சரீரங்களுக்குள்ளும் உன்னுடைய ஆத்மாவான பரமாத்மாதான் வியாபித்துக் கொண்டிருப்பதென்பதை நீ மறந்து விடாதே. மறந்து விடாதே. நம்பு. நீ சத்யமாக நம்புவையேல் உனக்கு ஸம்ஸார பந்தம் நீங்கிவிடும். பிறப்பு, இறப்பு, அற்ற பேரின்பநிலையை நீ அடைந்து விடுவாய்.

34. ஏ மனமே! நீ இதுவரை பற்பல துன்பங்களால் மிகுந்த சிரமத்தை அனுபவித்துள்ளாய். உனக்கு வந்துள்ள கஷ்டங்கள் அனைத்துற்கும் காரணம் எது தெரியுமா, உனக்கு. மனமே! நீ அசத்தானவைகளிடம் மிகவும் பற்றுவைத்தது தான் காரணமென்பதை இனியாவது அறிந்து கொள். நதிகள் சமுத்திரத்தைத் தேடிச் சென்று சரணமடைவதைப் போல், மனமே, உன் ஆன்மாவாகிய பரமானந்த சமுத்திரத்தை நீ

அறிந்து கொண்டு அதை சரணமடைந்து விடுவாயாக.கடலைச் சேர்ந்த கங்கைநீர் எப்படி பார்க்கமுடியாதவாறு கடல் மயமாகி விடுகிறதோ, அப்படி நீ ஆத்மாவைச் சரணடைந்து விட்டால் நீ ஆத்மஜோதியாகி விடுவாய். ஸ்வயம் ப்ரகாச மாக என்றும் அழிவற்றவனுவாய்.

35. ஏ மனமே! உன்னுடைய ஆத்மா அவித்யையால் மறைக்கப்பட்டிருக்கும் பொழுது அதற்கு ஜீவன் என்று பெயர் கொண்டு அழைக்கப் படுகிறதினுல், உன் ஆத்மா வேறு, ஜீவன் வேறு என்ற எண்ணம் உனக்கு வேண்டாம். சூரியன் உதயமாகத் தொடங்கி விட்டால், அமாவாஸை இருள் சூரியனை மறைக்கவா முடியும். அதே போல் ஸ்வயம் பிரகாச மான உன் ஆத்மாவை எதுதான் மறைக்க முடியும். அக்ஞான மாகிய மேகங்களால் உன் ஆத்மப்ரகாசம் மறைந்து விட்டதே. இனி என்ன செய்வதென்று துக்கப் படுகிருயா? மனமே உன் ஆத்மாவின் சைதன்ய சக்தியை ஒன்றினுலும் மறைக்க முடியாது. பகலில் சூரியன் மேகங்களால் மறைக்கப் பட்டிருப் பினும், பகல் என்பதையே மேகங்களால் மறைத்து விட முடியுமா சொல்? சூரியனை மேகக் கூட்டங்கள் மறைத்தாலும் சூரியனுடைய சைதன்ய சக்தியானது இருளைப் போக்கி பகல் என்ற அனுபவத்தை எல்லோருக்கும் உண்டாக்கி விடுவதைப் போல் உன் ஆத்மாவை அக்ஞானமாகிய இருள் மறைத்திருப் பினும், ஆத்ம சைதன்ய சக்தியால் அக்ஞானத்தின் காரியமான விஷயங்களை நீ தெரிந்து கொண்டு உன் ஆத்ம சைதன்ய பலத்தினுல் அக்ஞான இருளை விரட்டி விட முடியுமென்பதை நீ மறந்து விடாதே. மனமே! கவலைப் படாதே! சஞ்சலப் படாதே. உனக்கொரு நாளும் சஞ்சலப் படவேண்டிய கதி வந்து விடாது. நீ சஞ்சலப் படுவது எதனுல் என்று நினைத்தாய் உன் ஆத்மா சஞ்சல்ய சுபாவமுள்ள தென்று நீ நினைத்தாயா? அது தவறு. புத்திக்குத்தான் சாஞ்சல்யமெலாம். உன் ஆத்மா

---

கடல் போன்றதாகும், கடலில் படும் சூரியன் கடலின் அலைகளால் அசைவதைக் கண்டு சூரியன் அசைகிருன் என்று சொல்லும் மூடனைப் போலல்லவா நீ நினைத்தாய். கடலின் அலைகள் சதா அசையும் ஸ்வபாவமுள்ளதிருல் அதன் மேல் படும் சூரியனும் அசைவதைப் போல் தோன்றுகிறதே யொழிய கடலோ அல்லது சூரியனோ, அரை நிமிஷமும் அசைவதில்லை என்பதை நீ மறந்து விடாதே. கடலின் அலைகளைப் போல் மனிதனின் புத்தி சஞ்சலப் பட்டுக் கொண்டிருக்கும், ஸ்வபாவ முள்ளதாகுமென்பதைத் தெரிந்து கொண்டு, நீ கவலையற்று இருப்பாயாக. உன் ஆத்மாவிற்கு ஒரு நாளும் சாஞ்சல்ய முண்டாகாது. அது சுத்த சைதன்யமானது. ஆத்மாவிடம் உனக்கு நம்பிக்கையிருக்கட்டும். உன் ஆத்மா அவித்தையால் மறைக்கப் பட்டிருப்பதால் நீ பயந்து விட வேண்டாம். சுத்த சைதன்யத்தின் சக்தி உன் புத்தியில் பிரதி பலிப்பதால்தான் அது ஜீவன் என்ற நிலையை அடைந்து, அதன் சைதன்ய சக்தியினுலேயே புறத்தில் உனக்கு எல்லாப் பொருள்களும் புரியும்படி, விளங்கச் செய்கின்றதை நீ அறியாயோ? உன் கண்கள் காண்பதற்கும், காதுகள் கேட்ப தற்கும், மற்றுமனைத்தும் இப்படியே செயல் படுவதற்கும் எது காரணமென்று நினைத்தாய், அனைத்தும் இவ்வுலகமனைத்தும் உன் ஆத்ம சைதன்யத்தின் சக்தியினுல்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது. தேவ லோகத்தில் தேவர்களும், உன் ஆத்ம சக்தியினுல் தான் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிருர்கள் என்பதை நீ மறந்து விடாதே. அங்கும், இங்கும், எங்கும் உன்னுடைய ப்ரும்ம சைதன்யமாகவே தானிருக்கிறது என்பதை நீ அறிந்து கொள். உன்னுடைய ஆத்மாவிற்கு வேருக உலகில் ஒன்றுமில்லை. தனக்கு அன்னியமாக வேருென் றிருப்பதாக நினைப்பதுவே அக்ஞானமாகும், அதுவே நரகமு மாகு மென்பதை மறவாதே. நான் ப்ரும்ம சைதன்யமாக இருக்கின்றேன். நானில்லாத இடமே கிடையாது. அதனுல்

உலகிலுள்ள அனைத்திலும் நானே இருக்கின்றேன். எனக்கு அன்னியமாக உலகில் ஒன்றும் இருக்கவே முடியாதென்று உறுதியாக நம்புவாயாக. தன்னை அனைத்திலும், அனைத்திலும் தன்னையும் காண்பவனே ஞானி, ஜீவன் முக்தன் என்கிறார்கள். அவன் சுத்தமான பரமாத்மாவாகுமென்பதை மறவாதே.

36. ஏ மனமே! உலகில் பல கோடி ஜீவராசிகள்இருந்து வருவதைப் பார்த்து ஒவ்வொன்றும் தனித்தனி ஜீவனென்றும் தனித்தனியான ஆத்மாவென்றும்தானே நினைத்தாய். நீ வெவ்வேறு ஆத்மாக்களிருப்பதாக நினைப்பது எப்படி இருக்கிறதென நினைத்தால் பற்பல விதமான பாத்திரங்களில் தண்ணீர் நிறைந்து விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தைகளிலொருவன் திடீரென எல்லாப் பாத்திரங்களையும் உற்று நோக்கிப் பார்த்து ஒவ்வொரு பாத்திரத்திலிருக்கும் தண்ணீரிலும், சூரியனைக் கண்டதினால் உடன் எல்லோரையும் அழைத்து நமது பாத்திரங்கள் ஒவ்வொன்றிலும் சூரியன் தெரிவதைக் குழந்தைகளுக்குக் காட்டி எத்தனை சூரியன் இருக்கிறான் பார்த்தீர்களா என்று சொன்னவுடன் குழந்தைகள் அவன் சொல்வதை நம்பி விட்ட கதை போலிருக்கிறது உன் சமாசாரம். ஒரு சூரியன் பல பாத்திரங்களில் உள்ள நீரில் பிரதிபலிக்கும் பொழுது பல சூரியன்களாக தோற்றமளித்தாலும், சூரியன் ஒருவனே என்பதைப் போல் உலகில் காணும் உடலாகிய குடங்களில் தனித்தனியாக ஆத்மாக்கள் காணப்படினும், ஒரே ஆத்மாவானதுதான் சத்யமாக இருக்கிறதென்பதை மறந்துவிடலாகாது, நீ.

37. ஏ மனமே! நீ கட்டுக்கடங்காத மதயானையைப் போல் தீய வழியில் உன்னிஷ்டப்படி வேகமாக ஓடிக் கொண்டிருக்கிறாய். ஜாக்ரதை. உன்னைக் கட்டிவைக்க என்னிடம் வைராக்யமாகிய மிகவும் உறுதி வாய்ந்ததான சங்கிலியிருக்

கிறது. அதனால் உன் கால்களைக் கட்டிவிடுகிறேன். பிறகு நீ எப்படி உன்னிஷ்டப்படி ஓடுவாய், பார்க்கலாம். உன் மனதை ஒடுக்கிவிடுகிறேன் பார். மனமே! நான் சொல்வதைக் கேள். நீ விஷயங்களில் மிகவும் அபிமானித்து ஆசை வைத்திருக்கிறாய். முதலில் விஷயங்களில் உள்ள பற்றுதலை (ஆசையை) விட்டுவிடு. உலகில் நீ ஒரு விருந்தினனாக வந்துள்ளாய். வந்த வேலையில் கவனம் செலுத்து. விருந்து கொடுக்கும் வீட்டில் அவர் பொருள்களில் அவர் மனைவி, மக்களிடம் உனக்கு பற்றுதல் எதற்கு. விருந்துக்கு வந்தவன் வேலையென்ன. யோசித்துப் பார். உனக்குப் புரிந்து விடும். பிறரிடம் விருப்போ வெறுப்போ உனக்கு வேண்டாம். விருப்பு, வெறுப்பினால் பந்தத்திற்கு உள்ளாவாய். நீண்ட காலம் துன்பத்தைத் தரும் விஷயங்களிடம் அபிமானம் வைக்காதே. பற்றினால் பயங்கரமான பிறவி வந்தெய்தும். மனிதன் ஆசையினாலேயே நாசமடைகிறான். மறவாதே. ஜாக்ரதை.

38. ஏ மனமே! உனக்கு ஞானமில்லாத வைராக்யம் என்ன பலனைத் தரப் போகிறதென்று நினைத்தாய். கேவலம் வைராக்யத்தினால் மாத்திரம் பேரின்ப நிலை கிட்டி விடுமா? உனக்கு. ஒரு பக்ஷி பறப்பதற்கு இரு இறக்கைகள் வேண்டும் என்பதைப் போல், பேரின்ப நிலையை அடைவதற்கு ஞான வைராக்யமாகிய இரண்டும் மிகவும் முக்கியமாகும். மனமே! உன்னிடம் வைராக்யம் இருக்கிறது. ஆனால் ஞானானுபவம் வேண்டும். முதலில் ஞானமுண்டாக ஸத்குருவை நாடுவாயாக. ஸத்குரு கிட்ட வேண்டுமென நீ இடைவிடாமல் ப்ரார்த்திப்பாயாக. தாகத்தைத் தீர்த்துக் கொள்ள சாதகப் பறவை மேகத்தையே நோக்கிக் கொண்டிருப்பதைப் போல உனக்கு ஞானமுண்டாக ஸர்வகாலமும் நீ ஸத்குருவின் வரவையே நோக்கியும், நினைத்தும், போற்றியும் வரவேண்டுமென்பதை மறந்து விடாதே. ஸத்குருவின் திருவருள் இல்லாதவனுக்கு ஞானானுபவம் உண்டாகாது. புஸ்தகப் படிப்பினால் மாத்திரம்

ஞானனுபவம் ஒருக்காலும் ஏற்படாதென்பதை மறவாதே. சர்க்கரையின் ருசியை அறியாதொருவன் சர்க்கரையைப் பற்றி, புஸ்தகத்தில் பார்த்து, எப்படி சர்க்கரையின் ருசியை அறிவானே, அப்படித்தான் புஸ்தகப் படிப்பால் ஞானனுபவம் பெறுவதும். உன் ஆத்மாவை நீ அறிந்துய்ய உனக்கு ஸத்குரு கிருபையோடு கூடின ஞான வைராக்யமும், வேண்டும். ஒன்றிருந்து இன்ஞென்று இல்லாமல் போனல் பிரயோஜனப் படாதென்பதை மறவாதே. ஸ்ரீ ஸத்குருவின் பூர்ணகிருபையும் ஞானமும், வைராக்யமும் மிகவும் அவசியமாகிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டுவிடு.

39. ஏ மனமே! சிறுகுழந்தைகள் ஒவ்வொருவரும் எங்கள் ஊர் சூரியன் மிகவும் ஒளியுள்ளவன். உங்களூர் சூரியனின் பிரகாசம் குறைவுள்ளதென்று சொல்லிக்கொண்டு விளையாடுவதைப்போல நீ பேசுகிருயே? சத்யம் என்று புரியப் போகிறது. உனக்கு மனமே! உலகனைத்திற்கும் ஒரே சூரியன் உளது. அதன் ஒளியிலேயே, உலகில் மக்கள் தன்தன் காரி யங்களைச் செய்து வருகிருர்கள் என்பதை நீ அறியாயோ? மனமே! உலகில் உள்ள செடி, கொடி, மரம், அனைத்திற்கும் ஒரேவிதமான தண்ணீர் பாய்கிறது என்பதை நீ அறிய வில்லையா? ஆனல் ஒவ்வொன்றிற்கும் வேறு, வேறு சுவை களும், வேறு, வேறு வாசனைகளும் இருந்து வருவதைப் பார்க் கின்ரேம். குழந்தைகளே அறியாமையால் செடி, கொடி, மரங்களுக்கு தண்ணீர் பாய்கிறதில் வித்யாஸமிருப்பதாகவும், ஒவ்வொரு கிராமத்திற்கும், ஒவ்வொரு சூரியனிருப்பதாகவும் பேசுவதைப்போல், நீயும் பல ஆத்மாக்கள் பல ஜீவன்கள், இருப்பதாக நினைக்கிருயே. உனக்கும், குழந்தைகளுக்கு மென்ன வித்யாஸமிருக்கிறதென்று எனக்குப் புரியவில்லை. மனமே! உலகிற்கு ஒரே சூரியன், ஒரேகாற்று, ஒரே ஆகாசம், ஒரே தண்ணீர்தான் என்பதை நீ நன்கறிவாய். அப்படித்தான்

உலகில் ஒரே ஆத்மாதான் இருக்கிறதென்பதை சத்யமாக நம்புவாயாக. உன் ஆத்ம சைதன்யத்திஞல்தான் உலகமியங்கி வருகிறதை நம்பு. ஸந்தேகம் வேண்டாம்: ஸம்ஸயம் மனிதனுக்கு பயங்கரமான சத்துருவாகும். நம்பு, விடுதலே உண்டு.

40.. மனமே! நீ முன் செய்த புண்ணியத்திஞல் உனக்கு மானிடப்பிறப்புக்கிடைத்துள்ளது' இறைவன் மனிதனுக்கு மாத்திரம் பகுத்தறிவை அருளியுள்ளான். மனிதனுக்கு பகுத்தறிவை அருளிய இறைவஞே மனிதனின் அறிவிற்கும் அறிவாக இருந்து கொண்டு ஆட்சி செய்து வருகிஞன் என்பதை அக்ஞானிகளான மனிதர்கள் மறந்து விடுகிஞர்கள். பகுத்தறிவுள்ள மனிதன் ஒருவனே தனது ஆத்ம தத்துவத்தை இம்மையிலுணர்ந்து ஜீவன் முக்தனுக முடியும். மனமே! நீ மானிடஞக இருக்கும் போதே தன்னேத் தானறிந்து, ஜீவன் முக்தியை அடைய முயலுவாயாக. உனக்கு துர்லபமாகக் கிட்டிய மானிடப் பிறவியிலேயே, உன்னே நீ அறிந்துய்யாவிட்டால் நீ திர்யக்யோனிகளில், மிருகமாகவோ, பக்ஷிகளாகவோ, புழுக்களாகவோ பிறந்து பகுத்தறிவற்றுக் கணக்கற்ற இன்னல்களுக்கு ஆளாகி, துயரங்களேச் சொல்லமுடியாது, தவித்துத் துன்பப்படுவாய் என்பதை உனக்கு ஞாபகப் படுத்துகிறேன். மறந்து விடாதே. முன் செய்த புண்ணியத்தால் இந்த மானிட உடல் கிடைத்துள்ளதைச் சொல்லிக் கொண்டு மிகவும் அருவருக்கத்தக்க இந்த ஆபாசமான உடலேயே, அகங்காரத்திஞல் ஆத்மா (நான்) என நம்பி உடலே மாத்திரம் நீ நினேத்துப் பெருமைப்படுவதில் உனக்கு மிகப்பெரிய அபாயமுளது. உன் உடலுக்குள் சற்று கவனித்துப்பார். அங்கு இரத்தம், மாம்ஸம், எலும்பு, கொழுப்பு,மேலும் அருவருப்பை உண்டு பண்ணும் கோழை, மலம் மூத்திரங்கள் நிறைந்திருப்பதைப் பார். எல்லாம்வல்ல

இறைவன் உன் உடலை மேல் தோலிட்டுப் போர்த்தியுள்ளான். வெளியே தோலினால் உன்னுடம்பை மூடப்படாது, நீ தெருவில் போனால் மாம்ஸத்தைத்தின்று பிழைக்கும் கழுகும், காக்கையும், உன்னை உயிருடன் கொத்தித் தின்றுவிடும். மனமே! உன் உடலுக்குள் உள்ள மாம்சங்களையும், மல, மூத்திரங்களின் துர் நாற்றங்களையும், நீ நினைத்துப் பார்ப்பதேயில்லை. வெளியே உன் உடலை, சந்தனம், வாசனைகளால் பூசி, சுத்தமாக வைத்துக் கொண்டால் மாத்ரம் போதுமா? சொல். உன்னுடைய அறியாமையால்தானே நீ இப்படி உடலை செயற்கையால் அழகு செய்து கொள்கிறாய். இந்தவுடல் கிடைத்தது மிகவும் புண்ணியத்தின் பலனேயாகும். இந்த உடலிருந்து உயிர் பிரியுமுன் உன்னை நீ இந்த உடம்பிற்குள் கண்டு கொள்ள வேண்டுமென்பதை மறந்து விடாதே. நீ இந்த உடலை வைத்துக்கொண்டு அதற்குள் உன்னைக்கண்டு ஜீவன் முக்தனாவதற்காகவே இறைவன் இந்த உடலை உனக்குத் தந்துள்ளார் என்பதை நிமிஷமும் மறவாதே. உடம்பாகிய கூட்டிலிருந்து ஆவி சென்றபின் உடலை உன் சொர்த வீட்டிற்குள் வைக்கமாட்டார்கள். சில மணி நேரத்திற்குள் விறகாலும், விராட்டிகளாலும், அடுக்கப்பட்ட மெத்தையில் உன்னுடலைக் கிடத்தி பலபேரறிய தீக்கிரையாகச் செய்து விடுவதை நீ பார்த்திருந்துமா உனக்கு இந்த உடம்பில் இவ்வளவு பற்றுதல், பற்றைவிடு. ஒன்றையும் பற்றாதே. நீ ஜீவன் முக்தனாகிவிடுவாய்.

41. ஏ மனமே! இந்த உலகத்தில் அகந்தையினாலும், மமதையினாலும், மதம் பிடித்தலையும் மக்கள் தனது வாழ்நாள் முழுதும் அளவுகடந்த துக்கங்களை அனுபவிப்பதைப் பார்த்துமா உனக்கின்னும் அகந்தையும், மமதையுமிருக்கின்றது. பற்றினால் உனக்கு வந்துள்ள பிறவியில் நீ அனுபவித்துள்ள சொல்லொணாத் துயரத்தை அனுபவித்தும், ஏன்

உனக்கு இன்னும் வைராக்யமுண்டாகவில்லை. 84 லக்ஷம் ஜீவராசிகள் இவ்வுலகில் இருக்கின்றதென்பதை மறவாதே. இவ்வுலகில் அக்ஞானிகள் 84 லக்ஷம் யோனிகளின் வழியாகப் பிறந்தும், இறந்தும், பிறந்தும் இறந்தும் ஏதாவது ஒரு சரீரத்தைப் பெறுகிருர்கள். எடுக்கும் பிறவிகள்தோறும் கர்பத்திலும், வெளியில் வரும் போதும், சொல்லவொணுத் துயரங்களை அனுபவிக்கிருர்கள் என்பதை அக்ஞானிகள் மறந்து விடுகிருர்கள். ஞான வைராக்ய மில்லாதவன் அக்ஞானக்கடலில் ஏற்படும் சுழலிலகப்பட்டு, வெளியேற வழியறியாது, முழிக்கிருன். துன்பங்களால் தவிக்கிருன். ஜீவராசிகளில் மானிடப்பிறப்புக் கிடைப்பதரிது. மிகவும் அதிஷ்டவசமாகுமென்பதை நீ மறந்து விடாதே. 84 லக்ஷம் ஜீவராசிகளில் மானிடப்பிறப்பே பிறப்பின் கடைசியானதாகும். என்பதை அரைநிமிஷம் மறந்து விடாதே. இந்த மானிடப் பிறவியை நீ நழுவவிட்டால் மறுபிறவி, நாயோ, கழுதையோ, அல்லது பிணத்தைத் தின்னும் கழுகாகப் பிறப்பையோ, ஜாக்ரதை. இப்பிறவியிலேயே வைராக்யத்தை அடைந்து இந்த உடலாநான். எது ஆத்மா, எது அநாத்மா என்று உறுதியாக நன்கு விஜாரித்து விடுதலையடைவாயாக. உன் உடல்தோன்றி மறையக் கூடியதாகும். தோன்றுதலும், மறைதலும்,இல்லாதது உன் ஆத்மா என்பதை நன்கறிந்து கொண்டு விடு. எவன் தன்னை (தனதாத்மாவை) தெரிந்து கொள்ள வில்லையோ அவன் எத்தகைய மேதாவியானுலும் தன்னுடைய வாழ்நாளை வீணுக்கிய பாபியே. தனது ஆன்மாவை இம்மையில் அறியாதவனுக்கு மோக்ஷம் கிட்டாது. அறிவிலியான அவன் பல புழுக்களாகப் பிறந்தும், இறந்தும் பிறவிக்கடலில் தத்தளிப்பானென்பதை நீ மறவாதே.

42. ஏ மனமே! நீ பற்றற்றவனுக வேண்டுமானுல் உன் மனம் எந்தெந்தப் பொருளிடம் ஆசை வைத்து அதை

விரும்புகிறதோ, அந்தப் பொருளை உன் மனம் நாடாதவாறு நீ செய்யவேண்டும். ஒவ்வொரு நிமிஷமும் உன் மனதை ஆசையற்றதாகச் செய்து வருவாயானால் அப்பொழுது உன் மனதில் ஒருவித ஆசையும், தோன்றாமல் செய்து விடலாம். உன் மனம் விரும்பிய பொருளை அடைய முடியாதபடியால் ஸங்கல்பங்கள் (ஆசைகள்) மறைந்து மனமொருவித வியாபாரமுமில்லாமல் அடங்கி, ஒடுங்கி விடும். ஆசைகள் உன்னை விட்டு மறைந்ததினால் நீ பல ஜன்மங்களில் புண்ணியத்தைச் செய்து பெற்ற இந்த அரிய மானிடப் பிறவியைப் பெற்ற பயனை நீ இம்மையில் அடைந்துய்வாய்.

43. ஏ மனமே! உன்னைக் கெடுக்கும் சத்ருவை நீ இன்னுமா அறிந்து கொள்ளவில்லை. சொல்கிறேன் கேள். அதுதான் காமம். காமம் உன்னைக் கெடுக்கும் ஒரு பெரிய சத்துரு என்பதை நீ சொப்பனத்திலும் மறந்து விடலாகாது. காமத்தின் வசமானவன் மனத்தில் தீய எண்ணங்களே மிகுந்திருக்கும். அவன் தீய எண்ணத்தினால் செய்யத்தகாத காரியங்களையே செய்பவன், அதனாலேற்படும் மஹா பாபத்தையும் மறந்து விடுவான். காமத்தினால் அழிந்த தேவர்களையும், அரக்கர்களையும், நினைத்துப்பார். காமத்தினால் மிகுந்த பாவமுண்டாகிறதென்பதை மறவாதே. பாவத்தினால் பல ஜன்மங்கள் எடுத்துநரகத்தை அடைய வேண்டிய நிர்பந்தமுண்டாகும். மனமே! பாவம் செய்யாதே. உன் மனத்தில் காமமிருப்பின் நீ கெட்டே போவாய். காமத்தை வெல்பவனே மனிதன். மனிதன் காமத்தைவென்று காலனை ஜயித்தாக வேண்டுமென்பதற்காகவே பகுத்தறிவை மனிதனுக்கு இறைவன் அருளியிருக்கின்றார். பகுத்தறியுள்ளவனே! நீ உன் பகுத்தறிவை உபயோகித்து காமத்தைவென்று காலனை ஜயிப்பாயாகுக.

44. ஏ மனமே! காம இச்சையினால் கட்டுண்டு, உன் கண்களைக் கெடுத்துக் கொள்ளாதே. பிறரைப் பற்றிக் குறை

கூறுவதை உன் காதுகளால் கேட்டு பாபத்தை சம்பாதித்துக் கொள்ளாதே. உன் நாக்கு பொய்யையே சொல்லிக் கொண்டிருக்கிறதே. பொய் சொல்லவா உனக்குக் கடவுள் நாக்கைக் கொடுத்தார். பொய் சொல்வதால் உனக்கு என்ன லாபமிருக்கிறது? சொல்; பொய் சொல்பவன் வாயில் நரகமிருக்கிறது என்பதை நீ மறந்து விடாதே. உன் நாக்கை இறைவனின் நாமத்தைச் சொல்லி அதனால் தழும்பேறும்படி செய்வாயாகுக. மனமே! பொய் சொல்லாதே. அதனால் பாவம் தான் மிஞ்சும். இன்னுமொன்று உனக்குச் சொல்கிறேன் கேள்! மனமே! நீ சிற்றின்ப சுகத்தை சொப்பனத்திலும் நினைக்கலாகாது. அது வாழ்நாளை துன்பத்திற்குள்ளாக்கி விடும். உலகில் கோடான கோடி மக்கள் சிற்றின்ப சுகத்தினால் தங்களை கெடுத்துக் கொண்டு உயிர் இருக்கும்போதே நரக வேதனைகளை அனுபவிப்பவர்களை நீ பார்த்ததில்லையா? அவர்கள் தானே உலகில் நிரம்பியிருக்கின்றார்கள். பார்த்துக் கொள். ஜாக்ரதை; அல்பமான சுகத்தை விட்டுவிட முடியாவிட்டால் நீ எதைத்தான் தியாகம் செய்யப் போகிறாய்? மீன்கள் மாம்ஸத் துண்டினிடம் உள்ள ஆசையினால் தூண்டிலுள்ள இறைச்சியை ருசித்துத் தின்று கொண்டிருக்கும் போதே செம்படவன் தூண்டிலைச் சுண்டி இழுக்கிறான். தூண்டிலிலுள்ள மாம்சத்தை மிகவும் ருசித்து, ஆசையுடன் தின்று கொண்டிருக்கும் மீன் தூண்டிலில் மாட்டிக் கொண்டு தன் உயிரை இழந்து விடுகிறது. உலக மக்கள் பெரும்பாலும் சிற்றின்ப சுகத்தின் ஆசையினால் விலை மதிக்க முடியாத தங்களுடைய உயிரையே இழக்கின்றனர். மறு பிறவில் மிகக் கேவலமான வெட்கம் கெட்ட நாயாகப் பிறந்தும், சிற்றின்பத்தை அனுபவித்து இறந்தும், பிறந்தும், தங்களைத் தாங்களே நாசப்படுத்திக் கொள்வதையெல்லாம் கதையாக நீ கேட்டவைகளையெல்லாம் மறந்து விடாதே. கேவலமான, மிகக் கேவலமான விஷயங்களை மனிதன் அனுபவிக்கப்

போகும்போது, அவன் உயிரே போய்க் கொண்டிருந்தாலும் கூட, சிற்றின்பத்தில் உள்ள பற்றுதலை மனிதன் விடாப் படியாக பற்றிக் கொண்டிருப்பதை நினைத்தால் பெரியோர்கள் சொன்ன கதை ஞாபகத்தில் வருகிறது. அதை உனக்கும் ஞாபகப்படுத்துகிறேன் கேள். ஒரு தவளையை ஒரு பாம்பு பாதி விழுங்கிக் கொண்டிருக்கும்போது பாம்பின் வாயில் ஒரு பாதி வெளியிலிருக்கும் தவளை தன் முன் வந்துள்ள கொசுக்களையும், ஈக்களையும், மிகவும் ருசித்துத் தின்று கொண்டிருக்கிறதாம் கவனித்தாயா? என்ன பயங்கரம். பாம்பின் வாயில் உள்ள தவளையைப்போல் மனிதன் யமனுடைய வாயில் இருந்து கொண்டிருக்கும்போதும் அதை மறந்து, தவளை, ஈக்களை ருசித்துத் தின்பதைப்போல் மனிதன் சிற்றின்பத்தை அனுபவிப்பதை விடமாட்டேன் என்கிறானே? என்ன அதிசயமாக இருக்கின்றது. சிற்றின்பத்தின் வெறிச்செயலை என்னவென்பது. நினைத்தாலே பயமாக இருக்கின்றது. மனமே! தவளையைப்போல் இராதே. நீ ஒரு பகுத்தறிவுள்ள மனிதன் என்பதை மறவாதே. பகுத்தறிவை உபயோகித்து விடுதலையடைந்துய்வாயாகுக. உன்னை நீ காப்பாற்றிக் கொள்ளா விட்டால் வேறு யார் உன்னைக் காப்பாற்றப் போகின்றார்கள் சொல்.

45. ஏ மனமே! உன் உடலில் உயிர் இருக்கும் வரை உன்னை எல்லோரும் இந்திரன் எனப் போற்றுவார்கள். உடலாகிய கூட்டிலிருந்து உன் உயிரை யமன் கொண்டு சென்ற அப்பொழுதே அந்த உடலின் அவல நிலையான பயங்கரமான தோற்றத்தைக்கண்டு, உன்னைப் போற்றின வர்கள் அனைவரும் வெறுத்து, பார்த்தும் பார்க்காமலும் கண்களை மூடிக்கொண்டு சென்று விடுவார்கள் என்பதை நீ மறவாதே. மனமே! இந்தவுடல் அநித்யமானதுதான் என்றாலும் இதற்குள் அழிவற்ற உன் ஆத்மா இருந்து வருகின்றதை

மறந்துவிடலாகாது. இதைத் தெரிந்து கொள்ளவேதான் இந்த உடலைத்தந்து இறைவன் உதவியிருக்கின்றான். அழியக்கூடிய சரீரத்திற்குள் என்றுமே அழியாத ஆன்மாவாக நீ இருக்கின்றாய். என்பதை மறந்து விடாதே. உனது அழியக்கூடியதான தேகத்தை நம்பலாகாதென்பதை மேலும் உனக்குச் சொல்கிறேன். மறந்து விடாதே. உயிரிருக்கும் போதே உன்னை அறிந்து கொண்டு விடு, ஜாக்ரதை.

46. ஏ மனமே! நீ பேராசை என்ற பேயிடமிருந்து விடுபட்டால்தான் பரம் பொருளைக் காண முடியும். பேராசை உன்னை விட்டு அகன்றால் தான் உன் மனவோட்டம் (ஸங்கல்பம்) நிற்கும். மனம் சலியாது இருந்தால் உன் ஆத்மாவின் வடிவம் உனக்குத் தெரியும். மனமே! உன் ஆத்மாவை நீயறிய முதலில் ஆசையை வேரோடு களைந்து விட்டு மனத்தை சலனமில்லாது நிறுத்தி வைப்பாயானால், உன் ஆத்ம ப்ரகாசத்தை (உண்மையான ஆன்மாவை) நீ தெரிந்து கொண்டு விடுவாய். அப்புறம் நீ விரும்பின எல்லாம் விரும்பியவாறு ஸித்திக்கும். மற்ற வழிகளை பின்பற்ற முயலுதல் கூடாது. உன்னுடைய வழியே சிறந்ததாகும். அதிலிருந்து பிறழாதே. ஆசைப் பேயிடமிருந்து நீ விடுபட ஏட்டுப்படிப்பு உதவாது. ஸங்கல்பங்களை அறவே ஒழிக்கும் அனுஷ்டானமொன்றே போதும்.

47. ஏ மனமே! நீ பெயரும், புகழும் அடைய வேண்டித்தானே தர்மங்கள் என்று சொல்லிக் கொண்டு நல்ல காரியங்களைச் செய்கிறாய். அது உண்மையில் உனக்குத் துன்பங்களை அதிகப்படுத்துகிறதென்பதை நீ மறந்து விட்டாயே? உலக க்ஷேமத்தின் பொருட்டுக் கைங்கர்யம் செய்யும் பாவனையில் நீ தனக்குத்தானே உதவிக்கொள்வதை நான் அறியவில்லையென்று நினைக்கின்றாய் போலும். பெயரும், புகழும் உனக்கு மிகக் கேட்டையே தரும். உன்னை நீயே கெடுத்துக்

கொள்ளாதே. முதலில் உன் மனதைக் கட்டுப்படுத்து. மனதை கட்டுப்படுத்தத் தெரியாத உனக்கு நிமிஷத்திற்கு நிமிஷம் துக்கங்களும், துன்பங்களும், வருகின்றதென்பதை மறவாதே. இவ்வுலகம் கானல்நீர் போன்றது. கானல்நீரை மெய்யன்று நம்பி தாகத்தை தீர்த்துக்கொள்ள ஒருவன் கானல் நீரைத் தேடிச் சென்றான். மேற்பார்வைக்கு உண்மையாக நீரைப்போல் தெரிந்ததை நம்பிச் சென்ற அவன் இது கானல் நீர், உண்மையில் தாகத்தைத் தீர்க்கும் குடி நீரல்ல வென்பதை தெரிந்து கொண்டு விடுகிறான். மறுமுறை கானல் நீரைப் பார்க்கும் போது அதை உண்மையாகக் குடிக்கும் நீரென நம்பிவிட மாட்டான். மனமே! இவ்வுலகமனைத்தும் உண்மையாகக் கானல் நீரைப்போலவே தான். நீ காணும் ஒன்றும் சத்தியமாக இல்லை. அனைத்தும் அழியக் கூடியதாகும். அழியக்கூடிய உலகில் சுகத்தை அனுபவிக்க உன் மனம் கடலலை போல் தத்தளிக்கிறது. மனதை அடக்கு. மனம் போன வழி நீ போகாதே. நீ மனதை அடக்கி அலையாமல் வென்று விட்டாயானால் உனக்குள் உள்ள உன் ஆத்மஜோதி ஸ்வயம் ப்ரகாசமாகக் காட்சி தரும், மறவாதே.

48. ஏ மனமே! உன் ஆத்மா உலகிலெல்லாப் பொருள் களைக் காட்டிலும் சிறந்ததாகும். அமைதியே அதன் ஸ்வரூபமாகும். உன் ஆத்மா ஞானானந்த மயமான கடல். நீ அதனுள் மூழ்கிவிடு. கங்கையில் மூழ்கிக்கிடக்கும் ஜலம் நிறைந்த குடம் போல் உன் உள்ளும், வெளியும், அமைதியை அழிவற்ற ஆனந்தத்தை, அனுபவிப்பாய். நீ ஞானா மிருதக்கடலாகி விடுவாய். உன் நிலையை வாக்கால் வர்ணிக்க முடியாது. மனமே! உலகிலுள்ள மிகச் சிறந்த மனித ஜன்மம் உனக்குக் கிட்டிவிட்டது. நல்ல ஸத்குரு க்ருபைக்கும் பாத்திர னாகிவிட்டாய். நீ வந்த வேலையை மறந்து விடாதே. உன் ஆத்மாவை உன்னுள் பார். அதைச் சரணமடைந்து விடு.

ஆத்ம ஜோதியாக நீ ப்ரகாசிப்பாய். நம்பு. க்ஷேமத்தை அடைவாய்.

49. ஏ மனமே! உனக்குப் பகுத்தறிவு இருந்தால் போதுமா! இறைவன் கொடுத்த பகுத்தறிவைக் கொண்டு நீ காணும் ஒவ்வோர் உயிரினிடத்திலும் உன் ஆன்மாவைக் காண்பாயாக. நீ ஜீவன் முக்தன் மாதிரி நடித்தால் போதுமா? சொல். உலகிலொன்றுதான் இருக்கிறது. அது தான் ஆத்மா. உனது ஆத்ம சைதன்யத்தினுல் உலகிலுள்ள ஜீவகோடிகள் இயங்கி வருகின்றன. மனமே! நம்பு. நம்பு. அநித்யமான வஸ்துக்களை உண்மையாக நம்புகிருயே; அதனுல் உனக்கு ஏற்படப் போவது துக்கம் தான். துக்கத்தை ஒழித்த ஜீவன் முக்தர்கள் சொன்னதைக் கேள். அவர்களுக்கு சந்தோஷம் எங்கிருந்து வந்தது. அவர்கள் மாத்ரம் என்ன உயர்ந்தவர்களா? உன்மாதிரி தானே மனிதனுகக் காட்சி கொடுக்கிருர்கள். அப்படியிருக்கும்போது எப்படி அவர்கள் நித்யானந்தத்தை அனுபவிக்கிருர்கள். அவர்களிருக்குமிடத்தில் தெய்வீக ஒளி பிரகாசிக்கின்றதே? எப்படி அவர்களுக்கு மாத்ரம் கடவுள் அருள் பாலித்தார். கடவுளுக்கு வஞ்சனை உண்டா? மனமே! கடவுளை வஞ்சகன் என்று இதுவரை யாருமே சொன்னதில்லையே. ஜீவன் முக்தர்கள் எல்லோரும் அவனை கருணுநிதி, கருணுசாகரன், கருணுமூர்த்தி, என்றெல்லாம் சொல்கிருர்களே ஒழிய வஞ்சகன் என்று ஒருவரும் சொல்லவில்லை. ஜீவன் முக்தர்கள் என்பவர்கள் முதலில் என்ன செய்தார்கள். பின்பு எப்படி ஜீவன் முக்தர்களானுர்கள் என்ற கதையை நினைத்துப் பார்க்கவில்லையே நீ. உனக்குத்தான் பகுத்தறிவு இருக்கின்றதே. கொஞ்சம் நிலைத்திருந்து, யோசித்துப்பார். மனமே! போலி வேஷத்தினுல் துக்க மகன்றுவிடாது. மேலும் கொடிய துன்பமே மேலிட்டு உன்னை வதைக்கும். ஜாக்ரதை. முட்டாளே! ஜீவன் முக்தனுவது

சிரமமென்று நினைத்தாய். அதி சுலபம். சொல்கிறேன் கேள்.— உன்னிடமுள்ள பற்றுதலை உதறி எறிவாயாக. உனக்கு அகத்திலும், புறத்திலும், ஒன்றினிடத்திலும் பற்றிருக்கக்கூடாதென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு விடு. நீ காணுமனைத்தும் தன் மயமாகத் தோன்றுமுனக்கு. எல்லாவற்றுள்ளும் தானே இருத்தலை நீ காண்பாய், நம்பு. யோஜனை வேண்டாம். அனைத்தையும் உதறி எறிந்துவிட்டு உன்னையே நீ பார். உன்னை நீ காண்பாயாகில் உனக்கு ஜீவன் முக்தி நிலைகிட்டிவிடும். ஜீவன் முக்தியின் ரகசியம் இதுதானப்பா. தெரிந்து கொண்டாயா? சொன்னபடி செய், சுகமடைவாய்.

50. ஏ மனமே! நீ பரிசுத்தக் குறைவாகயிருப்பதால் உன் மனம் அடங்க மாட்டேன் என்கிறது. பரிசுத்தமான மனத்தை அடக்குவது மிகவும் எளிதாகும். உன் மனம் அடங்காததின் காரணங்களை நீ நன்கறிந்து கொள்ளவில்லை. உன் மனம் அடங்க நான் சொல்வதைக் கேள். மனமே! உனக்கு ஸித்திகள் வேண்டுமென்ற எண்ணம் மேலிட்டிருப்பதை நீ மறந்துவிட்டாய். அந்த எண்ணம் உன் வாழ்க்கைக்குக் கொடிய விரோதியாகும். மனோசக்திகளால் ஸித்திகளைப் பெறுபவன் அவற்றிற்கு அடிமையாகிறான். ஏதாவதொரு அல்பமான ஸித்தி வந்தவன் தன்னை மறந்து அஹங்காரியாகவும், தடித்தனமாகவும், திமிர்பிடித்தும், அலைவன். முடிவில் சில ஸித்தர்கள், ஸித்திகளுக்கு அடிமையாகி அதிலிருந்து விடுதலை அடைய முடியாதபடி ஏமாந்துபோய் மறு பிறவியை எடுத்தும் விடுகின்றனர். மனமே! உன் மனத்தைக் கெடுக்கும் பெரிய சத்ரு ஸித்திகளாகும். ஸித்திகள் உன்னைக் கெடுக்கும் சத்ரு. முதல் தரமான சத்ரு என்பதை நீ மறவாதே. உன் தூய மனத்தையும் கெடுக்கும் சத்ருவான ஸித்திகளை நீ சொப்பனத்திலும் விரும்பாதே ஜாக்ரதை.

---

51. ஏ மனமே! உனக்கு ஆசாபாசங்கள் இருக்கின்றன. அநித்யத்தில் பற்றுதல் கொண்டுள்ளாய். ஸதா விஷயாதி போகங்களின் நினைவாகவே இருக்கின்றாய். விருப்பும், வெறுப்பும் உன்னிடம் குடி கொண்டுள்ளது. எப்படி நீ நித்யானந்தத்தை அனுபவிக்க முடியும். சொல் மனமே! உனக்குண்டாகும்ஆசைகள்மலைபோல் காண்கிறது. இவைகளை நீ எப்படி திருப்தி செய்விக்கப் போகிறாய். முடியுமா உனக்கு? உனக்கிருக்கும் ஆசைகளை நீ திருப்தி செய்விக்க பல கோடி ஜன்மம் எடுத்தாலும் போதாது போலிருக்கின்றதே மனமே! உனக்கு உண்டாகும் ஆசைகளை நீ அடக்கி ஆளுவை யானால் அதனால் உண்டாகும் நிரந்தரமான இன்பம், சந்தோஷம் எவ்வளவு மேலானதும், மிகச்சிறந்ததுமாகுமென் பதை நீ அறிவாயோ? நீ பேரின்பத்தை இம்மையில் அனுபவிக்க வேண்டுமானால், ஆசைகளை வேரறுத்து ஒழிப்பாயாகுக. ஒன்றிடத்திலும், உனக்கு ஆசையிருக்க லாகாது. நீ பற்றற்றவனாகி விடுவதற்கு தர்க்கமும், ஆராய்ச்சியும், உதவாது. பற்றுதலை ஆராய்வதே ஒரு பற்றாய் விடக்கூடாது. பற்றுகளை மலமென்று நினைத்து மறப்பாயாகுக. பற்றற்ற மனத்தினனாய் ஆகிவிடு. பற்றற்றவன் பிறப்பை அறுத்தெறிந்த வீரனாவான். அவனே ஜீவன் முக்தன். பற்றுதல் பல பிறவிகளை உண்டு பண்ணும். பற்றுதலால் கிடைப்பது நரகமென்பதை நீ மறந்து விடலாகாது. ஆசாபாசங்களாகிய பற்றுதலை அறவேவிட்டு, விடுதலை பெறுவாயாகுக.

52. ஏ மனமே! நீ முன் ஜன்மத்தில் புண்ணியம் செய்துள்ளதினால் அதுவே இப்பொழுதும் உன்னை மேலும் மேலும் புண்ணியம் செய்யத்தூண்டுகிறது. புண்ணியமொன்றே நிற்கிறது. புண்ணியத்தைச் செய். புனிதனாவாய். புனிதன் என்பவன் யார் என நினைத்தாய்? அவன்தான் ஜீவன்முக்தன்.

ஜீ வ ன் மு க் த ன் செய்வன அனைத்தும் புனிதத் தன்மை வாய்ந்தவையாய்த்தான் இருக்கும். ம ன மே! முதலில் உன்னைப் புனிதப்படுத்திக் கொள். பிறகு உலகை நீ புனிதப் படுத்தி விடலாம். முதலில் உலகைப் புனிதப்படுத்துவதாக உன்னை நீயே கெடுத்துக்கொள்ளாதே. நீ புனிதனாக முதலில் உன்னிடம் ந ல் லொ ழு க் க ம் வேண்டும். இரண்டாவது. மெய்யான, குறைவற்ற அன்பிருத்தல் வேண்டும். மூன்றாவது உன்னிடம் தர்ம சிந்தனை இருத்தல் வேண்டும். அழகாகப் பேசினால் போதாது. நீ அமைதியாக இருக்க வேண்டுமானால் ஒருவருக்கும் தீங்கு நினைக்காதே. தீங்கு செய்து விடாதே. பி ற ரு க் கு தீங்கு செய்வாயானால் கடவுள் உன்னைப்பழி வாங்குவார். நீ தப்பமுடியாது. ஜாக்ரதை; நீ ஒருவருக்கும் தீங்கு நினைக்காமல் இருப்பதே பெரிய தர்மமாகும். நீ ஒருவன் தீங்கு செய்யாமல் இருந்தால் உலகிற்கே நலமுண்டாகும். தர்மம் செய்வதாகச் சொல்லி, பிறரை இ ம் சி க் கா தே. எவருக்கும் துக்கத்தை உண்டு பண்ணாதே. உன் சுயநலத் திற்காகவே நீ தர்மம் செய்கிறாய். நீ சுகத்தை அடைய பிறருக்கு க ஷ் ட த் தை க் கொடுத்து வருகிறாய் என்பது தெரியாதென்று நினைத்தாய். அவர்கள் கஷ்டப்படுவதால் நீ சுகமடைந்து விடலாமென்று நினைக்கிறாய். முடியவே முடியாது. ஒருக்காலும் நீ சுகமாக இருக்க முடியாது. நம்பு. ஒருவருக்கும் கேடு நினையாதே. நீ அ வ ர் க ளை கெடுக்க நினைக்கும் போது கேடு உன்னையே கெடுத்துவிடும். இது தெரியாதா உனக்கு. நீ நல்லவனாகி விடு. மனமே! உன் ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ள பிறரை துன்புறுத்தாதே. பாவம் செய்யாதிருப்பாயாக. பாவத்திலிருந்து விடுபடுவதுதான் முக்தி. கடமையைச் செய். உன் முதற்கடமை எது தெரியுமா? மனமே! உன் முதற்கடமை புண்ணியம் செய்வதாகுமென்பதை மறவாதே. புண்ணியத்தின் பெருமையால் புனிதனாவாய். புனிதன் தனக்குள் பூர்ண ஒளியைக் காணுவான். அவனை மஹா

---

புருஷன் என்று அழைப்பார்கள். மஹாபுருஷனைச் சுற்றிலும் அவனையறியாமல் புனிதத் தன்மை ப்ரகாசிக்கக் காணலாம். மனமே! நீ முன் செய்த புண்ணியத்தின் பயன் புண்ணியம் செய்யும்படி தூண்டிவிட்டது. புண்ணியத்தையே செய்து புனிதனாய் விடு.

53. ஏ மனமே! உன்னிடம் தூய்மை வேண்டுமானால் அமைதியை நீ தேடிப் போக வேண்டாம். உனக்கு அமைதி தானே உண்டாகும். எவருக்கும், எதற்கும், உன்னால் தீங்கு உண்டாகாது. உன்னிடம் தீமை அற்ற தூய்மை இருப்பின் உலகை நீ வசமாக்கலாம். மிகக் கொடிய மிருகங்கள் கூட உன்முன் அமைதியாயிருக்கும். உன் பார்வையில் எல்லாம் ஒன்றாகக் காணும். அப்பொழுது நீ அஹிம்ஸையைக் கைவரப் பெற்றவனாவாய். பிறகு ஒவ்வோர் உயிரிலும் நீ உன்னையே காண்பாய். மனமே! அனைத்திலும் உன்னைக் காண உனக்கு முதலில் மனத்தூய்மை வேண்டும்.

54. ஏ மனமே! நீ பிழை செய்வையானால் அது உன்னை பாதிக்கும். பிறர் பிழை செய்வதாகச் சொல்லி அப்பிழையை நீ ஒரு நாளும் செய்யாதே. பிறர் செய்யும் பிழைகளைக் கண்டு சொல்வது உனக்கு சுலபமாக இருக்கின்றது. நீ செய்யும் பிழைகளை பிறர் கண்டு சொல்வது அவர்களுக்கு சுலபமாகத் தானே இருக்கும். இப்படி ஒருவரையொருவர் பிழைகள் கண்டு பிடித்துச் சொல்லிக் கொண்டே வந்தால் போதுமா? சொல். மனமே! உன்னை நீ திருத்திக்கொள், பிறரைப் பற்றி கவலைப் படவேண்டாம். இறைவன் அந்த வேலையைப் பார்த்துக் கொள்வான். இந்த நாடகமெலாம் உலகம் நடைபெறுவதற்காகவே நன்கு நடைபெறுகிறதென்பதை நீ மறந்துவிடாதே. இவ்வுலகம் ஒரு பெரிய அதிசயமான மாயையாகும். நீ காண்பதனைத்தும் அழியக் கூடியவைகளாகும். நீ எதைப் பற்றியும் நினைத்து கவலைப்பட வேண்டாம். உன்னையே நீ

நினைத்துக் கவலைப்படு. நீ எதற்காக இவ்வுலகில் பிறந்தாய் நீ என்ன காரியம் செய்து வருகிறாய். நீ நினைப்பதிலோ, அல்லது நீ செய்யும் காரியங்களிலோ கடுகளவு உண்மை இருக்கிறதா? சொல். மனமே! நீ அரை நிமிஷமும் பிழை செய்யாதே. உன்னை நீ நினைத்துப்பார். நீ வந்த வேலை புரியும் ஜாக்ரதை.

55. ஏ மனமே! உன்னை நினைத்தால் எனக்குச் சொல்ல முடியாத வருத்தம் ஏற்படுகிறது. முட்டாளே! பிறர் உள்ளத்தில் என்ன இருக்கிறது. அவன் என்ன நினைக்கிறான். அவன் என்ன செய்கிறான் என்றெல்லாம் நினைத்து நீ ஏன் ஏங்குகிறாய். உன்னை எந்த நிமிஷமும் கொண்டு போகலாம் என்று நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கும் யமனுக்கென்ன பதில் சொல்லப் போகிறாய்? பிறர் மனதையும் அவர்கள் காரியங்களையும் நினைப்பதும் அவர்களை திருப்தி செய்ய நீ முயலுவதினாலும் யமன் உன்னை விட்டு விடுவான் என்று நினைத்தாயா, சொல்? விலை மதிக்க முடியாத உன் ஆயுளை ஏன் நீ வீணாகக் கழிக்கின்றாய். உன்னுடைய நல்ல ஜன்மத்தை நீ வீணாக்கிக் கொள்ளாதே. மனமே! உனக்கு யமலோகம் செல்லும் காலம் நெருங்கி விட்டதை நீ மறந்து விடாதே. காலன் உன் ஆயுளை விழுங்கிக் கொண்டிருக்கின்றான். பூமிக்கு பாரமாயிருந்த உன் உடலை ஒவ்வொரு அங்கமாக வெட்டித் துண்டு போட்டு உன்னை ஹிம்ஸிக்கப் போகிறான் யமன். மனமே! பிறரை நினையாதே. எவனுள்ளத்தில் என்ன நினைத்தால் உனக்கென்ன. உன்னைக் காப்பாற்றிக் கொள். நீ பிறரை நினைப்பதால் என்ன பிரயோஜனம். உலகிலொருவராவது சாகும்போது கூட வரப்போவதில்லை. உன் உயிர் பிரியும் தருவாயில் நீ சேர்த்து வைத்துள்ள சொத்துக்களை பாகம் போட்டுக் கொள்ள கழுகுகளைப் போல் காத்திருந்து

கொத்திக் கொண்டு சென்று விடுவதை அல்லாது உன்னைச் சேர்ந்தவர்கள் என்ன உபகாரம் செய்யப் போகிறார்கள் என்று நீ நினைத்தாய். உன் ஆயுள் நசித்து விட்டது. யமதூதர் உன்னை நெருங்குகிறார்கள், ஜாக்ரதை அனைத்தையும் மறந்து விடாதே. கடுகளவு நேரமாவது நினைத்துக் கொள் கடவுளை. நீ காப்பாற்றப்படுவாய். சொல்வதைக் கேள். ஏமார்ந்து போகாதே. மறு ஜன்மம் உனக்கு வருமானால் சொல்ல முடியாத கஷ்டங்களையும், துன்பங்களையும் அனுபவிக்க நேரு மென்பதை நீ மறந்து விடாதே. துஷ்ட புத்தியை விட்டுவிடு. பயங்கரமான துன்பங்களை அளிக்கும் கேட்டை நினையாதே. நீ பிறரை நினைப்பதால் நரகத்தையே அடைவாய். உன்னை நினைத்துப்பார். நான் யாரென்று உன்னை நீயே கேட்டுக் கொள். உன்னை நீ விஜாரி. இடைவிடாமல் பாடுபட்டு தன்னை உன்னுள் அறிந்து கொண்டுவிடு. நீ நீயாகவே மாறிவிடுவாய். நீ பிறரை நினைக்கமாட்டாய். எங்கும் நீ ஒருவனாகவே விருப்பாய். உனக்கன்னியமாக ஒன்றுமே இராது. உன்னில் அனைத்தையும், அனைத்திலும் உன்னையும் காண்பாய். மனமே! பிறரையே நினைத்து, யமலோகம் போய் விடாதே. உன்னையே நினைத்து ப்ரம்மானந்தமாக மாறி விடுவாயாக.

56. ஏ மனமே! உண்மையைச் சொல்கிறேன் கேள். மறந்து விடாதே. இவ்வுலக மனைத்தும் ஒன்றுதான். இப்பிரபஞ்சத்தை வேறு வேறாக நினைப்பவன் முட்டாள். பிரித்து விடாதே. உண்மையைப்பார். தவறு செய்தால் துக்கத்தை அனுபவிப்பாய். பிறருக்குத் தீங்கு விளைவிக்க நினைப்பவன் முதலில் தனக்குத்தானே தீங்கை விளைவித்துக் கொண்டு, பிறகே மற்றவர்களுக்குத் தீங்கை விளைவிக்கின்றான். மனமே! நீ பிறருக்குத் தீங்கை நினைக்கும்போதே உனக்குத் தீங்கை செய்து கொண்டு விட்டவனாவாய். மறவாதே. உலக

யனைத்தும் ஒன்றுதான். பிற நாட்டிற்கோ, பிறருக்கோ, தீங்கு நினையாதே. நீ காணும் இப்பிரபஞ்சத்தை உன் உடலாகக் கருதுவாயாக. உன் உடலின் ஒவ்வொரு அங்கங்களும் ஒவ்வொரு தேசமாக நம்பி விடுவாயானால், நீ அங்கஹீனனாக இருக்க விரும்புவாயா? சொல். தனக்குத்தானே அங்கஹீனம் செய்து கொள்ளும் முட்டாளை என்ன சொல்வது. நீ காணும் இப்பிரபஞ்சத்தில் உள்ள ஜீவர்கள் அனைவரும் யார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? பிரபஞ்சம் உன் உடலென்றால் உன்னுடைய ஜீவன்தான் இப்பிரபஞ்சத்தில் இருப்பதெல்லா மென்று சொல்லவும்வேண்டுமா? உலகம் அனைத்திலும் உள்ள ஜீவன்கள் உன்னுடைய ஜீவன்தான் என்பதை நம்பு. நம்பி அவைகளிடம் நேசம் (அன்பு) வைப்பாயாகுக. ஒரு தீபத்தில் இருந்து ஏத்திய தீபமே நீ காணும் கோடான கோடி ஜீவாத் மாக்களாகும். மறந்து விடாதே. ஒருவரையும் வெறுக்காதே. ஒருவருக்கும் கேடு நினைக்காதே. உலகம் ஒன்றே, உலகிலுள்ள ஜீவாத்மாக்களும், ஒன்றுதான் அனைத்துமொன்றுதான் அது தான் ஆத்மாவென்றும், ப்ரும்மமென்றும் சொல்லப்பட்டிருக் கின்றது மறந்து விடாதே.

57. ஏ மனமே! உன்னுள்ளிருக்கும் பக்தியை மறைப்பது எதுவென்று நீ இன்னும் அறிந்து கொள்ளவில்லையே? சொல்கிறேன் கேள். அதுதான் மண், பெண், பொன், என்றவைகளால் ஆன திரையாகும். திரை விலகினால் உன்னிடமியல்பாகவே இருக்கும் பக்தி ப்ரகாசிக்கும், மனமே! நீ முதலில் மண்ணாசை, பொன்னாசை, மற்ற ஆசைகளைக் கொண்டு தயாரான திரைகளை நீக்குவாயாக. திரை விலகு மானால் உனக்குள்ளிருக்கும் பக்தி ஸ்வயம்ப்ரகாசமாகத் தோன்றும். பக்தனை கெடுப்பது ஆசைகள் என்பதை நீ மறவாதே. பக்தி என்றால் சுலபமென நினைத்தாயோ? அனைத்திலும் ஈசனைக் காண்பவனே பக்தனாவான். பக்தன்

மற்றொருவரையும் இழிவாகப் பேசமாட்டான். காரணம் எல்லோருடைய உள்ளத்திலும் ஈசனைக் காண்பதால்தான். மனமே! உன்னிடம் சிரத்தை இருப்பின் உன் உள்ளத்தில் பக்தி கங்கைபோல் பெருக்கெடுக்கும். உன்மனம், வாக்கு, காயங்களினால் ஒருவருக்கும் தீங்கு விளைவியாதிருப்பாயாக. உன் எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் பொருளாசை கடுகளவு மிருத்தலாகாது. உன் எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும், தூய்மையுடன் நீ இருந்து வருவேன் என்று பிரதிக்ஞை எடுத்துக் கொள்வாயாக. மனமே! உன் எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் நீ மிக மிகத் தூய்மையுடன் இருந்து வருவேனென்று சத்ய சங்கல்பம் செய்து கொண்டு விடுவாயாகுக. மனமே! உன் உடலில் உயிர் உள்ளவரை உன்னுடைய எண்ணங்களிலும், உன்னுடைய சொல்லிலும், உன்னுடைய செயல்களிலும் எல்லாவற்றிலும் சிறிதும் பாவம் செய்வதில்லையென்று உன் ஸத்குருவின் முன் நீ சத்யம் செய்து கொடுத்து விடுவாயாக. ஏ மனமே! நீ இம்மையில் மிகமிகச் சிறந்த பக்திமானாக வேண்டுமானால், மேற்கண்ட ஐந்து உபதேசங்களையும் உன் அனுபவத்திற்குக் கொண்டு வந்து விடுவாயாகுக. மஹான்களின் ஐந்து உபதேசமும் பஞ்ச மஹாபாபத்தையும் போக்கி உன்னைப் புனிதப்படுத்தி விடும். உன்னுள்ளத்தில் கோடி சூரியன் ஒரே சமயமுதித்த மாதிரியான ஸ்வயம்பிரகாசம் காட்சி கொடுக்கும். நீ அருட் பெருஞ்ஜோதிக் கடவுளாக மாறி விடுவாய். நீ உண்மையான பக்தனால் ஸத்திய சங்கல்பம் செய்து கொண்டுவிடு. க்ஷேமத்தையடைவாய்.

58. ஏ மனமே! முக்தி உன்னிடமேயிருக்கிறது. வெளியில் தேடாதே.

59. ஏ மனமே! மற்றொன்றை இழிவாக நீ நினைக்கும் வரை நீயும் ஒரு அக்ஞானிதான்.

60. ஏ மனமே! உன்னுள்ளத்தை நீ தூய்மையாய் வைத்துக்கொள். கடவுள் உன் உள்ளத்தில் குடியேறி விடுவான்.

61. ஏ மனமே! தூய்மையற்ற உள்ளத்தோடு நீ செய்யும் பூஜையானது தன்னைத்தானே ஏமாற்றி கொள்வதாகுமென்பதை மறவாதே.

62. ஏ மனமே! கடவுளிருப்பதை நீ நம்புவாயாகில் எல்லையற்ற பரம்பொருள் உன் நம்பிக்கையில் தோன்றுவான்.

63. ஏ மனமே! யோக்யதையில்லாமல் நீ விடுதலை வேண்டுகிறாயே. விடுதலை வேண்டுமென்றால் ஆசையை விடு. உனக்கு யோக்யதை உண்டாகும்.

64. ஏ மனமே! நீ முதலில் ச்ரத்தா பக்தியுடன் கடவுளை நினைத்து கைங்கர்யம் (ஸேவை) செய். அது உன் உள்ளத்தை தூய்மையாக்குகிறது.

65. ஏ மனமே! உன்னுள்ளத்தின் சக்தியெல்லாம் ஒருமுனைப்படுத்திப்பார், உண்மை விளக்கமாகிவிடும்.

66. ஏ மனமே! அன்பே தெய்வமாகும். அன்பை வழிபட்டு அன்பினால் உன் மனதை தூய்மையாக்கிக்கொள்.

67. ஏ மனமே! உனக்கு முக்தி வேண்டுமா? முதலில் அன்போடு வேலைசெய். தியாகபுத்தி உண்டாகும். தியாகத்தினால் முக்திகிட்டும் மறவாதே.

68. ஏ மனமே! உன்னிடம் என்று திவ்ய சக்தி ப்ரகாசிக்கப் போகிறதோ அன்றுதான் நீ உண்மை நாகரீகத்தைக் காணமுடியும்.

---

*அதிஷ்டானம், புதுக்கோட்டை.*

69. ஏ மனமே! உன் ஆன்மாவில்தான் உண்மைத் தன்மையிருக்கிறது.

70. ஏ மனமே! மாயை நிமிஷத்திற்கு நிமிஷம் உருவங்களை உண்டாக்கிகொண்டிருக்கிறதை நீ மறவாதே, ஜாக்ரதை.

71. ஏ மனமே! நீ பிறருக்குச் செய்யும் தீங்குகளெல்லாம் உன் ஆன்மாவிற்கே நீ செய்து கொள்ளும் தீங்குகளாகுமென்பதை மறவாதே.

72. ஏ மனமே! நீ காணும் பொருள்கள் அழியும். உன் ஆன்மா அழிவற்றது. அதற்கு சாவேயில்லை.

73. ஏ மனமே! நீ சுதந்திரமாக இருக்க வேண்டுமென்ருல் முதலில் உன் பிறவியை துறந்தாக வேண்டு மென்பதை மறவாதே.

74. ஏ மனமே! நீ உண்மையாக உன்னைக்காண வேண்டுமா? உன்னகத்தே பார்வையைச் செலுத்து. உன்னை நீ காண்பாய்.

75. ஏ மனமே! நீ துன்பப்படுவதற்குக் காரணம் தெரியுமா? கேள். நீ பிறிதொன்றின் மீது சார்ந்திருப்பதே துன்பப்படுவதற்குக் காரணம். ஒன்றின் மீதும் சார்ந்திடாதே. உன்னையே நீ சார்ந்திரு. சுகமான நிலை கிட்டும், உனக்கு.

76. ஏ மனமே! இருப்பதொன்றே. ஆன்மாவைத்தவிர வேறில்லை. சந்தேகம் வேண்டாம். சம்சயமுள்ளவன் நரகத்தையடைகிருன். ஜாக்ரதை.

77. ஏ மனமே! உன் கண்ணால் காணும் அவர்கள் உன்னிலும், நீ அவர்களிடமும் இருப்பதே உண்மையாகும். இந்த ரகசியத்தை நீ இந்த நிமிஷமே உணர்ந்து கொண்டு விடுவாயேல் உனக்கு சற்றும் துயரம் உண்டாகாது.

78. பாலைநிலத்தில் காணும் கானல் நீரைப் போல் இவ்வுலகு ப்ரும்மத்தினிடமிருந்து காணப்படுகிறதென்பதை மறவாதே.

79. நான் ஒன்றுமில்லாதவன். நான் சக்தியற்றவன் என நினைத்துக்கொண்டே இருந்தால் வலிவிழந்து போவாய். உன் வாழ்க்கை நாயினுடைய வாழ்க்கையினும் இழிவானதாகி விடும்.

80. ஏ மனமே! இன்னொருவனுக்கு தீங்கு விளைவிக்கும் போது நீ உனக்கே தீங்கு விளைவித்துக்கொள்கிறாய், ஜாக்ரதை.

81. ஏ மனமே! காமம் உயிரைக் கொல்லும் கொடிய சத்ருவாகும். க்ாமக்ரோதம் மிகையாக உள்ளவன் தன்னைத் தானே கெடுத்துக் கொண்டு விடுகிறான். மனிதர்களுள் மிக மிகக் கடைத்தரமானவர்களே விலங்குகள்போல் இந்திரிய சுகத்தையே மேலாக நினைத்து நாய்களைப்போல் அலைகின்றனர். காமம் பரமார்த்திக வாழ்விற்கு சத்ருவாகும். காமத்தினால் இளமையும், அழகும் வாடிவதங்கிக் கெட்டுப்போகும். புலன்களை அடக்கியாள்பவனே வீரனாவான். பகுத்தறிவு உள்ளவனுமாவான். சன்மார்க்கத்தின் முதற்படி, காமனைகளை வெல்வதாகுமென்பதை மறவாதே. காமத்தினால் கெட்டவர்களையெல்லாம் அடிக்கடி நினைத்துக்கொள். காமத்தை வென்றவனே காலனை ஜெயிக்க முடியுமென்பதை மறந்து விடாதே, ஜாக்ரதை.

---

*அதிஷ்டானம், புதுக்கோட்டை.*

82: ஏ மனமே! வாழ்க்கை சாசுவதமானதன்று. வாழ்க்கை ஒரு கனவுபோன்றதேயாகும். கனவில் கண்டதை உண்மையாக நடந்ததென ஒப்புக்கொள்ளமுடியுமா? தூக்கத்தில் வரும் கனவைப்போலவே பகலில் விழித்துக் கொண்டிருக்கும்போது நீ காண்பதனைத்தும் கனவாகவே நம்பி விடு; துக்கம் அணுகாது. கவலையில்லாமல் இருக்கும் ஒரே வழி அனைத்தும் நடப்பனவெல்லாம் கனவாகவே நம்பி விடு. நிம்மதியோடிருப்பாய்.

83. ஏ மனமே! ஸ்ரீ ஸ்கந்தகுருவை நீ சரணமடைந்து விடு. ஸ்கந்தகுரோ! நீரே என்னுடைய மாதாவும், பிதாவுமாவீர். நீரே என் கணவரும், பந்துக்களும், நண்பருமாவீர். நீரே என் ஸத்குருவும் என்குலதெய்வமுமாவீர். நீரே என் உயிர்க்கும், உயிராயிருக்கும் கடவுளுமாவீர். உம்மையின்றி வேறெதுவுமே எனக்கு வேண்டாம். உம்மையே மேலும் சத்தியமாக நம்பி, சரணமடைந்து விட்டேன். என் உடல், பொருள், ஆவி அனைத்தும் உமதேயாகும். உமது திருவடித் தியானமொன்றே எனது உள்ளத்தில் நிலைத்திருக்கச் செய்யும். ஹேஸ்கந்தகுரோ! சரணம், சரணம், சரணமென்று முழுமனதுடன் பிரார்த்தித்து உன்னையே ஸ்ரீஸ்கந்தகுருநாதருக்கு அர்ப்பணம் செய்து விடு. ஸதாகாலமும் க்ஷேமத்துடனிருப்பாய்.

84. ஏ மனமே! செல்வம் ஓரிடத்திலும், நில்லாது சென்று கொண்டே இருக்கும். கடவுள் ஒருவரே அங்கிங்கெனாதபடி எங்கும் என்றென்றும் நிலைத்திருப்பாராவார். ஆனந்தமனைத்திற்கும், இருப்பிடமாய், வற்றாத கடலைப் போலுள்ளார் ஸ்ரீ ஸ்கந்தகுருநாதன் என்பதை நீ மறந்து விடாதே.

85. ஏ மனமே! பாவிகளுக்கே உலகப்பற்று அதிகமாக பெருக்கெடுக்கும். நீ எதையும் வேண்டாதே. உன்னையே

கடவுளுக்குக் கொடுத்து விடுவாயாகில் பாவமுன்னைத் தீண்டாது. நீ மேன்மக்களுள் மஹாபுருஷனுகிவிடுவாய் மறவாதே.

86. ஏ மனமே! எண்ணங்களைத் துறந்தவனே நற்கதியடைந்துய்யமுடியும். அகந்தையை வேருடன் களைந்தால் தான் ஜீவன் முக்தனுகமுடியும். ஸ்வர்க்கமும், நரகமும், உனக்குள்ளேதானிருக்கிறது. காமக்ரோதாதிகளின் விரிவே நரகமாகும். பக்தியோகத்தின் விரிவே ஸ்வர்க்கமாகும். உன்னிடம் மேல் கண்ட இரண்டில் எது அதிகமாக இருக்கிறதென்பது அந்தராத்மாவைக் கேட்டுத் தெரிந்து கொள். அந்தராத்மா சொன்னபடி செய்வாயானுல் நீ திருந்தி விடுவாய். உனக்கு மேலான இன்பம் கிடைக்கும். மறந்து விடாதே.

87. ஏ மனமே! உன்னுடைய உற்பத்தி ஸ்தானத்தை நான் கண்டு விட்டேன். நீ ஸங்கல்பத்திலிருந்து பிறந்துள்ளதை நான் இனி மறக்க மாட்டேன். உன்னை ஒழித்துக் கட்டுவதே எனது முதல் வேலையாகும். இனி உன் மாயா ஜால வித்தைகள் என்னிடம் பலிக்காது. ஸங்கல்பம் செய்தால் தானே நீ பிழைப்பாய். உனக்கு யமன் ஸங்கல்பமின்றி சும்மாயிருப்பதேயாகுமென்பதை என் ஸத்குருவின் மூலம் தெரிந்து கொண்டு, விட்டேன். இனி நீ யமலோகம் செல்ல வேண்டிய காலம் வந்து விட்டது ஜாக்ரதை.

88. ஏ மனமே! உன்னகத்தின் அழுக்கைப் போக்கிக் கொள்ள மறந்து, புறவழுக்கை மாத்திரம் போக்கிக் கொண்டு பார்ப்பவர் மெச்சும்படி நடந்துகொண்டால் போதுமா? சொல். உன்னகத்தின் அழுக்கைப்போக்கிகொள்ள வில்லையானுல், அதனுல் வரும் கேடுகளை சொல்கிறேன், கேள்: கேடுகளில் மிகப்பெரிய கேடு மறு பிறவியாகும். பிறப்பை அறுக்கவே நீ

பிறந்துள்ளாய். மனிதப் பிறவி மிகவும் அரிதாகக் கிடைக்கக் கூடியதென்பதை மறந்து விடாதே. அடுத்து வரும் பிறவியை யார் அறிவர். நாயோ, நரியோ, பன்றியோ, மிருகங்களோ. மனமே! நீ இப்பிறவிலேயே உன் மனவழுக்கைப் போக்கிக் கொள்ள சத்திய சங்கல்பம் செய்து கொண்டு விடு. மறு பிறவியில் நீ பைத்தியமாகவோ, அல்லது கூன், குருடாகவோ செவிடாகவோ, ஊமையாகவோ, பிறப்பாயானால் பிறவிப் பயனை அடைந்துய்ய முடியுமா? சொல். நினைத்துப்பார். பார்வையினால் நீ மறு பிறப்பைக்கண்டு நடுங்குவாய். உடை அழுக்கையும், உடல் அழுக்கையும் மாத்திரம் போக்கிக் கொண்டால் போதாது. மனவழுக்கைப் போக்கிக்கொள்ள முயற்சிப்பாயாக. சோம்பித் திரியாதே. சோம்பேரிகள் மறு பிறவியெடுத்து நரக வேதனைகளை அனுபவித்து துக்கப் படுவார்கள். ஜாக்ரதை.

மனமே! நரகத்தையும், ஸ்வர்க்கமாக்க மனவழுக்கைப் போக்கிக்கொள். ஸ்வர்க்கத்தை உனக்குள் நீ காண்பாய்.

89. ஏ மனமே! நீ எப்படி உய்யப் போகிறாய்? சொல். உன்னைக் கண்டு எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. நீயோ, உன்னைப் பற்றி கவலையில்லாமல் இருக்கிறாய். தன்னைப்பற்றி கவலைப்படாமல் பிறரை நினைத்துக் கவலைப் படுவதால் பிறவிப் பெருங்கடலை நீந்தி விட முடியுமா சொல். பிறவிப் பெருங்கடலில் (சிக்குண்டவர்கள்) மூழ்கினவர்கள் மீள முடியாதென்பதை மறுமுறையும் உனக்குச் சொல்கிறேன் கேள்: மனமே? நீ பிறவிப் பெருங்கடலைக் கடக்க உனக்கு அதி சுலபமான வழியொன்றை சொல்கிறேன். கேள்: சொன்னபடி செய்வாயானால் நீ கடலைக் கடப்பது மிகமிகச் சுலபமாகும். அந்த வழியைச் சொன்னால் நீயே ஆச்சரியப் படுவாய். அதுதான் நீ உன்னை அறிவதாகும். உன்னை நீயே அறிந்து கொண்டு விடுவாயானால் உன்கண்முன் உள்ள

பிறவிப் பெருங்கடலும், மற்றுமுள்ளவைகளும், மறைந்து போகும். மறந்தவைகள் அனைத்தையும் உன்மயமாகவே காண்பாய். தன்மயமாகவே நீ அனைத்தையும் காணும்போது மற்றவைகள் அனைத்தும் மறைந்து போகுமென்று மஹான்கள் கண்ட உண்மை ஆகும். மனமே! நீ இனிமேலாவது மறந்து விடாதே. ஜாக்ரதை. பிறவிப் பெருங்கடலைக் கடக்கும் வழியை மறவாதே, மறவாதே!

90. ஏ மனமே! நீ காணும் அனைத்தும் அழியக் கூடியவை என்பதை மறவாதே. உலகில் பல நூற்றுக் கணக்கான கோடி மக்கள் அழியக் கூடிய பொருள் களினிடத்தில் ஆசை வைத்து, அழிந்து போனார்கள். அழியக்கூடிய பொருள்களினிடத்தில் வைத்துள்ள ஆசையை நீ அழிவற்ற பரம் பொருளினிடத்தில் வைப்பாயானால், அழிவற்ற ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டு நீ சிரஞ்சீவியாக இருந்து வருவாய். மனமே! நீ எதனையும் விரும்பாதே. விருப்பும், வெறுப்பும், உனக்கு வேண்டாம். இரண்டுமுனக்கு இன்னல்களைத் தரும், இரு விலங்காகும். சத்ருவாகும். மனிதனுக்கு முதல் சத்ருயாரென்று நினைத்தாய், அதுதான் ஆசை. ஆசை இருக்குமளவு அழிவற்ற ஆனந்தத்தை நீ அனுபவிக்க முடியாது. இதுவரை நீ ஆசைப் பட்டதினால் என்ன சுகத்தைக் கண்டாய். நினைத்துப் பார். முடிவில் அனைத்திலும் துன்பத்தையே உணர்வாய். மனமே! ஆசையை அறவே விட்டுவிடு. உனக்கு க்ஷேமம் உண்டாகும். மறுபடியும் உனக்குச் சொல்கிறேன் ஆசையை விட்டு விடு. ஆசையிருக்குமிடம் நரகமாகும் மறவாதே! மறவாதே!! மறவாதே!!!

91. ஏ மனமே! நீ காணும் பிற உயிர்கள் வேறு, உன்னுயிர் வேறு என்று நினைக்கிறாய். ஒவ்வொரு உயிர்க்கும், உயிராயிருப்பவள் எல்லாம் வல்ல பராசக்தியாகும் என்பதை

நம்பு. உனக்கு அமைதியும், ஆனந்தமும் வேண்டுமென்றால் நீ காணும் உயிர்கள் அனைத்தையும் உன் உயிராகவே நம்பிவிடு. உயிர்களிடத்தில் உனக்கு பேதா பேதம் வேண்டாம். எல்லோருடைய உயிரும் ஒன்றே உயிர்களிடத்தில் வேற்றுமைக்கு இடமேது மனமே! நீ எந்நாளும் துன்பமில்லாமல் இன்புற்றிருக்க வேண்டுமா? மரணமில்லாப் பெருவாழ்வை பெற்றுய்ய வேண்டுமானால் நான் சொல்வதை நம்பு. சொன்னபடிகேள். சுகப்படுவாய். மனமே! நீ காணும் உயிர்களும், உன் உயிரும், அனைத்தும் ஒன்றேதான். நீ காணும் ஒவ்வொரு உயிருக்கும் உயிராக நீ வழிபடும் பராசக்தியான அன்னை ஸ்ரீ புவனேஸ்வரி இருந்து வருவதால் தான் ஒவ்வொரு உயிரும் நடமாடிக் கொண்டும், உயிருடன் கர்மங்களைச் செய்து வருகின்றது. உயிர்களில் சக்தியில்லையென்றால் அந்த உயிர் ஜீவித்திருக்க முடியுமா? சொல். நீ காணும் ஸ்தாவர ஜங்கமங்கள் அனைத்திற்கும் உயிர் இருப்பதைக் கண்டு வருகிறாய் அல்லவா? அந்த உயிர்கள் அனைத்திடத்திலும் உயிருக்கு உயிராக வழிபடும் பராசக்தியிலிருந்து வருவதால் நீ அனைத்திடத்திலும் (உயிர்கள் அனைத்திடத்திலும்) நீ வழிபடும் அன்னையைக் கண்டு வழிபடுவதே தேவி வழிபாடாகும். மறவாதே! ஒவ்வொரு உயிர்களிடத்திலும் நீ அன்னையைக் கண்டு இம்மையில் அழிவற்ற ஆனந்தத்தை பெற்றுய்வாயாக.

92. ஏ மனமே! உனக்கு ஒரு வார்த்தை சொல்கிறேன். கேள். நீ அஹங்காரத்தினால் நானே கர்த்தா, நானே போக்தா என்றும் அழியக் கூடிய சரீரத்தையே ஆத்மாவென்று நம்பி ஏமார்ந்தது போதும். நீ இடைவிடாமல் நான்யார், நான் என்பது எது, இந்த உடலில் நான் என்பது எது, எந்த உறுப்பை நான் என்று சொல்வது என்றெல்லாம் விசாரித்துப் பார். உன் உடலில் உள்ள ஒவ்வொன்றிற்கும் பெயர்களிருக்கும் போது, நீ எதை நான் என்று தொட்டுக்

காண்பிப்பாய்? சொல். மனமே!அழியக் கூடிய சரீரத்தை நீ யென்று சொல்லியேமாந்தது போதும். இனியும் ஏமாறு வாயேல் பொல்லாத பிறவிப் பிணி உன்னைப்பற்றிக் கொண்டு விடும். ஜாக்ரதை. நான்யாரென்று உன்னை நீயேகேள். இடை விடாமல்கேள். உன்னை நீ அறிவாய். உன்னை நீ அறிய உனக்கு என்ன சிரமம் சொல். ஏன் சிரமப்படுகின்றாய்? மலையைப் புரட்டுவது மாதிரி சிரமப்படுகிறாயே. முட்டாளே! உன்னை நீ யறிய முடியவில்லை யென்றால் பிறகு நீ எதை அறிய முடியும் தன்னையறியாமல் பிறரையோ, பிறவற்றையோ அறிந்தேன் என்பது மிகவும் வெட்கப்படக்கூடிய காரியமாகும். உன்னை நீ அறிய முடியா விட்டால் நீயிருப்பது பூமிக்கு ஒரு பெரிய பாரமாகும். நீ உயிருடனிருப்பதை விட இறப்பதே மேல். உன்னை நீ இம்மையில் அறிந்து கொள்ளாமல் அரை நிமிஷமும் நீ உயிருடன் ஜீவித்திருக்கக் கூடாது. உன்னை அறியாமல் நீ உயிருடனிருப்பினும் மஹான்கள் உன்னை நடைப் பிணமாகவே நினைப்பார்கள். மறவாதே.

93 ஏ மனமே! நீ மேன்மையடைய ஆன்மீகவொளியை உன் உள்ளத்தில் நீ கண்டுகளிக்க உனக்கு ஒரு ரகசியத்தைச் சொல்கிறேன் கேள். மறந்து விடாதே. சம்சார சேற்றினின்றும் விடுபட்டு நீ குறையற்ற பேரின்ப சாகரத்தில் திளைப்பாய். உண்மையாக நம்பு. நமனை ஜயித்து, சிரஞ்சீவியாக ப்ரும்மா னந்தத்தை அனுபவித்துக் கொண்டு நடமாடும் இறைவனாக நீ மாறிவிடுவாய். நான் சொல்வதைக் கேள். மனமே! உன்னுடைய உயிருக்குயிரைக் கொடுத்துக்கொண்டு, ஜகன் மாதா ஸ்ரீ புவனேஸ்வரி உன் ஹ்ருதயத்திற்குள் உன் ஆத்மா வாகவே இருந்து வருகிறாள் என்பதை நீ சொப்பனத்திலும் மறவாதே. உன் எண்ணங்கள், செயல்களனைத்தையும் அன்னை உன் உள்ளிருந்து பார்வையிட்டுக்கொண்டு இருக் கிறாள். ஆதலால் நீ இடைவிடாமல் (சதா) அன்னையை உன் உயிராகவே நம்பி வழிபட்டு வா. உன் ஜீவாத்மாவாகவே

அன்னை இருக்கிருள் என்பதை நம்பிவிடு. நீ உயிருடன் இருப்பதற்குக் காரணம் அன்னை உனக்குள் உனது ஆத்மாவாகவே இருப்பதால் தான் என்பதை மறவாதே. உனக்குள்ளிருக்கும் தேவியை மறந்து விடுவதாலேயே உனக்குக் கொடிய பிறவித் துன்பங்கள் உண்டாகின்றன. நான் சொல்வதை மறவாதே. நம்பு, நம்பிக்கைகொள். மனக்கவலை உன்னை விட்டு ஒழிந்து போகும். உன் கண்களை இமை காப்பது போல உன் உள்ளத்துள்ள அன்னையை உன் உயிராகவே நம்பி வழிபட்டுவா. நீ காணும் உயிர்கள் அனைத்திலும் அன்னை இருப்பது சத்தியமாகும். சத்திய சங்கல்பம் செய்து கொள். ஒவ்வொரு உயிரையும் அன்னை பராசக்தியாகக் கண்டு வருவேன் என்று உறுதிகொள். நீ மேன்மை அடைவாய். நீ இம்மையில் நன்மைகளைப் பெற்றுய்வாய் நம்பு.

94. ஏ மனமே! நீ அழியாப் பேரின்ப நிலையை அடைந்துய்ய சுலபமான வழியைச் சொல்கிறேன் கேள். கேட்பதோடு இருந்து விடாதே. உன் சுபாவம் எனக்குத் தெரியும். சோம்பேறியாய் காலத்தைக் கழித்தது போதும். சோம்பேறிகளுக்கு நரகம் சிருஷ்டிக்கப்பட்டுள்ள தென்பதை மறுமுறையும் உனக்குத் தெரியப்படுத்துகிறேன். கிடைக்கக் கூடாத மனிதப் பிறவி உனக்கு கிட்டியிருக்கிறது. மறுபிறவியில் நீ மனிதனுகப் பிறப்பாய் என்பது என்ன நிச்சயம் சொல்? மனமே! விழித்துக் கொள்.. உறங்கினது போதும். நீ செய்த தவறுகளை நினைத்து எல்லாம் வல்ல பராசக்தியான அன்னை ஸ்ரீ புவனேஸ்வரியிடம் பிரார்த்திப்பாயாக. உன் பிரார்த்தனையால் உன்னை அன்னை மன்னிப்பாள். உண்மையாகப் பிரார்த்தித்து வா. உள்ளமுருக பிரார்த்தனையைச் செய். அழுதால் அன்னையைப் பெறலாம். வீணுக அச்சப்பட்டு மனக்கவலையோடு இருந்தது போதும். நீ அன்னையின் பிரார்த்தனையுடன் எல்லாவிடத்தையும் பார்த்துவா. நீ காண்பவர்கள் அனைவரையும் தேவியின்

நடமாடும் கோவிலாக நம்பு. நடமாடும் ஜீவர்கள் அனைவர்களுடைய உள்ளத்திலும் அன்னை ஜீவாத்மாவாகவேயிருந்து வருகிருள். நீ எல்லோரிடத்தும் தேவியின் தர்சனத்தை உணர்வதின் மூலம் அமைதியையும், அழிவற்ற ஆனந்தத்தையும், அனுபவித்து இம்மையில் ஜீவன் முக்தனுக நீ மாறி விடுவாய். மனமே! கவலைப்படுவதை விட்டுவிடு. உனக்கு நல்ல காலம் வந்துவிட்டது. சமயத்தை வீணுக்காதே. சொன்னபடி செய்து நித்யானந்தத்தில் திளைத்து இன்புறுவாயாகுக.

95. ஏ மனமே! தியாகம் செய். தியாகமின்றி விடுதலையில்லை. தியாகமின்றி கடவுள் பக்தி உண்டாகாது.

96. ஏ மனமே! இந்த உடலினுள்ளே இருக்கின்ற ஆன்மாவை காண்பதே உன் கடமையாக இருக்கட்டும்.

97. ஏ மனமே! உன்னுள்ளத்தில் கள்ள மிருத்தல் கூடாது.

98. ஏ மனிதா! உன் மனத்தகத்து ஸ்கந்தகுருநாதன் மனசாக்ஷியாயிருந்து வருவதை மறந்து விடாதே.

99. ஏ மனமே! உன் உயிருக்கும் உயிராயிருப்பவன் ஸ்ரீ ஸ்கந்தகுருநாதன். அவனே உனது நாயகன். மறவாதே.

100. ஏ மனமே! உன்னுடைய மணுளன் ஸ்கந்தகுரு. உன் மனத்தகத்து வீற்றிருக்கிருன். ஜாக்ரதை.

101. ஏ மனமே! ஞானமுண்டாகாதவாறு உன்னைக் கெடுப்பது புண்ய பாவங்கள் தான்.

102. ஏ மனமே! காமத்தை யமனுக நம்பிவிடு.

---

*அதிஷ்டானம், புதுக்கோட்டை*

103. ஏ மனமே! உன் மனைவியையும், வீட்டையும் யமனின் இருப்பிடமாக நம்பி ஜாக்ரதையாக இருந்துவா.

104. ஏ மனமே! காமம் உன்னோடு பிரியமாக இருந்து கொண்டு உன்னை உயிருள்ளவரை கெடுத்துக் கொண்டே இருக்குமென்பதை நீ மறந்துவிடாதே.

105. ஏ மனமே! ஸங்கல்பம் செய்யாமலிருப்பாயானால், நீ காமத்தை ஜயித்தவனாவாய்.

106. ஏ மனமே! உனக்கு வரும் எல்லாத் துன்பங்களுக்கும் பணமே மூலகாரண மென்பதை மறந்து விடாதே.

107. ஏ மனமே! பணமுன்னுடைய பிறப்பை விளக்கி விடுகிறது என்பதை நம்புவாயாக.

108. செல்வத்தை அடைவதினால் ஏ மனமே! உனக்கு லோபம், கோபம், டம்பம், மதம், பொறாமை எல்லாம் வ்ருத்தி யடைகிறது என்பதை ஞாபகத்தில் கொள்.

109. ஏ மனமே! வாக்கினாலும், மனசினாலும், சரீரத் தாலும் எந்த பிராணிகளுக்கும் துன்பத்தை உண்டாக்கா மலிருப்பதே அஹிம்ஸை ஆகும் என்பதை மறவாதே.

110. ஏ மனமே! நீ ஒன்றையும் பற்றிக் கொள்ளாம லிருப்பதே உனக்கு விடுதலை ஆகும். விடுதலை வேண்டுமானால் பற்றை உடன் விட்டுவிடு.

111. ஏ மனமே! இந்திரியங்களை அடக்குவதே உனக்கு அப்யாஸமாகயிருந்து விடட்டும்.

112. ஏ மனமே! உனக்கு பற்பல பிணிகளும், கிழட்டுத் தனமும், புத்திக் கலக்கமும், மரணமும் வருவதற்கு முன்னதாக நீ கடவுளை (முருகனை) ஸத்யமாக நம்பிவிடு. கடைத்தேறி விடுவாய்.

113. ஏ மனமே! நீ பந்தப்பட்டிருக்கும் வரை உனக்கு ச்ரேயஸ் கிட்டாது.

114. ஏ மனிதா! உன்மனம் பிரசன்னமாயிருக்க வேண்டுமானல் நீ பிறர்பொருள்களின் ஆசையை விடு. பிறருக்கு தீங்கு செய்யாதே. பிறரை நிந்திக்காதே. பிறர் மனைவிகளைத் தாயாக நினைத்துக்கொள்.

115. ஏ மனிதா! உன்மனம் தெளிவடைய நீ பிறரைக் கண்டு அஸூயைப் படாதே. ஒருக்காலும் பிறருக்கு துக்கத்தை உண்டு பண்ணுதே. தன்னைப்போலவே நீ பிறரையும் பார்த்துவா.

116. ஏ மனமே! நீ தெளிவடைய மிகமிகப் பொறுமையாகவும், ச்ரத்தாபக்தியுடனும், ஸத்குருவையும், ஈசனையும் இடைவிடாமல் ஸேவித்து வருவாயாக.

117. ஏ மனமே! நீ சாஸ்திரங்களுக்குக் கட்டுப்பட்டு நடப்பாயானல் உன் மனம் தெளிவை அடையும்.

118. ஏ மனிதா! உனக்கு இம்மையில் முக்தி வேண்டுமென்ருல் அகத்திலும், புறத்திலும் ஆசையற்றவனுகி விடு. காமக்ரோதாதிகள் அற்ற குளிர்ந்த மனமுடையவனுக இருந்துவா.

119. ஏ மனிதா! ஸத்வ குணமுள்ள உணவை அளவாக உட்கொண்டுவா. தனிமையாக இரு. மிதமாகவும், அவசிய மானதை மட்டும் இனிமையாகப் பேசு. அதிக தூக்கம், ஸஞ்சாரம் கூடாது. காலம் தவருமல் வழிபட்டுவா. சீக்கிரத்தில் உன்மனம் தெளிவடையும்.

120. ஏ மனிதா! முதலில் உன் மனத்திலுள்ள தோஷங்களையெலாம் விலக்கிவிடு. மோக்ஷம் உனக்கு ப்ரஸன்னமாகும்.

---

அதிஷ்டானம், புதுக்கோட்டை.
5—350

121. ஏ மனமே! நீ எங்கே பார்த்தாலும் அங்கெல்லாம் பராசக்தியாம் அன்னை ஒருவளையே கண்டுவா.

122. ஏ மனமே! தூணிலும், சிறு துரும்பிலும் பராசக்தியைக் கண்டு வருவாயானால் நீ அனைத்தையுமே வென்று விடுவாய்.

123. ஏ மனமே! நீ கடைத்தேற வேண்டுமானால் ஒவ்வொரு ஸ்தீரியையும் பராசக்தியின் வடிவமாகவே கண்டு வா.

124. ஏ மனமே! நீ காமத்தை வெல்ல வேண்டுமானால் ஸ்தீரிகளை ஜகன் மாதாவின் வடிவமாகவே கருதி விடுவாயாக.

125. ஏ மனமே! பராசக்தியாம் அன்னை அனைத்துள்ளும், புறமும், இருந்து வருகிருள் என்பதை மறந்து விடாதே.

126. உருவ வழிபாட்டின் மூலம் பேரின்பத்தை அடைந்துய்ய முடியும்.

127. ஏ மனமே! உன்னுடைய இஷ்ட தெய்வமே உலகத்தின் நலத்திற்காக மற்றெல்லா தெய்வங்களுமாக மாறி அருள்பாலிப்பதாக நம்பிவிடு.

128. ஏ மனமே! முப்பத்து முக்கோடி தேவதைகளும் உன்னிஷ்ட தெய்வத்துள் அடக்கமாகி விடுகிற தென்பதை நம்பி விடுவாயாகுக.

129. ஏ மனமே! உனக்குள் அந்தராத்மாவாய் உறைபவன் நீ வணங்கும் கடவுளேயாகும் என்பதை மறவாதே.

130. ஏ மனமே! நீ துன்பத்திலிருந்து விடுபடவே பராசக்தியை வழிபடுவதாக நினை.

131. தெய்வங்களால் கொடுக்கப்பட்டதை தேவதைகளுக்குக் கொடுக்காமல் எவன் அனுபவிக்கிருனோ, அவன் மிகப் பெரிய திருடனுவான்.

132. ஏ மனமே! உயிருக்கு உணவு முக்கியத்தைப் போல் உனக்கு வழிபாடு (ஜபத்யானம்) முக்யமானதென்பதை மறந்து விடாதே.

133. ஏ மனமே! மனிதனைக் கடவுளோடு இணைப்பது மந்திரமாகும் என்பதை மறந்து விடாதே.

134. ஏ மனமே உன்னுடலைக் கோவிலாகவும், உன்னுள்ளத்தை கர்பக்கிரஹமாகவும். அதனுள் நீ வழிபடும் கடவுளையும் கண்டுவா.

135. ஏ மனமே! உன்னை நீயறிந்து கொண்டவுடன் தானே எங்குள்ள வஸ்து என்பதை உறுதியாக உணர்ந்து கொள்வாய். பிறகு பயமற்றவனுகி ஜீவன் முக்தனுகவே திகழ்வாய்.

136. ஏ மனமே! தன்னை உணர்ந்தவன் கவலையின்றி, குலைக்க வொண்ணுத அமைதியுடனிருந்து வருவான்.

137. ஏ மனிதா! நீ ஒரு யாத்ரீகனே, மெய்ப்பொருளை மறந்து விடாதே. யாத்திரை முடியும் தருணம் நெருங்கி விட்டது. ஜாக்ரதை.

138. ஏ மனமே! தினந்தோறும் நல்லவர்களை பின்பற்றிவிடு. கெட்டவர்களை நீ பார்த்ததால் அவர்களிடமுள்ள தீயகுணம் உன்னிடமிருப்பின் உடனடியாகத் திருத்திக்கொள்.

139. ஏ மனமே! தான் செய்யும் முதல் தவறைத் திருத்திக் கொள்ளாதவன் கடைசிவரைத்தவறு செய்து கொண்டே இருப்பான். மறவாதே.

---

140. ஏ மனமே! நீ இம்மையில் க்ஷேமத்தை அடைய முதலிலுனக்கு உன்னை முருகன் திருவடியில் தியாகம் செய்து விடு.

141. ஏ மனமே! பிரயத்தனமில்லாமல் சோம்பேறியாயிருந்து கொண்டு சுகம் வேண்மென்கிறுயே. சோம்பேரி மிகப் பெரிய தவறுகளைச் செய்து அதன் பலனையும் இம்மையில் அனுபவிப்பான் என்பதை மறவாதே.

142. ஏ மனமே! கஷ்டப்படுகிறேனென்று கடவுளிடம் கதறினால் மாத்திரம் போதுமா? முதலில் பாபத்தைச் செய்வதில்லையென உறுதி கொண்டு விடு. கஷ்டம் விலகிப் போய் விடும்.

143. ஏ மனமே! பிறர் புகழ்வதாக நீ செய்யும் கைங்கர்யத்தைக் கண்டு பல்லாயிரம் பேர்கள் பேசுகிறுர்கள் என்பதையும் நீ நன்கறிந்து கொண்டு, கடவுளுக்குக் கைங்கர்யம் செய்தேன். ஆனல் கஷ்டப்படுகிறேன். கடவுள் நம்பிக்கை உள்ளவர்களுக்கு இக்காலம் சரியில்லை. தெய்வத்தை நம்பிச் செய்ததான தர்மம், கைங்கர்யம் எல்லாம் பிரயோஜனமில்லை. என்றும் நொந்து கொள்கிறுயே மனமே! கடவுள் மெச்சுவதற்காக நீ என்ன கைங்கர்யம் இதுவரை செய்துள்ளாய். கடவுள் உன்னைக் காப்பார். மக்கள் புகழ்வதற்காக நீ கைங்கர்யம் செய்தாய். பல்லாயிரம் மக்கள் உன்னை இம்மையில் புகழ்ந்து கொண்டு தானே இருக்கின்றுர்கள். மக்கள் புகழும்போது உனக்கு எவ்வளவு சந்தோஷம். தலைகால் தெரியாமல் புகழ்ச்சியை கேட்டு இறுமாந்திருந்தாயே அதுசமயம் கடவுளைப் பற்றிய கனவாவது உனக்கு உண்டா சொல். மனமே! கடவுளைக் குறை கூறுதே. இனியாவது கடவுள் மெச்சும்படியான நிஷ்காம்ய கர்மாவை உடனடியாகச் செய்யத் துணிந்துவிடு. கடவுளின் திருவருள்

உன்னை தெய்வமாக்கி விடும் மறவாதே. துணிந்து பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பாராமல் கைங்கர்யத்தை ஈஸ்வரார்ப் பணமாக செய்துவா. நீ இறைவன் திருவருள் மயமாகி விடுவாய் மறவாதே.

144. ஏ மனமே! இனி மேலாவது முழு மனதுடன் புண்ணியத்தைச் செய்வேன் என்று உறுதி கொள்வாயாகுக. நீ முன்பு செய்த பாவத்தின் பலன் உன்னை மீண்டும் பிறவிக்கு ஆளாக்கி விட்டது ஜாக்ரதை.

145. ஏ மனமே! உன்னிடம் முழுமனதுடன் கூடிய பக்தியிருக்குமானால் திருவருள் சக்தி உனக்கு உண்டாகிவிடும். நீ அனைவருக்கும் பேரின்ப வழியைக் காட்ட வல்லவனாவாய்.

146. ஏ மனமே! உறவினர்களுக்காக நீ உயிர் வாழாதே. பலகோடி, கோடி மக்களும், மிருகங்களும், புழுக்களும், உணவு ஒன்றிற்காகவே உயிர் வாழ்ந்து வருகிறது. முன் செய்த தவப்பயனால் நல்ல ஜன்மம் கிட்டி உள்ளது. மனமே! அன்னை ஒருவளையே சிக்கெனப் பற்றிக் கொண்டுவிடு. நீ காணுமிடமெலாம் தேவி ஸ்ரீபுவனேஸ்வரி மாதாவைக் கண்டு போற்றி, வணங்கு. எல்லோர் மனத்திலுள்ளும் எல்லாம் வல்ல பராசக்தி ஒருவளே இருந்து வருகிறாள். அவளை உன் அறிவிற்கும் அறிவாகக் கண்டு கொள். அருட்கடலில் திளைத்து மகிழ்வாய்.

147. ஏ மனமே! அக்ஞானம் ஒழிய வேண்டுமானால் அன்னை ஒருவளையே நெக்குருக வழிபடு. ஆத்ம சுத்தி சுலபமாகக் கிட்டி விடும். இகத்திலும், பரத்திலும், இன்புறு வாய். நம்பு. நம்பு.

148. ஏ மனமே! உனக்கு, ஆர்பாட்டமும், ஆணவமும் வேண்டாம். அகந்தை இருக்கும்வரை அன்னை அருள் கிட்டாது.

சக்தி ஒருவனையே சரணமடைந்து விடு. கவலை அகன்றுவிடும். சுகமுதையமாகும்.

149. ஏ மனமே! உயர்ந்த பதவிகளுக்கும், அதிகாரத்திற்கும் நீ ஆசைப்படுவாயானால் அதர்ம வழியில் சென்றேயாக வேண்டிவரும். தர்மத்தை மறந்து விடுவாய். நிச்சயம் உனக்கு நரகமே கிட்டும் ஜாக்ரதை.

150. ஏ மனமே! புகழுக்காகவல்லவா நீ கைங்கர்யம் செய்கிறாய். பணத்திற்காகவே போற்றவும் செய்கிறாய். இரண்டுமுன்னை மேலும் கவலைச் சுழலில் சிக்க வைத்து உயிருடன் சித்ரவதை செய்யப் போகிறதை நீ மறந்து விடாதே. ஜாக்ரதை.

151. ஏ மனமே! பெருமைக்கு ஆசைப்பட்டு துன்புறுத்துகிறாயே. உனக்கு வெட்கமில்லை. புகழும், பெயரும், பெருமையும், உன்னைப் புண்படுத்த கங்கணம் கட்டிக் கொண்டுள்ளதை மறவாதே. ஜாக்ரதை.

152. ஏ மனமே! நீ தர்மத்தினின்றும் நழுவினால் நிச்சயமாக சாதுக்கள் உன்னை விட்டு விலகி விடுவார்கள். எல்லோரும் உன்னை அவமதிப்பார்கள். அவமானமடைந்தவன் நல்லோர் கூட்டத்தினின்றும் மறைந்து வாழ வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகும்.

மனமே! உன்னுடைய ஸ்வதர்மத்தை மறவாதே. உறுதியாக ஸ்வதர்மத்தையே பின்பற்றி நட. வெட்கப்படாதே. ஸ்வதர்ம பாரிபாலனம் செய்பவனைக் கண்டு, தேவரிஷி, சாதுக்கள், அனைவரும் சந்தோஷப்பட்டு ஆசீர்வதிப்பார்கள். உனக்கு மேலும் க்ஷேமமுண்டாகும்.

---

*ஸ்ரீஸ்கந்தாச்ரமம், சேலம் – 14*

153. ஏ மனமே! உனக்கு வெளிஉலகப்பார்வை உள்ள வரை தீராத துக்கத்தையும், நீ அனுபவித்தே தீரவேண்டும். ஆத்மா ஒன்றே சத்தியமாக உள்ளது. அதுவே உண்மையானதும் ஆகும். நீ ஆத்மானந்த சுகத்தை அனுபவிக்கவே பிறந்துள்ளாய். வெளியில் காணுவதனைத்தும் பொய்யாகும். பொய்யை, மெய்யென்று நம்பினவனுக்கு சுகம் கிட்டவே கிட்டாது. அழிவற்ற சுகம் உனக்குள்ளேயிருக்கிறது. மறவாதே. ஆத்மானந்தமான நிரந்தர சுகத்தை உடனடியாக உனக்குள்ளே தேடு. வெள்ளியிலா உன்னுடைய ஆத்மாயிருக்கிறது. ஆத்மாவை வெளியில் தேடிக்காணப்புறப்பட்டவன் மீளவேமுடியாது. அவன் அதோகதிக்கே ஆளாக நேரிடும். மனமே! ஆத்மா உனக்குள்ளேயே இருப்பதால் உன்னிடமே ஆத்மசுகம் இருக்கின்றது. கனவிலும் மறந்துவிடாதே வெளியில் தேடி ஏமாருதே. ஜாக்ரதை.

154. ஏ மனமே! ஆத்மாவை வெளியில் தேடுபவன் படித்த முட்டாள். ஸகல சௌகர்யமும் இருப்பவன் தண்ணீருக்கு வெளியில் செல்ல மாட்டான். தன்பூமியில் கிணறுவெட்டி, தன்வீட்டினுள் மறைந்திருந்த தண்ணீரைக் கொண்டுவந்து அனுபவிப்பான்.

உனக்கோ உடலில் தெம்பிருக்கிறது. அறிவிற்கோ குறைவில்லை. நல்ல ஸத்ஸங்கத்திற்கும் குறைவில்லை. இவ்வளவிருந்தும் மேலும் ஆத்மாவைத்தேடி ஓடுவது, தன்னுடலிலுள்ள கஸ்தூரியைத் தேடி ஓடி மடியும் மானுக்கு சமமாவாய். மானிற்கோ பகுத்தறிவில்லை. உனக்கு பகுத்தறிவு இருப்பினும் நீயே பறைசாற்றிக்கொண்டு இருக்கிருய். ஏமாருதே. ஜாக்ரதை.

155. ஏ மனமே! மாயப்பிரபஞ்சத்தில் நீயேன் ஆசை வைக்கிருய். இறைவன் உன்னை இதற்காகவா படைத்தான்.

ஆசைப் படுவதால்தான் உலகில் மனிதனுக்கு எல்லா துன்பங்களும் உண்டாகின்றதை நீ கண்டு கொண்டிருந்தும், மேலும் மாயப் பிரபஞ்சத்தில் நீ ஆசைவைப்பதானது பகுத்தறிவுள்ள மனிதன் மலமென நன்கு அறிந்தும், அதைத்தின்று உயிர் வாழும், பன்றிக்கும், புழுவிற்கும், சமானவான். கக்கியதை திரும்பத் தின்பது நாய்களின் குணமாகும். மனமே, உலகம் மித்யை, உலகம் மாயாகாரியம், உலகஇச்சையால் துக்கமே உண்டாகிறது. இவ்வுலக மாயையில் விழாதீர்கள். கடுகளவு சுகம்கூட வெளி உலகில் இல்லை. எல்லாம் வெளிமயக்கமே தான், என்று மஹான்கள் பறை சாற்றுவதை எழுதி வைத்துக் கொண்டு பாராயணம் செய்வதால் துக்கமே நீங்கி விடுமென்று நினைத்தாயோ. மனமே! உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளாதே. பிறரை ஏமாற்றுபவனை வேண்டுமானால் கெட்டிக்காரன் என்று கூறலாம். தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்பவனை என்னவென்று பேர் சொல்லி அழைப்பது. முட்டாளே! படித்தால் போதாது. பேசினால் போதாது. ஸத்ஸங்கம் செய்து விட்டால் மாத்திரம் போதுமா? சொல். படித்தபடி நடப்பவனே சுகமடைந்துய்ய முடியுமென்பதை மறவாதே நம்பு.

156. ஏ மனமே! தெய்வங்களை நம்புவதால்தான் உண்மையான சந்தோஷத்தை நீ அனுபவிக்கமுடியும். கடவுள் உன்னைப் பகுத்தறிவுள்ளவனாகப் படைத்ததற்கு அவருக்கு நீ செய்யும் நன்றி கடவுளை மறவாதிருப்பது ஒன்றேதான் என்பதை மறவாதே. உதவிபெற்றவன் நன்றி செலுத்தாவிடில் நன்றி கெட்ட துரோகியாவான். மறவாதே.

157. ஏ மனமே! உன்னுடைய குறிக்கோள், நோக்கங்கள் ஈடேற வேண்டுமென்றால் உனக்கு கடவுளிடம் அசையாத நம்பிக்கை ஒன்று இருந்தால் போதும். கடவுளிடம் அசையாத நம்பிக்கையோடு கூடின பக்திஒன்றே உன் துக்கங்களைப்

போக்கும் மிகப் புனிதமான அருமருந்தாகும். அசையாத நம்பிக்கையுடைய பக்தனுக்கே எதுவரினும் அனைத்தையும் தாங்கிக்கொள்ளக் கூடிய சகிப்புத்தன்மை உண்டாகும். பக்தி யற்றவனுக்கு, நம்பிக்கை அற்றவனுக்குத் துயரங்கள் கடலலை போலிருந்து கொண்டேயிருக்கும் என்பதை மறவாதே. மனமே சத்தியமாக கடவுளை நம்பி விடு. உன்துயரங் களனைத்தும் நொடிப்பொழுதில் இருந்தவிடம் தெரியாமல் மறைந்து போகும். கடவுளை உடன் நம்பிவிடு. மறவாதே! மறவாதே!!

158. ஏ மனமே! உன்னாலான வகையில் பிறருக்கு சரீரத்தாலோ, பணத்தாலோ, புத்தியினாலோ, உதவிசெய்து கொண்டேயிரு. உனக்கு செல்வாக்கிருக்கும் போது, அதை நீ பிறருக்கு உதவவில்லையெனில் நீ மிகப்பெரிய குற்றவாளி யாவாய். சேவை, கைங்கர்யம் செய்ய வாய்ப்பிருக்கும்போது அதைச் செய்யாதவன் மிகப்பெரிய நஷ்டத்திற்குள்ளாவான் என்பதை மறவாதே.

159. ஏ மனமே! சமூக சேவை, குருசேவை, தெய்வ கைங்கர்யம் என்றெல்லாம் பொய் சொல்லி பிறரை வஞ்சிக் காதே. பொய் பேசுபவன் மனம் சூறாவளிக்காற்றில் அகப்பட்ட பஞ்சுபோல் கஷ்டப்படும். நீ கற்ற வித்தை யெலாம் உன்னிடமுள்ள பொய், சூது வாதுகளை, உன்னால் ஒழிக்க முடியவில்லையே, படிப்பில்லாத பாமர மக்களெனப் படுவோரிடம் அதிகமான நேர்மைகளிருப்பதைபார். உன்னுடைய பொய்யினால், நீ கெடுவதல்லாமல் எல்லோரை யும் தாறுமாறாக நடக்கச் செய்துவிடுகிறாய் என்பதை ஏன் நீ இன்னும் உணரவில்லை. உலகம் பொய். நீ காண்பதனைத்தும் மறைந்து போகக் கூடியதாகும். தோற்றமும் அழிந்து போகும். அழிவற்ற உன்னை நீ முதலில் அறிந்து கொண்டு விடு. பிறகு நீ ஒரு தவறும் செய்யமாட்டாய். உன்னால்

உனக்கு கஷ்டம் நேராது. உன்னை நீ அறியாத வரை நீ பூமிக்குப் பெரிய பாரமாவதுடன் மிகப் பெரிய துரோகியும், துஷ்டனுமாவாய் என்கிற வேதாந்த வசனங்களை நீ ஏன் மறந்து விடுகிறாய். வேதாந்தங்களை சத்யமாக நம்பு. நம்பினவன் கெடமாட்டான். மேலும் உன்னை நீயே கெடுத்துக் கொள்ளாதே. தன்னைத்தானே நம்பவேண்டும் உன்னையே நீ நம்பிவிடு. நீயல்லாத வேறு ஒன்றை உலகில் காணமாட்டாய் நம்பு..நம்பு!

160. ஏ மனமே! இடைவிடாமல் இறைவனையே நினைத்து போற்றி ஏற்றி வா. எறும்பு ஊர கல்லும் தேய்ந்துபோகும் என்ற பழமொழிப்படி மனமாகிய கல்லும், இடைவிடா ஜபத்தியானத்தால் கரைந்து போகும். நல்ல எண்ணத்தையே ஸ்தா நினைப்பவனுள்ளத்தில் நல்லவைகளே, நல்ல எண்ணமே பதிவாகி விடுவதால் அவன் மக்களுள் மிகமிக நல்லவனாகி எல்லோராலும் புகழப்பட்டு கீர்த்தியுடனும் வாழ்வான். மனமே! உன்னுடைய வருங்கால நலனைக்கோரி உனக்கு ஞாபகப்படுத்துகிறேன், ஸதாகாலமும் இறைவன் நாம ஜபத்தை நாத்தழும்பேற ஏற்றிவா. கனவிலும் பொய் சொல்லாதே. பொய்மையை சாதிப்பது மிகப்பெரிய தவறாகும். பொய் சொல்லாதவனுக்கு மந்திரங்கள் உடனடியாக சித்தியாகிவிடும். பொய் சொல்லிக்கொண்டே ஜபத்தியானம், பஜனை, தான தர்மங்கள் செய்து கொண்டு இருப்பதானது சாம்பலில் செய்யப்படும் ஆஹுதிக்குச் சமானமாகும். மனமே! ஜாக்ரதையாக இரு. பேய்கள் உன்னை பொய்யனாக்க கங்கணம் கட்டிக்கொண்டு உன்னையே மேய வருகிறது. ஏமாந்து விடாதே. தலைபோனாலும் போகட்டும். பொய் சொல்லாதே. அதுவே தவத்திற்கெல்லாம் மிகப்பெரிய தவமாகும். பொய் சொல்லாதவன் பேசும் பேச்செல்லாம் மந்த்ரமாகிவிடும். அனைத்தும் பலித்துவிடும். மறவாதே.

161. ஏ மனமே! எது முக்கியமோ அதை நீ மறந்து விடுகிறாய். பிறவியைக் கொடுக்கும் பெரும்பணிகளில் முழு மனதுடன் வேலைசெய்கிறாய். நீ மேலும் பிறவியெடுக்கவா உனக்குக் கடவுள் இந்த உடலைக் கொடுத்துள்ளார். மறுபிறவி நீ மனிதனாகப் பிறக்கப்போவது என்பது என்ன நிச்சயம். ஜாக்ரதை. செய்யவேண்டியதைச் செய்ய மறக்காதே. வேண்டாததைச் செய்து மாநரகில் புகாதே. ஜாக்ரதை.

162. ஏ மனமே! அநேக தர்மங்களை பிறர் மெச்சுவதற்காகச் செய்துவிட்டால் நீ தப்பி விடலாமென்று நினைத்தாயா? ஜாக்ரதை. உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளாதே. பிறரை ஏமாற்றுபவன் கெட்டிக்காரன். தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்பவன் மிகப்பெரிய முட்டாளின் தலைவனாவான். நீ செய்யும் தான, தர்மங்களினால் மாத்திரம் உன்னை நீ அறிந்து கொண்டுவிடமுடியாது. தான தர்மம் செய்பவனுக்கு நல்ல யோகம் கிடைக்கலாம். ஆனால் மறுபிறவியை அவனடைந்தே ஆகவேண்டும். பிறவிப்பிணியை வேரறுக்கும் மருந்து தன்னையறிந்து கொள்வது ஒன்றேயாகும். உன்னை நீ அறிந்து கொள்வதே நீ பிறருக்குச் செய்யும் மிகப்பெரிய தான தர்மங்களாகும். மறவாதே.

163. ஏ மனமே! உன்னால் சிறு புல்லை சிருஷ்டிக்க முடியுமா? சொல். கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட மிகப் புனிதமான, மேன்மையான மக்களை வெறுக்கிறாயே நீ. வெட்கம் கெட்டவனே, பிறரை வெறுக்கும் உன்னை தெய்வங்கள் வெறுத்து ஒதுக்கி விடுவதை மறந்து விட்டாயா? மனமே! பிறரை வெறுப்பவனை தெய்வம் ஒதுக்கிவிடுமென்பதை மறவாதே.

164. ஏ மனமே! உன் கடமைகளில் இருந்து நீ தப்பிச் செல்லமுடியாது. நீ எங்கு சென்றாலும் உன்னிழல் உன்னை

யின் தொடர்ந்து வருவதைப்போல் கடமைகள் உன்னை விடவே விடாது. நம்பு. கடமைகளை சரிவரச்செய்துவிடு. உன் கடமையை விட்டு வேறு காரியங்களில் ஊக்கமாக இருப்பதைக் கொண்டு, நீ கடமையை செய்து விட்டவனாகிவிட மாட்டாய். ஜாக்ரதை. தவறு செய்தவன் தண்டனைக்கு உள்ளாகியே தீர வேண்டும். தவறு செய்யாதே. செய்ய வேண்டிய கடமைகளைச் சரிவரச் செய்துவிடு. மற்றவைகளைப் பற்றி கவலைகள் வேண்டாம். கடமையை செய்யாதவனுக்கே கோர நரகம் ஏற்பட்டுள்ள தென்பதை மேலும் உனக்கு ஞாபகப்படுத்துகிறேன். மறந்துவிடாதே. கடமையை வெறுப்பவன் தன்னைத்தானே ஏமாற்றிக் கொண்டவனாவான் மறவாதே.

**165.** ஏ மனமே! தன்னைத்தான் தரிசிப்பதே கோடி கோடி புண்யமாகும். புண்ணியங்கள் உலகமறியச் செய்தாலும் தன்னை அறியாதவன் ஸதா துக்கப்பட்டுக் கொண்டே இருப்பான். புண்ணியம் செய்தவனுக்கு அடையாளம் துக்கமற்றிருப்பது ஒன்றேயாகும். துக்கம் இருக்குவரை மனிதன் கஷ்டப்பட்டுக் கொண்டேயிருந்தாக வேண்டும். தன்னை அறிவு தோன்றினால்தான் மனிதனுக்கு நிரந்தரமான துக்க நிவர்த்தி உண்டாகும், என்பதை மறந்துவிடலாகாது. மனமே நீ துக்கமற்ற சுகத்தை அனுபவிக்க வேண்டுமானால் முதலில் நீ செய்யவேண்டிய மிகப்பெரும் புண்ணியம் உன்னை நீ அறிந்து கொள்வதொன்றுகும். என்பதை நீ மறவாதே.

**166.** ஏ மனமே! அந்தரங்க சுத்தியல்லாத நீ செய்யும் கைங்கர்யத்தை பிறர் மெச்சுவார்களேயன்றி, தெய்வங்கள் உனக்குக் கடுகளவு கூட அனுக்கிரஹிக்கமாட்டா. முதலில் உனக்கு அந்தரங்க சுத்தி வேண்டும். அதற்கு முதலில் நீ கடவுளை சத்தியமாக நம்பு. பொய் சொல்லாதே. நேர்மையாக இரு. செய்வன திருந்தச்செய். பிறர் மெச்சவேண்டுமென்ற

எண்ணமே உனக்கு உண்டாகக்கூடாது. நீ செய்யும் அனைத்தையும் கடவுள் ஒருவனுக்கே அர்ப்பணித்துவிடு. பலனை இச்சியாதே. இச்சையிருப்பின் அந்தரங்க சுத்தி மாசுபட்டுப் போகும். மறவாதே.

167. நீ கவலையில்லாமல் வாழவேண்டுமானால் ஏ மனமே? முதலில் கடவுளை முழுமனதுடன் சத்தியமாக நம்பிவிடு. கவலைப்படுபவன் வேலைகளனைத்திலும் தவறுதல் இருந்து கொண்டே இருக்கும், நீ தவறற்று நற்பணிகளைச் செய்ய வேண்டுமானால் முதலில் கடவுள் ஒருவனையே சரணமடைந்து விடு. பிறகு நீ செய்யும் வேலைகளைப்பார். தெய்வங்களுன்னைப் போற்றும். மறவாதே,

168. ஏ மனமே! இந்த அநித்யமான உலக போகங்களையே பெரிதாகக் கருதும் நீ, கடவுளைப் பற்றிப் பேச உனக்கென்ன தெரியும். எத்தனை கோடி பிறப்பெடுப்பினும் (உலக இச்சை) ஆசையுள்ளவன் கடவுளைக்காண முடியாது. கடவுளைக் கண்டமாதிரி நடந்தால் போதுமா? சொல். உன் அந்தராத்மாவை நீயே கேட்டுக்கொள். உன்னைப் பற்றி என்ன பதில் வருகிறதென்பதைப்பார். ஏமாறாதே. வேஷம் போடாதே. பொய் சொல்லாதே. சூதுவாதுகள் ஸதா துக்கத்தையே பெருக்கெடுக்கச் செய்யும். அநித்யத்தை உறுதியாக நம்புகிறாயே. அடமுட்டாளே! கடவுளை நம்புவதில் உனக்கென்ன கஷ்டம். எவ்வளவு நஷ்டமாகப் போகிறது. கடவுளை நம்புவதால் அஷ்டலக்ஷ்மியும் உனக்குத் தொண்டாற்றுமென்பதை மறந்துவிட்டாயா? தேவாதி தேவர்கள் உனக்கு ஏவலாட்களாகிவிடுவார்கள். கடவுளை நம்பு. நற்கதி அடைவாய். பேரின்ப ஸாகரமாகி விடுவாய்.

169. ஏ மனமே! பிடிப்பற்றுத் திண்டாடுகிறாயே.. சஞ்சலப்பட்டுக் கொண்டே இருக்கவா நீ பிறந்தாய். கடவுளைப்

பிடித்துக்கொள். அவன் திருவடியை சிக்கெனப் பற்றிக் கொண்டு உன் மனம் ஒருமுகப் பட்டு விடும். உனக்கு நிம்மதி கிட்டும். கவலையற்றுப் போகும். எங்கும் வியாபித்த கடவுளை உன்னகத்துள் கண்டு கொள்வாய். அருட்பெருஞ்சோதிக் கடவுளான எல்லாம் வல்ல ஸித்தன் உன்னை ஸித்தனாக்கி விடுவான். உனக்கு முக்தி நிலை கை வந்துவிடும். நீ ஜீவன் முக்தனாவாய்.

170. ஏ மனமே! உன் உடம்பே ஆலயமாகும். ஐந்து கோசங்கள் அதாவது அன்னமய, பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய கோசங்களுக்கப்பால் உன் ஹ்ருதயமாகிய குகைக்குள் களவுள் (ஆத்மாவாய்) ஆத்ம லிங்கமாய், ஸ்வயம் ப்ரகாசமான அருட்பெருஞ்ஜோதியாய் இருந்து கொண்டு இருப்பதால்தான் உன்னை உயிருள்ள நடமாடும் கோவிலாக மஹான்கள் கூறுகிறார்கள். நீ புறத்தே காணும் கல்கோவிலில் எந்த ஸ்தூல லிங்கத்தைக் காண்கிறாயோ, அந்த லிங்கத்தை உன் உடம்பாகிய கோயிலின் அகத்தே ஆத்மலிங்கமாகப் பாவித்து கொள்ளவேதான் நமது வேதாகம புராணங்கள் அகத்தேயும் கோயிலை நிர்மாணித்துக் காட்டி இருக்கிறது. மனமே! புறக்கோயிலையே கண்டு பூரித்தால் போதாது. புறத்தே காணும் கோவிலின் மூல ஸ்தானத்தில் உள்ளதை உன் அகத்தேயுள்ளஹ்ருதய குகையான கர்ப்பகிரஹகத்தினுள் நீ கண்டுய்ய வேண்டுமென்பதற்காகவேதான் புறக்கோவிலை அமைத்து உதவியுள்ளது, சிற்ப சாஸ்திரம். அகத்துள் உன்னை ஆத்மலிங்கமாகப் பார்த்துவா. அகத்தே தனதாத்மாவைப் பார்ப்பவனுக்கு அஹங்காரம் ஒழிந்து போகும். அங்கிங்கெனாதபடி தன்னை கண்டுய்வான். அவனே மனிதன். மறவாதே.

171. ஏ மனமே! உனக்கு அருள் வேண்டுமானால் மந்திரங்களை முழுமனதுடன் உரு ஏற்று உரு ஏற, ஏற

உன்னகத்துள் திருவருள் அருட்பெருஞ் ஜோதியாய் காட்சி கொடுக்கும். அந்தத் திருவருட் ஜோதியுள், பூலோகம், வைகுண்டம், கைலாயம், ப்ரும்மலோகம் காண்பாய். அங்கிங்கெனுதபடி எங்கும் ஜோதியைக் காண்பாய். உன்னகத்தேயும், புறத்தேயும், ஜோதி ஒன்றை காணும் நீ ஸ்வயம்ப்ரகாசமாகி விடுவாய். உலகில் ஒன்றே இருப்பது ஜோதியாகி விடும். அதுவே நீயாவாய். நீயே அதுவாவாய். மறவாதே.

172. ஏ மனமே! கடவுளுக்கு உருவமுண்டா என கவலைப்பட்டு, உன்கவலை நீங்கி விடுமா? இறைவனுக்கு உருவம் உண்டு. அருவமும் உண்டு. எங்கும் வியாபித்திருப்பார். உன் கவலை கடவுளைப் பற்றிக் கொள்வதிலிருக்கட்டும். உன் கவலைகள் அனைத்து மொழிந்துவிடும். வீண் சர்ச்சைகள் வேண்டாம். அனுவசியமாக வீண் பொழுது போக்காதே. சத்யமாகக் கடவுளை நம்பு. அவனை உறுதியாகப் பற்றிவிடு. உன்பற்றெயெல்லாம் அவன் ஒருவனிடமேதான் இருக்க வேண்டும், கடவுளைத்தவிர வேறு நினைவு வருமேயானுல், நீ ஒரு விபசாரியாகி விடுவாய், உன் மனதிற்கு ஒரு நாளும் அமைதி உண்டாகாது ஜாக்ரதை.

173, ஏ மனமே! முதலில் கடவுளை உருவமாகவே நம்பி விடு; உன் தாய், தந்தையருக்கு உருவமிருப்பதைப்போல் கடவுளுக்கும் உருவமுண்டு, அருவமான கடவுள் உனக்காகவே உலகில் நீ காணுமனைத்துமாகவே (உருவத்தோடு) காட்சி கொடுக்கிருர், உன் கண்ணிற்கு தெரியக் கூடிய அனைத்தும் கடவுளேதான், நம்பு; உனக்கு நற்கதி கிட்டும். எதையும், எவரையும், வெறுக்காதே. உலகமனைத்துமாக கடவுள் ஒருவரே இருக்கிருர், அவரில்லாத இடமே இல்லை, கடவுள் இல்லாத இடமென்று ஒன்று இருந்தால்தானே அங்கு சூன்யமாக இருக்கும், கடவுள் நீ காணும் எல்லாமாகவும்,

இருப்பதை நீ மறந்து விடாதே, கடவுளில்லாத இடம் என்று நினைத்து நீ தவறு செய்து விடாதே. கடவுள் உள்ளும், புறமும் உன்னையே கண்டு வருகிறார், அவரை நீ ஏமாற்றி விடமுடியாது. உன்னைக் கண்காணிப்பதே கடவுளின் வேலை யாகும் என்பதை மறந்து விடாதே. ஜாக்ரதை! ஜாக்ரதை!!

174. ஏ மனமே! செல்வமிருந்தால் மாத்திரம் மனச் சாந்தி கிட்டிவிடுமென்று நினைத்தாயா? சக்ரவர்த்திகளுக்கும், ராஜாக்களுக்கும், கோடீஸ்வரனுக்கும், மனஅமைதி உண்டாகி விட்டதா? உலகில் எத்தனை பேர் இன்று அமைதியுடன் இருந்து வருகிறார்கள் தெரியுமா, உனக்கு? பலகோடிப் பேர் களில் ஒரிருவருக்கே முழுமனவமைதி கிட்டியிருப்பதே ஆச்சரிய மாகும். பட்டம், பதவிகளினாலோ, செல்வத்தின் நிலையினாலோ ஜாதியினாலோ, மனவமைதி கிட்டாது. மனமே! உனக்கு மன அமைதி கிட்டவேண்டுமாயின் உன்னை கடவுளுக்கு அர்ப்பணம் செய்துவிடு. பிறகு நீ ஒன்றுமே செய்ய வேண்டாம். அமைதி உன்னைத் தேடிவந்து சரணமடையும். அமைதியைத்தேடி ஓடாதே. நாட்டிலும் அமைதி இல்லை. காட்டிலும் அமைதி இல்லை. அமைதி உன்னுள்ளே இருக்கிறது. அமைதியை நீ வேண்டினால் உனக்குள் உள்ள உன்மயமாகவே இருக்கும், எல்லாம் வல்ல (ஆத்மஸ்வரூபமான) ஆத்ம லிங்கத்திடமே நீ சரணமடைவாயாக. அமைதி தானே வரும். நீயே அமைதி வடிவமாகி விடுவாய். அமைதியின் இருப்பிடம் நீ தெரிந்து கொண்டாயா? உடன் சரணமடைந்துய்வாயாகுக.

175. ஏ மனமே! பிறர் கடமைகளைப் பற்றியே நீ பேசி வருவதினால் நீ உன்னுடைய கடமைகளைச் செய்தவனாகி விட்டாயா? முதலில் உன்னுடைய கடமைகள் என்ன என்பதை தெரிந்து கொள். கடவுள் உன்னை எதற்காகப் படைத்தார். பிறருக்கு உபதேசம், புத்திசொல்லிக்கொண்டே இருப்பதற்குத் தானா, உன்னைக் கடவுள் படைத்தார்? மனமே! பிறருக்கு

நீ கூறும் அறிவுரைகள் உனக்குப் பொருந்தாதா? நீ சொல்கிறபடி பிறர்தான் நடக்கவேண்டுமா? உனக்கு மாத்ரம் தனிவழி ஏதாவதுண்டு என்று நினைத்து விட்டாயா? ஜாக்ரதை; நீ ஏமாருதே! ஏமாற்ருதே முட்டாளே. நீ சொல்லும் அறிவுரைகளின்படி முதலில் நீயே நடந்துகொள். பிறருக்குப் பின்பு வழிகாட்டலாம். குருடன், குருடனுக்கு வழிகாட்டுவதைப் போல் இருக்கிறது உனது காரியம். மனமே! சொன்னபடி கேள். பிறகு அதன்படி நட. அப்போதுதான் உனக்கு அநுபூதி உண்டாகும். தான் அநுபவிக்காததைப்பற்றி பேசியும், எழுதியும் உனக்கென்ன பிரயோஜனம். தன்னைத் தானே நீ ஏமாற்றிக்கொள்ளாதே. உன்னை நீயே ஏமாற்றிக் கொள்வதைபோல் முட்டாள்தனம் வேறுஉண்டா? சொல். முட்டாளே! ஏமாருதே. சொன்னபடி செய்து சுகமடைந் துய்வாயாகுக.

176. ஏ மனமே! கடும் முயற்சியின்றேல் உன்னை உன்னுள் உன்ஞல் காணமுடியாது. உன்னை உன்னுள்ளே காண பெருமுயற்சி உனக்கு வேண்டும். கடும் முயற்சியிருப் பின் கடவுளை (உன்னை) காணலாம் உன்னுள்ளே. சோம்பேரிக்குக் கடவுள் தர்சனம் கிட்டாது. கடவுள் பெயரை மாத்திரம் சொல்லிக் கொண்டு, சோம்பேறியாகிவிடாதே. அபாரமான சுறுசுறுப்புடன் உன்னை உனக்குள்ளே தேடு. வேஷமிட்டுக் கொண்டு காலத்தை வீணுகப் போக்காதே. காலன் உன்னைப் பிடிக்க வந்துகொண்டிருக்கிருன். உனக் கென்ன வயதாகிறது என்பதை நினைத்துப்பார். நீ இன்னும் எத்தனை ஆண்டுகள் உயிருடனிருக்கப்போகிருய். நாட்கள் சென்று கொண்டேயிருக்கின்றதை மறந்து விடாதே. சோம்பேரியாய் நாளையதினம் பார்த்துக் கொள்ளலாமென ஏமாந்துவிடாதே. உன் உயிர் இன்று கழிவதே என்ன

நிச்சயம். நாளையதினம் உன்னுடையதில்லை. மனமே! ஜாக்ரதையாக இரு. ஏமாந்துவிட்டாதே: உன்னுயிர் உடலில் இருக்கும்போதே உன்னை நீயே உனக்குள்கண்டுகொண்டுவிடு: இப்பிறவி தப்பினால் மறுபிறவி எதுவாகுமோ. மறுபிறவி மனிதனாகத்தான் பிறப்பாய் என்பதற்கு என்ன உறுதி இருக்கிறது. நீ உயிர்விடும்போது பன்றியை நினைத்து உயிர் விடுவாயானால் மறுபிறவி பன்றியாகவே நீ பிறப்பாய்: இறைவனை நீ மறவாதே. உனதுள் உள்ள உயிர் இறைவனையே பற்றிக்கொண்டு விடட்டும். மறுபிறவியை நினைக்காதே, ஜாக்ரதை.

177. ஏ மனமே! நீ தேவாம்சமாகப் பிறந்தாலும் ப்ராரப்தம் உன்னை விடாதென்பதை மறந்துவிடாதே. தர்ம புத்திரர்களைப் போன்றவர்களும் பெரும் துக்கங்களையும், துன்பங்களையும் அனுபவித்தது உனக்குத்தெரியாதா! மனமே! நீ ப்ராரப்த கர்மத்தை அனுபவிக்கும் போது துக்கம் வராமல் இருக்கவேண்டுமானால் கடவுளை நினைத்துக் கொண்டுவிடு. இறைவனை நெஞ்சுருகப் போற்றிவா. மேலும், மேலும் சரணமடைந்துவிடு. உன்னைக் கடவுளுக்கே முழுமனதுடன் அர்ப்பணித்துவிடு. எல்லாம் இறைவன் செயல் என்பதை நன்குணர்ந்து செய்வனத் திருந்தச் செய்துவா. கவலை அகன்று விடும்: சுகமுண்டாகும்.

178. ஏ மனமே! நெறிதவறாமல் இரு. நன்னெறி தவறுபவன் மாபெரும் சோதனைகளுக்கு ஆளாவதுடன் ஸதாகாலமும் துக்கத்தை அனுபவித்துக் கொண்டே இருக்க நேரிடும். தவறான காரியங்களில் ஒரு போதும் ஈடுபடாதே. உணவில்லாமல் உயிர் போனாலும்சரி, தவறான காரியத்தைச் செய்துவிடாதே. நெறிதவறாதவனே மிகப் பெரிய தவத்தைச் செய்தவனாவான். தவறு செய்பவன் மனம் அமைதிகுலைந்து மிகப்

பெரிய கேட்டையடைந்து துக்கப்படுவது உறுதியாகும். மறவாதே.

179. ஏ மனமே! உன்னிடம் சுயநலம் இருக்கும்வரை நீ மிகப் பெரிய கொடியவனாகவேதான் இருப்பாய், ஸாதுக்களுக்கு சுயநலமெதற்கு? வேஷத்தினால் மாத்திரம் உன்னிடமிருக்கும் சுய நலம் மாறிவிடுமென்று நினைத்தாயா? தர்மம் செய்வதாலும் கோயிலுக்குப் போவதாலும், பிறர் மெச்சும் கார்யங்கள் செய்வதாலும், உன்னிடமுள்ள சுயநலம் மறைந்து விடாது. மனமே! நீ உண்மையான ஸாதுவாக இருக்க ஆசைப்பட்டால் அனைத்தையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்துவிடு. கடவுளைமுழுமனதுடன்சரணமடைந்து விடு. கடவுளைத் தவிர வேறு உறவே உனக்குவேண்டாம். அவன் க்ருபாகரன், க்ருபாஸாகரன். கருணைக்கடல் எங்கும் வியாபித்தவன். கடவுள் இல்லாத இடமே கிடையாது. உன்னுடைய அந்தரங்கத்திலும், பகிரங்கத்திலும், அவன் நிறைந்திருக்கிறான். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள கடவுளுக்கே நீ ஆளாகிவிடு. அவன் தொண்டையே செய்துவா. அவனன்றி ஓர் அணுவும் அசையாது. மனமே! சுயநலத்தை அறவே விட்டு ஆண்டவன் திருவடியில் உன் மனத்தை அர்ப்பணித்து விடு. சரணமடை, நீ மிகப் பெரிய ஸாதுவாகி விடுவாய்.

180. ஏ மனமே! உனது முதற்கடமை கடவுளை பற்றிக் கொள்வதே ஆகும். கடவுளைப் பற்றிக் கொள்ளாதவன் உள்ளம் மிகவும் பலஹீனமானதாகும். பலஹீனமுள்ளவனையே தீய சக்திகள் பற்றிக்கொண்டு விடும். தீய சக்திகள் தொடர்பால் மனிதன் மேலும் கொடிய தீய கார்யத்தையே செய்யத் துணிகிறான், தீயவன் உள்ளத்தில் நல்ல எண்ணங்கள் புகாது. தீயவன் போகுமிடம், இருக்குமிடமெல்லாம் தீய எண்ணத்தையே பரப்பிக்கொண்டு செல்கிறான். தீயோனுடைய

உறவால் வீடும், நாடும் கெட்டு விடுகிறது. முதலில் தீயவனைக் காண்பதே மிகப்பெரிய பாவமென நம்பி மஹான்கள் ஒதுங்கி விடுவார்கள். துஷ்டனாகிய தீயனைக் கண்டு இவ்வுலகமே நடுங்குகிறது. தீயமனம் படைத்தவன் இருக்குமிடம் அணு குண்டு விழுந்த இடத்திற்கு சமமாகும் என்று சொல்லி விடலாம் எனத்தோன்றுகிறது. மனமே! நீ நல்லவனாகவே இருக்க வேண்டும் என்றால் முதலில் கடவுளைப் பற்றிக் கொண்டுவிடு. சிக்கெனப்பற்றிக் கொண்டு விடு, உன்னை தீயசக்திகள் தொடாது. தீயசக்திகள் உன்னைக் கண்டு அஞ்சி ஓடும், மறவாதே,

181, ஏ மனமே! உன்னைக் கெடுக்க தேவர்களே தூண்டி விடுகிறார்கள். நீ கடவுளை முழு மனதுடன் சரண மடைந்துவிட்டால் கடவுளாகவே நீ மாறிவிடுவாய் என்கிற பொறாமையால், உன்னைக் கெடுக்கக் கங்கணம் கட்டிக் கொண்டு திரிகிறார்கள். நீ எதுவரினும் அஞ்சாதே, உயிர் போனாலும் போகட்டும், கடவுள் ஒருவனையே சரணமடைந்து விடு, ஒரு கல்லைக் கொண்டு, காக்காய் கும்பலை விரட்டி விடுவதைப்போல் ஒரேதரம் நீ செய்யும் சரணாகதியால் இறைவனோடுநீ இரண்டறக் கலந்து விடுவாயானால்,பலகோடி துஷ்ட தேவதைகள் உன்னை என்ன செய்ய முடியும், மனமே! சரணாகதி என்பதை சுலபமாக வாயால் சொன்னால் போதாது. கடலை அடைந்த நதி மீண்டும் மீள முடியாததைப் போல் ஒருதரம் கடவுளைச் சரணமடைந்தவன் மீண்டும் பிறக்கவே மாட்டான். கங்கையும், கடலும், ஒன்று சேர்ந்தால் எப்படி பிரிக்க முடியாதோ அப்படி, சரணமடைந்தவனையும், கடவுளையும் பிரிக்க முடியாது, கடவுளை உண்மையாக, முழு மனதுடன் சத்தியமாகச் சரணமடைந்தவன் கடவுளாகவே மாறுவது உறுதியாகும், மனமே! நம்பிவிடு, கடவுளைச் சரணமடைந்து கவலையை அறவே ஒழித்துவிடு, ஒரு தரம்

சத்தியமாக சரணமடைவாயானல் அதுவே நீ செய்யும் மிகப் பெரிய தவமாகும், மறவாதே,

182. ஏ மனமே! உன்னுடைய ஸ்வதர்மத்தை விடாது செய்து வருவதிலேயே ச்ரத்தா பக்தியும், ஊக்கமும், உறுதியும் உனக்கு மேன்மேலும் இருக்கட்டும். நீ உண்மையாக முழு மனதுடன் உன்னுடைய ஸ்வதர்மத்தை செய்து வருவாயானல் அதுவே உலகிற்கு நீ செய்யும் மாபெரும் உபகாரமாகும். துன்பமேயிராது, கஷ்டங்கள் விலகி ஓடும். நிம்மதி உண்டாகி விடும். உன் துயரங்கள் நீங்க வேண்டுமானல், வெட்கப்படாமல் உனக்குண்டான வேலையைத் திருந்தச் செய்து விடு; கடவுள் உன்னை ரக்ஷிப்பார், நம்பு.

183. ஏ மனமே! அன்பைப் பொருள் கொடுத்து வாங்க முடியுமா? அன்பிருக்குமிடம் அருளாகும். அன்பு பிறக்குமிடம் அருளாகும் என்பதை மறந்து விடாதே. அருளில்லாதவர்களிடம் உள்ளன்பு இராது. உள்ளன்பு இல்லாதவர்களிடம் பலகோடி இருந்தென்ன பயன். அன்பு இல்லாதவர்கள் மனிதனாக மாட்டார்கள். அன்பில்லாதவனல்தான் உலகில் துன்பம் மூள்கிறது. கடவுளிடமே அருள் பிறக்கிறது. அருளிடமே அன்பு பிறக்கிறது. அன்பிடமே ஆனந்தம் பிறக்கிறது. மனமே! உனக்கு ஆனந்தம் வேண்டுமா? அன்பைப் பெருக்கு. மறவாதே!

184. ஏ மனமே! உன்னகத்துள்ளே உன்னையே நீ எங்கிருக்கிருய் என்று துருவி ஆராய்ந்து பார்த்து வா. உன்னை உன்னுள்ளே கண்டு தெரிவதற்கு இதுவே உற்ற உபாயமாகும். மனக்கலக்க மிருக்கும்வரை உன்னை உன்னுள்ளேகாண முடியாது. மிக மிகத் தெளிந்த மனத்துள் உன்னை அங்கு காணலாம். மனம் போன போக்கெலாம் போக விட்டதனல் மனம் ஸதா காலமும் அலைமோதிக்கொண்டிருக்கிறது.

---

மனதை அலே பாய விடாமல் பழகி வா. பேச்சினால் மனம் ஸ்திரப்படாது. இடைவிடாப்பழக்கத்தினால்தான் மனமடங்கும் மனம் அடங்க, அடங்க காற்றில்லாத இடத்தில் வைத்திருக்கும், தீபம்போல் அசைவின்றி உனது ஆன்மா கடவுளாகவே காட்சி தரும். சமயோஜிதப் பேச்சில் (உபன்யாஸத்தினால்) கார்யம் கைகூடிவிடாது. நிமிஷந்தோறும் இடைவிடாமல் மனத்தை அடக்கி பழகி வருவாயானால்தான் மனத்தைத் தெளியவைக்க முடியும். குழம்பிய மனத்தில் தன்னைக் காண முடியாது. அழுக்கேறிய கண்ணாடியில் முகம் நன்றாகத் தெரியாததைப்போல் சஞ்சலமுள்ள மனத்தில் ஸ்திரமான உன்னைக் காண முடியாது. மனமே! பாராயணம் பல முறை செய்தாலும் போதாது. மனமடங்க இடைவிடாது நான் யார் என்று விசாரணை செய்யும் ப்ரயத்தனமே உனக்கு வேண்டும். மறவாதே!

185. ஏ மனமே! கடவுளைத் தன்னுள் (தனது ஆன்மாவை) கண்டவனுக்குத்தான் காணும் பிரபஞ்சம், அதனுள்ள அனைத்தும் கடவுள் மயமாகவே தோன்றும். உன்னை நீயே கேட்டுக்கொள். கடவுளைக் கண்டேன் என்று விடைவந்தால் உன் கண்களில் காண்பதனைத்தும் கடவுள் மயமாகத் தெரிகிறதா என்று பார்த்து உன்னை நீயே சரி செய்து கொள். வேறு விதமாகத் தோன்றுமானால் மேலும் கடவுளை உன்னுள்ளே இடைவிடாமல் துருவித் துருவித்தேடிக் கண்டு பிடிக்க கங்கணம் கட்டிக்கொண்டு விடு.

186. ஏ மனமே! கடவுளின் திருவருள் அற்றவனே வீண் வாதம் செய்வான். நிறை குடம் ததும்பாது, கள்ளமிலா உள்ளத்தோடு கடவுளை வணங்கு. அவனுக்கே ஆளாகிவிடு. எல்லாம் வல்ல எம்பெருமானது திருவருள் உன்னை உள்ளும், புறமும் நின்று காத்து ரக்ஷிக்கும். கவலைப்படாதே. வீண்

வாதங்களை வெறுத்து ஒதுக்கி விடு. ஸத்ஸங்கம் விடாது செய்துவா; அனைத்தும் உனக்குப் புலப்படும். நம்பு.

187. ஏ மனமே! உலகம் உய்ய வேண்டும் என்பதற்காக நீ பாடுபடுவதாகச் சொல்வது உண்மையானால் முதலில் இறைவன் திருவருள் நீ பெற்று விடு. இறையருள் இல்லாதவனால் உலகம் நலம் பெற சேவை செய்ய முடியாது. வாயால் உலக க்ஷேமத்திற்காகப் பாடு படுவதாக உபன்யாஸம் செய்தால் போதாது. வெறும் பேச்சு கவைக்குதவாது. சர்க்கரை என்று காகிதத்தில் எழுதி நக்கினால் தித்திக்குமா உனக்கு? சொல், உன் பேச்சு காகிதத்தில் எழுதியுள்ள சர்க்கரைக்குச் சமமாகும். முதலில் நீ திருவருளைப்பெறத்தகுதிகளை உனக்கு நீயே உண்டாக்கிக்கொள். மனமே! மனவழுக்கைப் போக்கிக் கொண்டுவிடு. திருவருள் உனக்குள் தங்கிவிடும். பிறகு மற்றவைகளை நீ கவனிக்கலாம்.

188. ஏ மனமே! சித்த சுத்தியும், பக்தியும் இல்லாத வேஷம் உனக்குப் பிரயோஜனத்தைத் தராது. உன் மனம் குப்பைத் தொட்டியைப் போல் இருந்து வருகிறது. குப்பை அகலாதவரை மனம் தூய்மையுறாது. மனத்தூய்மை இல்லாத வரை உனக்கு சித்த சுத்தியும் உண்டாகாது. சித்த சுத்தி இல்லாத வரை நீ இறைவன் திருவருளை பெற்றுய்ய முடியாது. ஜாக்ரதை.

189. ஏ மனமே! தவம் தவம் என்கிறாயே? தவம் என்றால் நீ என்னவென்று நினைத்தாய். நீ தவம் செய்யக் காட்டுக்குப் போக வேண்டாம். எங்குமே செல்ல வேண்டாம். முதலில் உன் உள்ளத்தில் அன்பைப் பெருக்கு. அன்பிற் சிறந்த தவமில்லை. அன்பில்லாதவன் மிகப் பெரிய பாவியாவான். மிகப் பெரிய

ஞானி "ஈசனுக்கன்பிலார், அடியவர்க்கன்பிலார், எவ் உயிர்க்கும்அன்பிலார், தமக்கும் அன்பிலார்," என்று கூறுகிருர் மறவாதே! அன்பை உன்னுள்ளே காணுவது மிகப் பெரிய தவமாகும். அதுவே ஈசனை க் காணுவதும் ஆகும். மறவாதே.

190. ஏ மனமே! உன்னுடைய கவலைகள் அகல வேண்டு மாளுல் முழுமனதுடன் பக்தி செய்துவா. பக்தி ஒன்றே கவலையை நீக்கி மனத்தெளிவை அளிப்பதாகும் என்பதை மறவாதே. துன்பத்தை அறவே துடைத்து உனக்குப் பேரின்பத்தை உண்டாக்குவது பக்தி என்பதை நீ மறந்து விடாதே. உனக்கு முக்தி கிட்டும். மறவாதே.

191. ஏ மனமே! குரங்கின் குணமாகிய சஞ்சலம் உன்னிடம் நிறைய இருக்கிறது. மேலும் உனக்கு நண்பனுக வந்தவனே ஆசையெனும் மதுவாகிய கொடிய அரக்கனுவான் என்பதை நீ அறியவில்லை. கள் குடித்தவன் புத்தி (மனம்) ஸ்திரமாகவாயிருக்கும். ஏ கள்ளைக் குடித்த மனக்குரங்கே! உன்னைப் பொருமை எனும் தேளும் கொட்டி விட்டது. இனி உன் கூத்தாட்டத்திற்குச் சொல்லவா வேண்டும்? கள்ளைக் குடித்த குரங்கை, தேளும் கொட்டினுல் எப்படி குரங்கு அவஸ்தைப்படுமோ அப்படி நீ அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிற கஷ்டத்திலிருந்து, மனமே! நீ எப்படி விடுதலைப் பெறப் போகிருய்? ஜாக்ரதையாய் இரு. ஆசை எனும் மதுவை ஒழிப்பாயாகுக. பொருமைக்கு இடம் கொடுக்காதே, ஜாக்ரதை! ஜாக்ரதை!!

192. ஏ மனமே! இனி சாகப்போகும் உடலை மெய் என்று நம்பியிருக்கிருயே? இதுவரை உலகில் உடல் தாங்கி

வந்த ரிஷிகள், முனிகள், ஞானிகள், ஸித்தர்கள், பக்தர்கள், உடல்கள் எல்லாம் எங்கே? உன்னுடல் எத்தனை வருஷம் இருக்கப் போகிறது. முட்டாளே! அநித்யமான உடலைப் பொய் என்று நம்பி பற்றற்ற நிலையில் உடம்பைப் பேணிவா.

193. ஏ மனமே! உன்னிடம் அக்ஞானம் இருக்கும் வரை நீ துன்பப்பட்டே ஆகவேண்டும். நீ துன்பத்திற்கு ஆளாகாமல் இருக்க வேண்டுமானால் பற்றனைத்தையும் விட்டு ஒழிப்பாயாக.

194. ஏ மனமே! இவ்வுலகில் இருந்துவரும் அனைவரும் கடவுளின் அவதாரமேயாகும் என்பதை நீ முதலில் சந்தேகமில்லாமல் புரிந்து கொண்டுவிடு. மக்களின் அகத்துள்ள கடவுளை, ஆன்மாவைப் புரிந்து கொள்ளாத அக்ஞானிகளிடம் நீ வெறுப்புக் கொண்டு விடாதே. பிறரை வெறுப்பவன் தன்னைத் தானே வெறுத்துக் கொண்டவனாகி விடுகிறான். மனமே! நீ குற்றவாளியாகி விடாதே. அனைவரையும் தன் மயமாகப் பார்ப்பதே உனது பிறப்புரிமையாகும். பிறரை வெறுப்பதற்காக கடவுள் உன்னைப் படைக்கவில்லை. உன்னைப் படைத்தது அனைவரையும், உனது, தனது மயமாகப் பார்ப்பதற்காகவே என்பதை உனக்கு மேலும் ஞாபகப்படுத்தி விட்டோம். மறந்து விடாதே. ஜாக்ரதை.

195. ஏ மனமே! இறைவனுக்குப் பிறப்பும், இறப்பும். இல்லாதது போல உனக்குள்ளிருக்கும், சிவனாகிய உனது ஜீவனுக்கு (கடவுளுக்கு) பிறப்பு, இறப்பில்லை என்பதை நீ மறந்து விடாதே. நம்பு, நம்பு!

196. ஏ மனமே! செயற்கைக்கு அழிவுண்டு. இயற்கைக்கு அழிவில்லை. உனதாத்மா இயற்கையாகவே இருக்கிறதினால் நீ என்றைக்கும் அழிவற்றவன். நித்யன்.

---

சாஸ்வதன், சர்வ வியாபியாகும் உனதாத்மாவிற்கு (உனக்கு) பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை. என்பதை நீ சொப்பனத்திலும் மறந்து விடாதே. உன்னை பாபங்கள் தீண்டாது. நீ பரிசுத்தனுவாய். நீ தான் அந்தப் ப்ரும்மம் ஜாக்ரதை. மறந்து விடாதே!

197. ஏ மனமே! நீ துன்பப்படுவதற்குக் காரணம் உன்னை நீயே நான் பிறப்பு, இறப்புள்ளவன், நான் பாபி, என்று உன்னை நீயே தாழ்த்திக் கொண்டு உழல்வது தான் காரணம். உன்னை நீயே எனக்குள் எனதாத்மாவாகவே கடவுள் இருக்கிருர் என உறுதியுடன் நம்பி உயர்த்திக் கொள்வாயாகுக. மனமே! உன்னை நீ நான் யார்? நான் எங்கிருந்து பிறந்தேன்? முடிவில் நான் எங்கு செல்வேன்? நடுவில் நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்? எதற்காக நான் இவ்வுலகில் பிறந்தேன்? நான் உறுதியாக எதைத் தெரிந்து கொள்ள வேண்டும்? எது உலகில் சாஸ்வதம்? எது என்னுடன் வந்தது? எது என் கூட வரப்போகிறது? என்றெல்லாம் உன்னை நீயே கேட்டுத் தெரிந்து கொள். நீ படும் துன்பமனைத்தும் மாயமாய் மறைந்து போகும் பிறகு உன்னிடம் உன் மயமாக இருப்பது அழிவற்ற ஆனந்தம் ஒன்றேயாகும் என்பதை உன் அனுபவத்தில் உணர்ந்து கொண்டு விடுவாய் நீ. மனமே! நான் யார் என்று விஜாரணை செய்து கொண்டேயிரு. ஸதாகாலமும் செய்து கொண்டேஇரு. மறந்து விடாதே.

198. ஏ மனமே! இந்த பிரபஞ்சமே என்னுடைய உடலாகும். இந்த பிரபஞ்சமாகிய உடலின் ஹ்ருதயத்திற்குள் நானுக (எனதாத்மாவாக) நான் இருந்து வருகிறேன். இவ்வுலகில் ஒன்றே சாஸ்வதமாக இருந்து வருகிறது. அது தான் நான், எனதாத்மாவாகும். எனக்கு, எனதாத்மாவிற்கு அன்னியமாக ஒன்றுமேயில்லை. மனமே! விஜாரணை செய்து

பார். நாம ரூபமனைத்தும் (இந்த ப்ரபஞ்சமனைத்தும்) கனவு போல் மறைந்து விடும். பிறகு நீ பரிபூர்ணப் ப்ரும்மமாகி விடுவாய். மறவாதே. நான் யார் என்று விஜாரணை செய்து வா. இதுவே உனக்கு மோக்ஷத்தை உண்டு பண்ணவல்ல சாதனமாகும். மறந்து விடாதே. விஜாரணை செய். வேதாந்த விஜாரணையை இப்பொழுதே துவக்கி விடு.

199. ஏ மனமே! இல்லாததை இருப்பதாக நினைத்து, அது நமக்குக் கிடைக்கவில்லையே என்றும் ஏன் நீ வருந்துகிருய். கனவில் தோன்றும் அனைத்தும் கானல் நீர் போன்றதாகும். நீ காண்பதனைத்திலும் கானல் நீரைப் பருக வேண்டுமென்று தவமிருந்தால், உன் தவம் அனைத்தும் வீணுக முடியுமென்பதை நீ மறந்து விடாதே. பொய்யான அனைத்தையும் பொய் என்று உறுதியாக நம்பி விடுவாயாகுக. நீ இரவில் தூங்குப்போது காணும் சொப்பனம் போன்ற தாகும் இவ்வுலகமனைத்தும் என்பதை சொப்பனத்திலும் மறவாதிருப்பாயாக. மனமே! நான் சொல்வதைக் கேள். நீயே பரிபூர்ணப் பொருளாகிய ப்ரும்மம்; இறைவன், பூர்ணமாகிய உன்னை நீ அறிந்து கொள்ள முதலில் கற்பனைகளைத் தியாகம் செய்து விடுவாயாகுக. கற்பனை வருமானல் அதுவே மாயை யாகும். கற்பனை அற்ற விடத்தில் உன்னை நீ அறிந்து கொள்ளலாம். முதலில் கற்பனை யாருக்கு உண்டாகிறதென்று விஜாரணை செய்துபார். நான் யார் என்று நிர்ப்பயமாக உறுதியாக, ஊக்கமாக, உன்னை நீயே கேட்பாயானல் நீ யார்? என்று உன்னிடமிருந்தே உனக்கு விடை கிடைத்து விடும். பிறகு இல்லாதது மறைந்து போகும். இருப்பது நீயாகுமென்பது உனக்குப் புரிந்து விடும். மறந்து விடாதே.

200. ஏ மனமே! உனக்குக் கடுகளவும் ஸம்பந்த மில்லாதவைகளை நினைத்து, பகலிலும் என்னென்ன வெல்லாமோ சொப்பனம் கண்டு கொண்டே இருக்கிருய். நீ

பேசுவது வேதாந்தம். ஒரு உண்மையான வேதாந்தி இப்பிரபஞ்சத்தையே சொப்பனம் போல் உறுதியாக நினைத்து, சும்மா இருந்து விடுவான். மனமே! நீயே தியாகத்தைப் பற்றியும், கீதை, உபநிஷத்துகள் பற்றியும், முடிவான வேதாந்த தத்துவங்களை வாயளவில் பேசி வருகிறாய். உனது உள்ளத்திலோ, இரவு பகல், கற்பனைகளைச் செய்து கொண்டு, சொப்பனம் கண்டு வருகிறது. என்ன விபரீதமான போக்கு மனமே! உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளாதே. தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்பவன் முழு முட்டாள்களின் தலைவனாவான். மனமே! ஏமாறாதே! சம்பந்தமில்லாமல் கற்பனைகளைச் செய்யாதே. கற்பனைகள் நரகத்தில் உன்னைத் தள்ளிவிடும். ஜாக்ரதை. கற்பனை செய்யாதே. சும்மாயிரு. சுகமுதையமாகும். மறவாதே.

201. ஏ மனமே! செக்குமாடுபோல் சுற்றிச் சுற்றி வருவதைத் தவிர நீ இதுவரை என்ன சுகத்தைக் கண்டாய்? கானல் நீரைக்குடிக்க ஓடி ஓடி ஏமாந்துபோகும் மான் போலல்லவா உனது நிலையுமிருக்கிறது. மனமே! நீ பேசிக் கொண்டிருக்கும் வேதாந்தத்தை நிறுத்து. கடுகளவாவது நான்யார்? என்கிற விஜாரணையுடன் கூடிய சாதனையைச் செய்துவா. பயனற்றக் கற்பனைகளை (ஸங்கல்பத்தை) முதலில் அறவே தியாகம் செய்து விடுவாயாகுக. கானல் நீரைப் பருகவோடும் மாயமானைப் பிடிக்க நீ, ஓடி, விளையாடி, ஏமாந்ததைப் புரிந்துகொண்டு விளையாட்டை நிறுத்திவிட்டு, இனிமேலாவது நான் யார்? பகுத்தறிவுள்ள செக்குமாடாகச் சுற்றிக்கொண்டிருக்கிறோமே? கானல் நீரில் இன்பம் இருப்பதாக ஓடிஓடி அதைவேட்டையாடினோமேஎன்றுவிசாரணைசெய் ஸத்குருநாதர் நல்ல தருணத்தில் உனக்கு வழிகாட்டி, உனக்குண்டானதுன்பம் அனைத்திற்கும் நீயே காரணம் என்பதை உனக்குப் புரியும்படி நன்குணர்த்தி, அனுக்ரஹம் செய்து,

உன்னைத் தடுத்தாட்கொண்டு உள்ளதை நீ மறந்துவிட்டாயா? இனியாவது நீ கானல் நீரைக்கண்டு ஏமாறாதே. செக்குமாடு போல் உலகைச் சுற்றியது போதும். இனி ஸத்குருவின் ஆணைப்படி நான் யார்? என்று இடைவிடாது உனக்குள் விஜாரணை செய்துவா. இவ்வுலகிலுள்ள இன்பதுன்பங்களை இக்கணமே தியாகம் செய்துவிடு. இன்பம், துன்பம், இவ்விரண்டும் உன்னிடமிருந்தே உண்டாவதை நீ, நான் யார்? என்ற விஜாரணையினால் உறுதியாக உணர்வாயாகுக. மனமே! காலதாமதம் செய்யாதே. காலன் வருமுன் ஜாக்ரதையாக உன்னை அறிந்துகொண்டு விடுவாயாகுக. மறவாதே!

202. ஏ மனமே! உனக்குக் கோபம் வருமானால் பிறரை வெறுக்கும் கெட்ட ஸ்வபாவம் உனக்கு உண்டாகிவிடும். மனமே! கோபம், வெறுப்பு, இரண்டிற்கும் நீ இடம் கொடா திருப்பாயாகுக. உனக்குண்டான விருப்பம், ஆசை நிறை வேறாததினால் முதலில் கோபம் வருகிறது. கோபத்தினால் எதிரியை நீ அறவே வெறுக்கவும் செய்கிறாய். இவ்விரண்டு எண்ணமுமே உனக்குள் வரக்கூடாதென்பதை மேலும் சொல்கிறேன். விருப்போ, வெறுப்போ, இருக்குமானால் மேலும் பிறவியை உண்டாக்கி வைத்து விடும். பூமியைப்போல் பொறுமையாயிரு. கடவுளை ச்ரத்தையுடன் நம்பிவிடு. கோபமும், வெறுப்பும், ஆசையும் எவனுக்குண்டாகிறது என்று உனக்குள் கேட்டுவா. பிறகு விடுதலையானது உனக்கு சுலப மாகக் கிட்டிவிடும். மறவாதே.

203. ஏ மனமே! உண்மையான, அன்புள்ள மனிதனே கடவுளாவான். அன்பில்லாதவனே அரக்கனாவான் என்பதை நீ மறந்துவிடாதே. கேவலம் அறிவு வளர்ச்சி மாத்திரம் உனக்குப் போதாது. மனமே! முழுமனதுடன் அன்பை வளர்ப்பாயாகுக. அன்பு செலுத்துவையாகுக. அன்பைக்

கடவுளாக நம்பிவிடுவையாகுக. அன்பும், சிவமும் ஒன்றென்கிற மஹான்கள், ஸித்தர்கள் வாக்கை சத்தியமாக நம்பிவிடுவையாகுக. மறவாதே. அன்பை உபாஸித்து வா. நீ முடிவில் அழிவற்ற அன்புமயமாகி விடுவாய் மறவாதே.

204. ஏ மனமே! நீ தூயவனுகி விடுவையானுல் கடவுளே உனக்குள் உன் மயமாகவே காணலாம். மனதைத் தூய்மை யாக்கப் படிப்பு, பட்டம், பதவிகள், பணம், காசுகள், தேவை யில்லே. சித்தம் சுத்தியாவதற்கு கடவுளிடம் உறுதியான (சத்யமான) நம்பிக்கை ஒன்றிருந்தால் போதும். நம்பிக்கை உடையவனேபாக்யவானுவான். விஞ்ஞானமயஉலகமனைத்தும் தெரிந்திருந்தால் மாத்திரம் போதாது. இவ்வுலகம் போற்றும் விஞ்ஞானத்தினுல் மாத்ரம் கடவுளை அறிந்து கொண்டுவிட முடியாது. மிகத்தூய்மையான, ஹ்ருதயம் உனக்குள் இருக்கு மானுல் அதனுல் நீ பரப்ரும்மத்தை உன்மயமாகவே உனக்குள் நீ உணர்ந்து கொண்டுவிட முடியும் என்பதை மறந்துவிடாதே. மனமே! உன்னை ஸ்படிகம்போல், முகம் பார்க்கும் தூய்மையான கண்ணுடிபோல் ஆக்கி வைத்துக் கொண்டு விடுவையானுல் அதில் உனது உண்மையான, நிஜஸ்வரூபம் (கடவுள்) பரப்ரும்மமான உன்னையே அதில் பளிச்சென்று பார்த்துக் கொண்டு விடலாம். முதலில் உன்னை நீ தூய்மையாக்கிக் கொண்டு விடுவையாகுக. மறவாதே.

205. ஏ மனமே! முதலில் நீ உண்மையைத் தெரிந்து கொண்டு விடவேண்டுமானுல் உடனடியாக உன் ஹ்ருதயத் தைத்தூய்மையாக்கிக் கொண்டு விடுவையாகுக. எந்த உண்மையிலிருந்து யாவும் தோன்றுகின்றனவோ, எந்த உண்மையிலிருந்து யாவும் வாழ்கின்றனவோ, முடிவில் எந்த உண்மைப் பொருளையே யாவும் அடைகின்றனவோ, அந்த உண்மைப் பொருளையே கடவுளென்றும், இறைவனென்றும், ப்ரும்மம் என்றும், உனக்குள் ஆத்மாவென்றும், அதுவே நான்

என்றும், வேதாந்தம் முடிவாகக் கூறுகின்றதை நீ அனுபவிக்க வேண்டும்என்ருல் முதலில் உன் ஹ்ருதயம் சுத்தமாகவேண்டும். சித்த சுத்தி இல்லையென்ருல் உனக்குளுள்ள உண்மைப் பொருள் ஸ்வயம் ப்ரகாசமாக உனக்குத் தோன்ருது. மறந்து விடாதே.

206. ஏ மனமே! உனது ஹ்ருதயம் தூயதாகிவிட்டால் அதன்மூலம் கடவுளிடம் நீ ஓயாது பேசலாமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். முதலில் நீ செய்ய வேண்டிய சாதனை உன் ஹ்ருதயத்தைத் தூய்மையாக்குவதேதான். நல்ல படிப்புள்ள, மேதாவிகளான அறிவாளிகள் பேசுவது எல்லாம் அவர்கள் படித்த அறிவைக் கொண்டுதான் பேசுகிருர்கள். நன்கு படித்தவனுடன் கடவுள் பேசிவிட மாட்டான். படிப்பில்லாவிட்டாலும் நல்லசித்த சுத்தியுடைய (பரிசுத்த ஹ்ருதயமுடையவர்களால்) கடவுளுடன் பேச முடியும். வேதாந்தப் படிப்பில்லையே, வித்வான்களான படித்தவர்களுடன் பழகமுடியவில்லையே என்றெல்லாம் நீ கவலைப்படாதே. மனமே! உன் ஹ்ருதயத்தை கடவுள் நம்பிக்கையொன்றினுல் சுத்தமாக்கிக் கொண்டுவிடுவாயானுல் நீ கடவுளிடமே பேசலாம். படித்தவன். பண்டிதர்களுடன்தான் பேசலாம் என்பதை நீ மறந்துவிடாதே. கவலைப்படாதே. சத்தியமாக கடவுளை நம்பிவிடு. கடவுள் உன் ஹ்ருதயத்தை தூய்மையாக்கி வைத்து, அதனுள் கடவுளே குடியேறியும் விடுவன். பிறகு நீ பேசுவதெல்லாம் கடவுளின் வார்த்தை யாகவே மாறிவிடும். மறவாதே.

207. ஏ மனமே! கற்பனையற்றவன் மெய்ப்பொருள் மயமாகவே இருந்து வருவான். கற்பனை அற்றவர்களிடம் அஹங்காரம் அணுவளவும் இராது. கற்பனை அற்றவனிடம் காமக்ரோத, லோப, மோஹங்களுக்கிடமில்லை. கற்பனை அற்றவனிடம் ஆசைகள் ஒழிந்துபோகும். கற்பனையற்ற

வனைத் தீயசக்திகள் ஒன்றும் செய்துவிட முடியாது கவலையற்ற வனிடம் இவ்வுலகமுமில்லை. அவ்வுலகமுமில்லை. எவ்வுலகமு மில்லை. எவரும் (கடவுளும்) இல்லை. கற்பனையற்றவன் தான் தானாகவே இருந்துவருகிறான். அவனுக்கு எதனிடமும் சேர்க்கை இல்லாததினால், தன்மயமாகவே கற்பனை அற்றவன் ஸதா காலமும் இருந்து வருகிறானென்பதை நீ மறந்து விடாதே. மனமே! கவலையற்றிரு. சுகமடைந்துய்வாய். மறவாதே! ஜாக்ரதை.

208. ஏ மனமே! எவரிடத்தும் (கடவுளிடத்தும்) எதையும் எதிர்பார்க்காதே. எதிர் பார்ப்பவன் ஏமாந்து போவான். சொப்பனத்தில் கண்டவைகளை, எதிர்ப்பார்ப்பதைப் போலதான், விழித்துக் கொண்டிருக்கும்போதும்: இவ்வுலகம் ஒரு கனவு உலகமாகும். என்பதை மறவாதே! எதிர்பார்த்தது போதும் இனிமேலாவது விழித்துக்கொள். கற்பனை செய்வதை அறவே விட்டு ஒழி. கற்பனை செய்பவைகள் கிட்டுமென்றும், அதை அனுபவிக்கலாமென்றும், நினைப்பவன் ஒரு முழு முட்டாள் ஆவான். இல்லாததைக் கிடைக்க, கிடைக் காததை எதிர்பார்த்திருப்பவன் எப்படி நிம்மதியுடனிருக்க முடியும்? உறுதியாக ஏமாந்தேபோவான். இவ்வுலகிலிருந்து நீ எதையும் கண்ணுக்குத் தெரியும் அணுவள வுள்ள வஸ்துக்களையும் கிடைக்குமென்று எதிர்பாராதே. உறுதியாகக் கிட்டாதென்று மேலும் உனக்குச் சொல்லி விட்டேன். உனக்குக்கிட்டினால் அது வித்தையில் கிடைத்த பொருளைப் போன்று மறைந்தே போகும். இல்லாததைக் கிடைக்குமென்று இவ்வுலக மாயைகளை நம்பி நீ ஏமாந்து போகாதே. ஜாக்ரதை. ஜாக்ரதை.

209. ஏ மனமே! கற்பனை பல கோடிப் பிறவிகளை உண்டாக்குமென்பதை மறவாதே. உனக்கு முதல் சத்ரு நீ

செய்துவரும் கற்பனையாகும். தீயகற்பனைகள் கொடிய துக்கத்தையுண்டாக்குகிறது. கற்பனை செய்பவன் கெட்டே போகிருன். முடிவற்ற கற்பனைப் பேய் பிடித்தவனை அடக்கி ஆளமுடியாது. கற்பனைப் பேய்க்குக் கரை கிடையாது. கடல் போன்றதாகும். கடலைக் கடப்பது போன்றது கற்பனைகளைக் கடப்பது கடலலைக்கு எப்படி ஓய்வில்லையோ, அப்படித்தான். கற்பனையாகுமென்பதை மறவாதே. ஒரு கற்பனை பத்தாகும், நூருகும், ஆயிரம், கோடியாகி, ஆழமான கணக்கிடமுடியா படுகுழியான நரகத்தில் கொண்டும் சேர்த்துவிடுமென்பதை நீ மறந்துவிடாதே. கற்பனை செய்யாதே. நல்ல, தீய, கற்பனைகள் வேண்டாம். இரண்டுமே துக்கத்தைக் கொடுத்து விடும். சும்மாயிரு. ஸதாகாலமும் சும்மாயிரு. சுகமாக இருக்கலாம். மறவாதே.

210. ஏ மனமே! உன்னிடம் பொருமை இருப்பின் பகைமை, தீராத பகைமையும் உன் கூடவே இருந்துவரும் என்பதை மறவாதே. ஆசை பெருக்கெடுக்கும்போது, அது ஸித்தியடையாதபோது, ஸித்திபெற்ற பிறரைக்கண்டு பொருமை உண்டாகிறது. பொருமை பகைமையாக மாறி, தீராத தொல்லைகளையும், துக்கத்தையும், ஸதாகாலமும் உண்டாக்கியும் வரும். மனமே! பொருமைக்கு இடம்கொடாதே பொருமைத்தீ அணுவளவு இருப்பின் அதுவே காட்டுத்தீயாகி, உன்னை உயிரோடு கொளுத்திவிடும். மறவாதே. ஜாக்ரதை.

211. ஏ மனமே! உன்னிடமில்லாததை இருப்பதாக பாவித்து நீ ஏன் உன்னைக் கெடுத்துக் கொள்கிருய். வீண் பொருமையானது, கர்வத்தை வளர்த்து, அஹங்காரத்தையும் விருத்திசெய்து, உன்னை அறவே கெடுத்துவிடும் என்பதை நீ மறந்துவிடாதே. இல்லாததை என்னிடம் இல்லையென்று

சொல்லிவிடு. இருப்பதை இருக்கின்றது எனச் சொல். இரண்டுமுனக்கு நல்லனவற்றையே செய்யும். இல்லாததை இருக்கிறதென்றும், இருப்பதை இல்லையென்றும் சொல்வதால் இரண்டும் கெட்டவனாக்கி, மனித சமூகத்திலிருந்து உன்னை ஒதுக்கிவைத்துவிடும் என்பதை மேலும் சொல்லி விட்டோம். மறவாதே. ஜாக்ரதை.

212. ஏ மனமே! உள்ளதை இல்லையென்றாலும், இல்லாததை இருக்கின்றதென்றாலும், சொல்பவனின் மனம் ஸதாகாலமும் கடலலைபோல் அலைந்துகொண்டு துக்கப்பட்டு கொண்டேதானிருக்கும். உள்ளதை உள்ளபடி கூறுபவனே உண்மை பேசுபவனாவான். உண்மையுரைப்பவனுக்கு எக் காலத்திலும் மனக்குறை உண்டாகாது. பொய் சொல்பவன் குணம் சிலநாட்களில் வெளியாகி அவன் பலர்முன் வெளியே வரவும் வெட்கப்பட்டுக் கொண்டிருக்கும் படியான நிலையை அடைந்து துக்கப்படநேரும் என்பதை நீ மறந்து விடாதே. உள்ளதை உண்மையாகப் பேசு. உள்ளத்திலுள்ளதை உள்ளபடி சொல்பவனே மிகப் புனிதனாவான். மனமே! புனிதமான கார்யத்தை இடைவிடாமல் செய்து வா.

213. ஏ மனமே! ஆசையிருப்பவன் பிறரை ஏமாற்றவே ஸதாகாலமும் நினைப்பான். நினைத்ததை செயலில் கொண்டு வரவும் முயலுவன். அவன் கார்யம் ஸித்திபெற, மிகப்பெரிய பொய்களையும், மற்றுமுள்ள கொடிய துரோகச் செயல்களையும் பயமின்றி, இரக்கமன்றி, மனிதாபிமானமில்லாமல் துணிந்து பாவத்தை விடாது செய்தும் வருவன். ஆசை ஒன்றிருந்தால் போதும். அதுவே ஸர்வ நாசத்தை உண்டாக்கி வைத்து விடுமென்பதை நீ மறந்து விடாதே. இவ்வுலகமே இன்று ஆசையினால் துக்கத்தை அடைந்து வருகிறதைப் பார்த்துக் கொண்டுதானே நீ இருக்கின்றாய். மனமே! ஆசைப்படாதே. உனக்குண்டானது உன்னைத் தேடி வரும். கிட்டாததை

நினைத்து அதனிடம் மேலும் ஆசையை வைத்து உன்னை நீயே கெடுத்துக் கொள்ளாதே. மனமே! ஆசைப்படு. முதலில் அந்த ஆசையை உன்னிடம் வை. உன்னை அறிவதில்பேராசைப்படு. ஆசை முழுவதையும் உன்னையறியும் ஆற்றலில் செலுத்து. விடாது முயற்சி செய்து உன்னை நீ அறிந்து கொள். உனதாசை முதலில் வெற்றி பெற்றுய்யட்டும். மற்ற அனுவிடத்தில் ஆசை வைக்காதே. அது பயங்கரமாக முடிந்து, உன்னை உயிருடன் சித்ரவதை செய்து பல கோடிப் பிறவி களையும் உண்டாக்கிக் கெடுத்துக் கொண்டே இருக்கு மென்பதையும் சொல்லிவிட்டேன். மறவாதே. ஜாக்ரதை.

214. ஏ மனமே! உனது கெட்ட நடவடிக்கைகள், கெட்ட பேச்சுக்கள், கெட்ட எண்ணங்கள் அனைத்தையும் அறவே தியாகம் செய்துவிடு. உலகில் மஹான்கள் நல்லென அனைத்தையும் கூட தியாகம் செய்து விடுகிறார்கள். மனமே! நீ உன்னிடத்திலுள்ள தீயவைகளையாவது தியாகம் செய்வா யாகுக. பிறகு மற்ற தியாகங்களைப் பற்றியவைகளை நினைக் கலாம், மறவாதே.

215. ஏ மனமே! உன்னைப் பாராட்டுகிறவன் உன்னுடைய உண்மையை அறிந்துதானா பாராட்டுகிறான். பாராட்டுக் கூறுகிறவன் உன்னை மிகைப்படுத்தி பொருத்தமற்ற பேச்சுக்களை அள்ளி வீசி, உன்னை உச்சிகுளிரும்படி செய்வதை நீ வெட்கமில்லாமல் கேட்டுக்கொண்டு, மிக்க சந்தோஷப் படுகிறாயே? மூட மனமே! வெட்கம் கெட்டவனே! உன்னிடம் கடுகளவுமில்லாததை இருப்பதாக பொய் சொல்பவன் பேச்சை நீ மிகவும் ரசித்து, அவனையும் நீ போற்றுகிறாயே? மனமே!உனது போலித் தனத்தினால் நீதான் கெட்டுப் போவாய். தன்னைத்தானே மெச்சிக்கொள்ளும் பாசாங்குத்தனத்தை விட்டுவிடு, உன்னைப் பற்றிய

உண்மைகளை நீ பிறரிடம் உண்மையாகச் சொல். அவர்கள் பிறகு உன்னைப்பற்றி என்ன பேசுகிறார்கள் என்று பார். பிறகு அதை நீகேட்டு சந்தோஷப் படலாம். உன்னிடம் இல்லாததை இருக்கின்றது என்று சொல்லுகிறவர்கள் அவர்கள் வயிறு பிழைக்கச் சொல்லும் பொய்யாகும். நீயும் அதை நம்பி ஏமாந்து விடாதே. ஜாக்ரதை.

216. ஏ மனமே! மன வலிமையற்ற பலஹீனமுள்ளவன் உடல் பலத்தினால் பயில்வானாக இருப்பினும், அவன் பயந்து சாவான். பலஹீனமுள்ளவர்களுக்காகவே நரகம் தயாராக இருக்கின்றது என்று கூறப் படுவதை உனக்குச் சொல்லி விட்டேன். மனத்தை பலஹீனப்படுத்துவது உன்னிடமுள்ள ஆசைதான். ஆசை இருக்கும் மனத்தில் பலஹீனம் தானாகவே உண்டாகிவிடும். எதற்கும், அனைத்திற்கும், கேட்டை உண்டாக்குவது ஆசைதான். ஆசை இருப்பவன் மன வேதனை பட்டேயாக வேண்டும். ஆசையைப் போன்ற கொடிய ரோகம் வேறெது வேண்டும்? ஆசையாகிய கொடியவியாதியைப்போக்க நிராசை என்கின்ற மருந்தை நீ உட்கொண்டே ஆகவேண்டும். நிராசையாகிய மருந்து வேலை செய்யத் தொடங்கியவுடன் ஆசையாகிய நோய் அறவே பறந்து போய்விடும், மறவாதே.

217. ஏ மனமே! நிந்தனை செய்வதையே தனது வயிற்றுப் பிழைப்பாக வைத்துக் கொண்டவன் வாயிலிருந்து நல்ல பேச்சுக்களை நீ எதிர்பார்க்க முடியாது. பிறரை நிந்தனை செய்து, பயமுறுத்திப் பிழைப்பவன் தீய குணமுள்ள அசுரனாவான். பிறரை எக்காரணம் கொண்டும் நிந்திக்காதே. தூஷிக்காதே. தூஷணம், நிந்தனைகள், இருக்குமிடத்தில் தெய்வ சம்பத்து மறைந்துவிடும். தீயகுணம் தலைவிரித்தாடு மிடத்தில் சத்தியமோ, ஞானமோ, திருவருளோ, கடுகளவும் இராது போகும். அன்புடையோய்! எவரையும், எதையும் நிந்தனை செய்யாதே. தூஷிக்காதே. அனைத்தும் ஈசனின்

வடைப்பாகும். ஈசனில்லாத இடமேயில்லை. எங்கும் வியாபித்துள்ள இறைவன், நீ தூஷிக்கப்படுகிறவனிடத்திலும் இருந்து வருவதை நீ மறந்து விடாதே. எங்கும் எல்லோரிடமும், எவ்வுயிர்க்கும் உயிராயிருந்து வரும் இறைவனுக்கு இடைவிடாது நீ தொண்டு செய்துவா. அதற்காகவே உன்னையும் இறைவன் படைத்துள்ளான். பிறரை தூஷிக்க உன்னை இறைவன் சிருஷ்டிக்கவில்லை என்பதையும் சொல்லிவிட்டேன். தூஷிக்காதே. மேலும் தூஷிப்பாயானால் இறைவனை தூஷித்த கொடியபாவம் உன்னை வந்தடையும். ஜாக்ரதை. ஜாக்ரதை.

218. ஏ மனமே! நீ கோபப்படுவதற்குக் காரணம் உன்னிடம் உள்ள ஆசைதான் என்பதை நீ மறவாதே. ஆசை நிறைவேருதபோது கோபமாக மாறிவிடுகிறது. கோபமுள்ளவன் தன்னைத்தானே சித்ரவதைக்கு உட்படுத்திகொண்டவனுகிருன். கோபம் வந்தவுடன் உடல், மற்றும் அனைத்தும் சூடேறி, ரத்தக்கொதிப்பு ஏற்பட்டு, உடல் வெப்பத்தால் வெந்து சகிக்கமுடியாத பல தொல்லைகளுக்கு (வியாதிகளுக்கு) ஆளாகிவிடுகிறதைப் பார்த்துக்கொள். மேலும் கோபப்படுகிறவன் ராகத் துவேஷத்திற்கும் உடந்தையாகி, அவைகளும் இவனை ஆட்டிவைக்கத் துடங்கிவிடும். கோபத்தால் மனிதன்தன்னைத்தானே சித்ரவதைக்குள்ளாக்கிக் கொள்கிருன் என்பதை நீ மறந்துவிடாதே. ஜாக்ரதை. கோபத்தைத்தியாகம் செய்துவிடு. அனைத்தும் நலமாகவே முடியும். மறவாதே.

219. ஏ, மனமே! சொப்பனத்திலும் பெண்களை மாதர்களை நினைத்து விடாதே. பெண்ணுல் கெட்டுப் போனவர்களை நினைத்துப்பார். இவ்வுலகமே மாதர்களால் மயக்குண்டு, தீராத மிகமிகக் கொடிய வியாதிக்கு ஆளாகியாழ் நரகத்தில் தானே சென்று வீழ்ந்த கதைகளையும், தற்சமயமும், பிரத்யக்ஷமாக வீழ்ந்து கொண்டிருப்பவர்களையும்

பார்த்துத் தெரிந்து கொள். காமப்பேய் பிடித்த குடும்பம் உலகில் பலகோடிக் கணக்கான மக்கள் ஆவார்கள், நீ எதனிடமிருந்தும் தப்பி விடாலம். ஆனால் காமப்பேயிடமிருந்து நீ தப்பமுடியாது. சிற்றின்பமாகிய பிசாசிடம் நீ மிகமிக ஜாக்ரதையாக, நிமிஷந்தோறும் இருந்து வரவேண்டும். காமத்தை நீ ஜெயித்து விட்டால் நீ தான் ஈஸ்வரன். நீயே கடவுள். நீயே அனைத்தும். மனமே! காமனை முதலில் ஒழிப்பாயாகுக. முதலில் நீ உன் மனத்தில் கடுகளவு காமத்திற்கும் இடம் கொடுத்துவிடுவாயானால், முடிவில் அந்தக் காமம் கற்பனையால் மாமேரு பர்வதமாக மாறி, உன்னை அதளபாதாளத்தில் கொண்டு சேர்த்துவிடும். மனமே! நீ எதை ஜயித்தாலும் ஜயிக்காது போனாலும், பரவாயில்லை. முதலில் காமத்தை ஜயித்து விடுவாயானால் அனைத்தையும் நீ அதிசுலபமாக ஜயித்து விடலாம். ருசி பார்த்த பிறகு ஜயித்து விடலாமென்று ஏமார்ந்து விடாதே. ஒரு தரம் ருசி பார்த்தால் அதுவே உன் வாழ்நாளை கெடுத்துவிடும் என்கிற உண்மையை நீ மறந்து விடாதே. ஒரு தரம் ரத்தத்தை ருசி பார்த்த மிருகம் சும்மாயிராது. எந்த நிமிஷமும் மனிதனைக் கொன்று ரத்தத்தைக் குடிக்க மிருகராஜன் காத்திருப்பான் என்பதையும் சொல்லி விட்டேன். மனமே! காமத்தை அறவே தீய்த்தெறிந்து சாம்பலாக்கி விடுவையாகுக. காமத்திற்கு உன்னிடம் உயிர் இருப்பின் சமயம் பார்த்து உன்னையு மறியாது, வெளி வந்து உன்னை வஞ்சம் தீர்த்துக் கொண்டுவிடும். காமம் குள்ளநரி போன்றதாகும். அதுவரும் சமயத்தை எவரும் காணமுடியாது. உன் உடம்பிலேயே இருக்கிறது காமம். வெளி வரும்போது உன்னைக் கேட்டுக் கொண்டு வராது. உன்னை வஞ்சித்துக் கொல்லவேதான் காமமாகிய துர்தேவதையானது (மாயையானது) உன் உடம்போடு கூடவே பிறந்துள்ளதை நீ மறந்து விடாதே. மனமே! உன்னை உயிருடன் வைத்து சித்ரவதை செய்துவிடும், உன்னிடமுள்ள காமம்.

சொப்பனத்திலும் மறந்து விடாதே. நீ இவ்வுலகில் ஜாக்ரதையாய் இருக்க வேண்டியது காமத்திடம் தான். நீ மறந்து விடாதே. ஜாக்ரதை.

220. ஏ, மனமே! நீ எதனிடமும் அபிமானம் வைக்காதே. எதனிடம் அபிமான மேற்படுகிறதோ, அதுவே உன்னைக் கெடுக்கும் சத்ருவாகி விடுகிற ரகஸியத்தை உனக்குச் சொல்லி விட்டேன். புனிதத்திலும், புனிதமான வஸ்துவானாலும், அதனிடம் கூட அபிமானத்தை வைத்து விடாதே. அபிமானம் மிகக் கொடிய சத்ருவாக மாறி உண்மை அறிவை, ஆத்மாவை, அன்பை, பரப்ரும்மத்தை மறைத்து விடுகிறது. கொடியதிலும், மிகமிகக் கொடியது அபிமானமாகும். அபிமானமே முதல் தரமான உனது விரோதியாகும். அபிமானத்தை இப்பொழுதே ஒழித்து விடுவையாகுக.

221. ஏ, மனமே! ஆசைகளில் மிகக் கொடியது பெண்ணாசை· பெண்ணாசை. உள்ளவன் மனம் கடலில் ஏற்படும் மாபெரும் அலைகளைப் போல் நிலை குலைந்திருக்கும்: பெண்ணாசைக்கு முடிவே கிடையாது. சரீரத்திற்குத்தான் வயதேயொழிய மனத்திற்கு வயதில்லை. அது எப்பொழுதும் யௌவனமாக இருப்பதினால் அப்படிப்பட்ட மனத்திற்கு பெண்ணாசை உண்டாகி விட்டால், மானம், அவமானம், பாவம், புண்யம், நல்லது, கெட்டது, எல்லாம் ஒன்றும் தோன்றாது. காமம் கண்களை மறைத்து விடும். கண்ணிருந்தும் குருடனைப் போல் இருப்பன் காமமுற்றவன். எவரையும் மதியான். எந்த சமயமும் காமுகனுக்கில்லை; காமத்தால் மதம் கொண்ட காமுகன் இராவணனைப் போல் அழிந்தே போவான். மறவாதே.

222. ஏ, மனமே! உனக்குக் கெட்ட எண்ணம் உண்டான உடன் உன்னைக் கெடுக்கும் விரோதி உனக்குள் கெட்ட

எண்ணமாக வந்து விட்டான் என்று உறுதியாய் நம்பு. நல்ல மேலான பேரின்ப நினைவு உண்டாகுமானால் என்னை நல்ல வனாக்க, என்னைப் பரிசுத்தப்படுத்த, என்னைத் தடுத்தாட் கொள்ள இறைவனே எனக்குள் நல்ல புனிதமான, நினைவுருவாக, வந்து விட்டான் என்று உறுதியாக நம்பி விடுவாயாகுக.

223. ஏ, மனமே! ஆசை அகலாதவரை, அறுபடாத வரை, பந்தம் விலகாது. பந்தம் அனைத்திற்கும் முதல் காரணம் உன்னிடமுள்ள ஆசைதான். ஆசையை உன்னுள்ளத்தில் வைத்துக் கொண்டு பந்தம் அகலவேண்டும். எனக்கு ஞான முண்டாக வேண்டும். கடவுள் க்ருபை எனக்குப் பரிபூர்ணமாக வேண்டுமென்று நீ சொல்வதெல்லாம் போலித் தனமான பக்தியாகும். வேதாந்தம் பேசுவதால், படிப்பதால், எழுதுவதால், பிறருக்கு உபதேசம் செய்வதால் உனக்கு யாதொரு பயனும் ஏற்படாது. உண்மையான அனுபவம் உனக்கு உண்டாக வேண்டுமானால் முதலில் ஆசையைத் தியாகம் செய்துவிடு. மறவாதே.

224. ஏ, மனமே! ஒரு தரம் நீ எதனிடமிருந்து இன்பத்தை அனுபவித்தாயோ, அதனிடமே ஸதா காலமும் உனது மனம் நாட்டம் கொண்டு, அதை மேலும் அனுபவிக்கப் பெரு முயற்சி செய்து வரும். சர்க்கரை ருசி பார்த்த குழந்தை அதைத் திருடித் தின்னவும் முற்படும். வெளி உலக இன்பம் எதையும் நீ வேண்டாதே. ஒரு தரம் ருசி பார்த்து விட்டால், நீ அதற்கு அடிமையாகி விடுவாய். எதனிடமும் நீ அடிமையாகி விடாதே. ஜாக்ரதை. ஜாக்ரதை!

225. ஏ, மனமே! உன்னைக் கெடுக்கும் கெட்ட பேச்சுகளுக்கு நீ இடம் கொடாதே. விகாரத்தை உண்டாக்கும் புஸ்தகத்தையோ, பேச்சையோ, கேட்காதே. நல்லவர்கள்

நட்பு மாத்ரம் உனக்கு வேண்டும். உத்தமர்கள் போன்ற வேஷதாரிகளை நீ நல்லவர்கள் என்று நம்பி ஏமாந்து விடாதே. எவரிடமும் அதிகம் பழகாதே. எல்லோரிடமிருந்தும் நல்லவைகளையே ஏற்றுக் கொண்டு, மற்றதனைத்தையும் அறவே விட்டு ஒழித்துவிடு. கெட்டுப்போகும் காலம் வந்தவனுக்கு கெட்ட பேச்சுகள், கெட்ட சிந்தனைகள், கெட்டவர்களுடைய நட்புக்கள், எல்லாமுண்டாகும். நீ ஜாக்ரதை ஆகிவிடு. மறவாதே.

226. ஏ, மனமே! எந்த நினைவு வந்தாலும் அது யாருக்கு வருகிறது, விஜாரணை செய்துபார். எந்த நினைவிற்கும் உனக்குள் இடம் கொடாதே. கற்பனை செய்ய கடுகளவும் இடம் கொடுத்து விடாதே. ஜாக்ரதை.

227. ஏ மனமே! தூயவர்கள். நட்பு, தூய உடை, தூய உணவு, தூய இடம், தூய காற்று, உனக்குக் கிட்டவேண்டு மானால் உன் மனம் தூயதாகி விடும். நீ மனத் தூய்மை பெற்று பேரின்ப அனுபவத்தை இம்மையில் பெற்றுய்யவேண்டு மானால், மேற்கண்ட ஐந்தும் உனக்கு முதலில் வேண்டு மென்பதை நீ மறந்து விடாதே.

228. ஏ மனமே! இன்பமும், துன்பமும் சங்கல்பத்திருந்து தானுண்டாகிறது. சங்கல்பமோ ஆசையிலிருந்து முளைக்கிறது. மனமே! அனைத்தையும் நீ வெல்ல வேண்டுமெனில் முதலில் ஆசையை வேரறுத்து ஒழிக்கவேண்டும். ஆசையை ஒழிக்க சுலபமான வழி சங்கல்பம் செய்வதை உடன் விடுவது தான். சங்கல்பம் செய்யாதே. நல்லதும் வேண்டாம். கெட்டதும் வேண்டாம். இரண்டுமே உன்னை கஷ்டப்படுத்த ஏற்பட்ட தென்பதை நீ மறவாதே.

229. ஏ மனமே! பற்றற்றதாய் உள்ள உனதாத்மாவை நீ அறிய எவைகளையெல்லாமோ நீ பற்றிக் கொண்டு,

ஸங்கல்பம் செய்து வருகிறாயே. முட்டாளே! முதலில் உன்னிடம் உள்ள பற்றுகளை அறவே தியாகம் செய்து விடு. பற்றற்றதாய் உள்ள உனதாத்மா உனக்கு உண்மையாக, நன்கு புரிந்திடும் தனதாத்மாவைத் தனக்குத் தானே தெரிந்து கொண்ட பிறகு உனது நிலை ப்ரும்மானந்தமாகவே இருக்கு மென்பதை நீ மறவாதே.

230. ஏ மனமே! நீ செய்து வரும் ஸங்கல்பம் அனைத்தும் பொய்யாகவே போகப் போகிறது. இல்லாததை, பொய்த்துப் போகப் போவதைப் பற்றி நீ ஏன் இடைவிடாமல் சங்கல்பம் செய்து கொண்டு கற்பனை செய்கிறாய்? மட மனமே! போதும் உனது சங்கல்பத்தை, உனது கற்பனையை, நீ நிறுத்தி விடு. சுகமுதய மாகும் மறவாதே.

231. ஏ மனமே! உன்னை கெடுக்கும் சத்ரு ஆசை என்பதை மறவாதே. ஆசைதான் உன்னை உண்டாக்கி இருக்கிறது. உன்னிடமுள்ள ஆசைதான் எண்ணங்களாக மாறி செயலிலிறங்கும்படி செய்கிறது.

232. ஏ மனமே! ஆசையற்றவனே கோடிகளில் ஒருவனாவான். ஈஸ்வரன் என்ன வேண்டுமென்று கேட்டாலும் ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி விடுவன். வேண்டுமென்று சொல்பவனை துக்கம் பிடித்துக் கொள்ளும். துன்பம் வாட்டி வதைக்கும். உலகிலே உள்ள பிச்சைக்கரரர்களில் அதமனுமாவன். வேண்டாமையில் உள்ள சுகம் உலகில் எவருக்கும் கிட்டுவது அருமையாகும். எதையும் வேண்டாதே. சும்மாயிரு.

233. ஏ மனமே! ஆசையற்றுவிட்டவனை எந்த ஸம்ஸ்காரமும் ஒன்றும்செய்துவிடமுடியாது. எனது பூர்வஜன்ம ஸம்ஸ்காரம் என்றெல்லாம் எதற்கெடுத்தாலும் சொல்லிக் கொண்டு உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு விடாதே.

தலைவிதி, தலைவிதி என்று சோம்பேறியும் லதா சொல்லிக் கொண்டு மேலும் கெட்டுப் போவதைப் போல் நீயும் சொல்லிக் கொண்டு ஏமாருதே. உன்னை நீ ஏமாற்றிக் கொள்ளாதே.

234. ஏ மனமே! நீ பிறரைக் குறை கூறவே கூருதே. தனக்குத் தானே நீ குறையும் பட்டுக் கொள்ளாதே. துன்பங்களையும் சகித்துக் கொண்டு சந்தோஷமாக ஏற்றுக்கொள். இடைவிடாமல் நீ ஸந்தோஷமாக இருக்கப் பழகிக் கொண்டு விடு. பிறரை குறை கூறுபவன் நிறைவுள்ளவனுக மாட்டான். எவைகளையும், எவரையுமே, தவருக, தவறுள்ளவர்களாக நினைக்கக் கூடாது. சந்தர்ப்ப தோஷத்தால், செயற்கை தோஷத்தால்தான் அனைவரும் தவறு செய்கிருர்கள். தவறு செய்யாதவனை உலகில் காணமுடியாது. நீயும் தவறு செய்யாமல் இருக்க முடியாது. தவறையே கண்டு வருபவன் மேலும் மேலும் தவறு செய்து கொண்டே வருவன். நீ தவறு செய்யாத. ஜாக்ரதை.

235. ஏ மனமே! சங்கல்பமிருக்கும்வரை பந்தமும் கூடவே இருக்கும். பந்தம் அறவே ஒழிய வேண்டுமானுல், ஸங்கல்பம் செய்வதைத் தியாகம் செய்து விடுவையாகுக. சங்கல்பத்திஞல்இவ்வுலகமுண்டாயிற்று. சங்கல்பத்திஞல்தான் நீயுமுண்டாஞய். சங்கல்பம் அற்றுவிட்டால் நீ, நீயாகவே இருப்பாய். அது சமயம் பிரபஞ்சம் பொய்யாகிவிடும். இருப்பது நீ தான். அதுதான் மெய்யாகிறது. அதுதான் ஸத்யமானது. அதுதான் ஆனந்தமாகும். அதுவே ப்ரும்மமாகும். மறவாதே!

236. ஏ மனமே! எண்ணம் எப்படியோ அப்படியே உனதகத்துள் செயல்கள் இருந்து வரும். நினைக்க வேண்டியவைகளை நினைத்து வா, வேண்டாதவைகளை ஸங்கல்பம் செய்வதால் முதலில் கெடுவது உனது மனம் தான். மனம் எப்படியோ அப்படியே அனைத்தும். மறவாதே.

---

237. ஏ மனமே! பிரும்மானந்தம் உனக்கு வேண்டுமா? ஸங்கல்பத்தை தியாகம் செய்து விடு. மற்றவைகளை தியாகம் செய்து விட்டதனால் பிரயோஜனமில்லை. முதலில் தியாகம் செய்ய வேண்டியது ஸங்கல்பமாகும். ஸங்கல்பம் அற்றால் பந்த பாசங்கலனைத்தும் தானே துண்டித்து விடும். பின்பு, உன்னுடன் உன்மயமாக இருப்பது ப்ரும்மானந்தமே யாகும். ப்ரும்மானந்தத்தை தேடி ஓடாதே. ப்ரும்மானந்தம் உனக்குள்ளே இருக்கிறது, அதை நீ அனுபவிக்க வேண்டுமானால், ஸங்பல்பம் செய்வதை தியாபம் செய்துவிடுவாயாகுக.

238. ஏ மனமே! எதை நினைக்கிறாயோ, அதன் மயமாக (அதன் உருவமாக) நீ முதலில் ஆகி விடுகின்றாய். எதையும் நீ நினையாதே. எதை நினைப்பினும் அது உன்னைக் கெடுத்து விடும். எண்ணமற்றவனாக இருந்து விடு. அதுவே நீ செய்ய வேண்டிய தவமாகும். தபசு, தபசு என்பதெல்லாம் ஸங்கல்ப மற்றிருப்பதுதான். மனத்தை அடக்கி, ஸங்கல்பம் அற்றிருக்க முடியாதவர்களுக்காகவே, பலவிதமான மார்க்கங்களைச் சொல்லியிருக்கிறார்கள். உத்தம அதிகாரியானவனுக்கு தபசு சங்கல்பமற்று இருப்பதுதான். மறவாதே.

239. ஏ மனமே! பிரபஞ்சத்தை நினைக்காதே. முதலில் உன்னை நீ நினைத்துக் கொள். நான் யார்? என்று விஜாரணை செய். உன்னை நீ அறிந்து கொள். பிறகு நீ தன்மயமாகி விடுவாய். பந்தம் அற்றுப்போகும்,

240. ஏ மனமே! நீ பிறந்ததற்குக் காரணம் ஸங்கல்பம் ஆகும். பந்தத்திற்கு காரணமும் ஸங்கல்பம்தான். ஸங்கல்பத்தினால் தான் இந்த அபார ஸம்ஸாரம் உண்டாயிற்று. உனக்கு பந்த நிவர்த்தியுண்டாக வேண்டுமெனில் ஸங்கல்பம் செய்வதை அறவே விட்டு விடு. மோக்ஷம் தானே உன்னைத் தேடி வரும். மறவாதே.

241. ஏ மனமே! நீ பழக வேண்டிய முதல்தரமான சாதனை நான்யார்? என்று உன்னை நீயே கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்வது ஒன்றுதான் உத்தமமான வழியாகும்.

242. ஏ மனமே! பாவனைகள் (ஸங்கல்பங்கள்) எங்குள்ளதோ அங்கு உலகமனைத்தும் உண்டு. பாவனையற்ற சுத்தப்ரும்மமாக நீ இருக்கவேண்டுமானால், ஸங்கல்பம் செய்யாதே. ஒவ்வொரு ஸங்கல்பமும் ஒவ்வொரு ஆலமரத்தின் விதைக்கு சமமாகும். ஒருவிதை பூமியில் விழுந்து, அது முளைத்துப் பெரிதாகிப் பூத்துக், காய்க்கத் தொடங்கி, காய் பழமாகி விட்டால், ஒரு விதையினால் உண்டான மரத்தில் பல லக்ஷம் ஆலம் பழம் உண்டாகிவிடும். ஒரு பழத்தில் எத்தனை விதைகள் இருக்கிறதென்று பார்த்தால், பல நூற்றுக்கணக்கான விதைகள் இருக்கலாம். ஆலமரமோ, வருஷா வருஷம் பல கோடான கோடி விதைகளை கிருஷ்டித்துக் கொண்டேயிருக்கிறது. மனமே ஆலமரத்தின் கதை போல்தான் உனது ஸங்கல்பமாகிய விதைகளின் கதையும். மறந்து விடாதே.

243. ஏ மனமே! சிந்தனை செய்யாதிரு. நீ வேதனைப் படுவதற்குக் காரணம் உன்னிடமுள்ள சிந்தனைதான். சிந்தனை செய்பவன் வேதனைக்குள்ளாவது திண்ணம். மனமே! உனக்கு அந்நியமானவைகளைப் பாராதே. கேட்காதே. உன்னையே நீ பார்த்து வா. உன்னைத் தவிர வேறு உலகில் இல்லை. நம்பு! சிந்தனை செய்வதை அறவே நிறுத்து. உனக்கு க்ஷேமம் உண்டாகும். நம்பு! நம்பு!!

244. ஏ மனமே! குற்றம் காணாதே. பிறரிடம் குற்றம் கண்டவுடன் உன் மனம் அதைப் பற்றியே சிந்திக்கத் தொடங்கிவிடும். கள் குடிப்பது குற்றமேதான். கள் குடிப்பவனையே நீ சிந்தனை செய்வாயானால் அவன் செய்த குற்றத்தை நீயும் செய்தவனாகி விடுவாய். நீ குடிக்காமலேயே

உனக்கு போதை வந்தவன் போலாகி குடிக்கவும் தொடங்கி விடுவாய். பிறகு கொஞ்ச நாளில் நீயும் உண்மையாகவே குடிக்கவும் தொடங்கிவிட நேர்ந்துவிடும். பிறர் குற்றத்தை மறந்துவிடு. உனக்கு நல்லது, உன்னையும் கெடுக்காது. மறவாதே.

245. ஏ மனமே! உனது நிழல் உன்னைவிட்டுப் பிரியாமல் எப்படிக் கூடவே வருகின்றதோ, அப்படியே உனதுள்ளத்திலுள்ள எண்ணங்களும் உனது கூடவே வரும் என்பதை நீ மறந்துவிடாதே. எண்ணம் எப்படியோ அப்படித்தான் உனக்கு சுகம் கிட்டும். நீயே தீய எண்ணம் ஆனால் தீய செயலில் நீ ஈடுபட்டே தீருவாய். நல்ல எண்ணம் ஆனாலும் அதன்படிதான் நீயுமியங்குவாய். முதலில் மனத்தைச் செம்மையாக்கவேண்டும். மனதைச் செம்மை யாக்கும் நல்லவழி ஸத்ஸங்கம்தான். நீ ஸத்ஸங்கத்தில் ஈடுபடுவாயானால், உனது மனதுக்கு நல்ல எண்ணமே உண்டாகும். பிறகு நீ செய்வதனைத்தும் நல்லவைகளாகவே இருக்கும். மறந்துவிடாதே.

246. ஏ மனமே! உன் கண்ணால் கண்ட அனைத்தையும் படம் பிடித்து வைத்துக்கொண்டு விடுகிறாயே. உனக்கு இது சமயம் என்ன வயதாகிறது? எண்ணிப்பார். நீ இது வரை உன் மனத்தில் எத்தனை போட்டோ படங்களைப்பிடித்து வைத்திருக்கிறாய்? இது உனக்கு வெட்கமாக இல்லையா? வேண்டாதனைத்தையும் படம் பிடித்து உனக்குள் வைத்துக் கொள்வதால் உனக்கென்னலாபம் இருக்கின்றது? மனமே! அனாவசியப் பொருள்களை உனக்குள் வைத்துக் கொள்ளாதே. அனைத்தையும் வெளியே கொண்டுவந்து புதைத்துவிடு. இனி மேல் நல்லவைகளை (கடவுளை)ப் பார். அவரைப் பிடித்துக் கொண்டு உனக்குள் வைத்துக்கொண்டுவிடு. வேறொன்றை நினையாதே. படம் பிடியாதே. ஒரு கடவுளைத்தவிர

வேறொன்றை அகத்துள்ளும் சரி, புறத்தும் சரி நினையாதே. நீ இப்படி செய்துவிடுவையாகில் உன்மனம் கடவுளாகவே இருந்துவரும். மறந்துவிடாதே.

247. ஏ மனமே! இவ்வுலகில் மெய்யெது, பொய்யெது என்பதை நீ நிமிஷந்தோறும் உனது பகுத்தறிவினால் விஜாரணை செய்து பார். நல்லறிவுடையோய்! உனக்குப் பகுத்தறிவிருப்பதற்கு என்ன அடையாளம். நீ அனைத்தையும் பகுத்தறிந்து பார்ப்பாயாகுக. இடைவிடாமல் விஜாரணை செய்து பார்ப்பாயானால் உனக்குளுள்ள சத்தியம், ஞானம் ஆனந்தம் உனக்குத்தெரியவரும். பிறகு உன் கண்ணால் பார்ப்பதனைத்தும் அழியக் கூடியதுதான், என்பதை நீ நன்குணர்ந்து கொள்வாய். விஜாரணை செய்பவனுக்குத்தான் உண்மைப் பொருள் உள்ளத்தில் புரியும்; பிறகு தனக்கு அந்நியமானதெல்லாம் மறைந்து போகும். இடையருத விசாரத்தினால்தான் நாம, ரூப ஸங்கல்பங்கள் ஆகியவைகள் இல்லாது போகும். மனமே! எதுபொய், எதுமெய் என்பதை விஜாரணை செய்துவா, மறவாதே.

248. ஏ மனமே! உனது உள்ளத்தில் நீ சதா வேதனைப் பட்டுக் கொண்டிருப்பதற்குக் காரணம் சொல்லிவிடுகிறேன். கேள். அதுதான் பிறவஸ்துக்களிடம் உனக்குள்ள மோஹம், ஆசை, காமமுமாகும். உனக்குக் காமனை உள்ளவரை நீ மஹத்தான துக்கத்தை இடையருது அனுபவித்தே ஆக வேண்டுமென்பதை நீ மறந்துவிடாதே. காமம் உன்னை உயிருடன் இருத்தி, வதைக்கும். மோஹமோ இடைவிடாத சோகத்தை உண்டாக்கி வைத்துக்கொண்டிருக்கும். ஆசையோ அனைத்தையும் கெடுத்து விடும். உனதாத்மாவையும் மறைத்து விடும். பலகோடி பிறவிகளையும் உனக்கு உண்டாக்கிவைக்கும். கொடிய நரகமாகிய சொத்தை உனக்குச் சொந்தமாக்கியும் தந்துவிடும். ஜாக்ரதை. ஜாக்ரதை.

---

249. ஏ மனமே! நீ தினமும் நிமிஷந்தோறும் உனது பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, துன்பம் இவற்றால் உனக்குண்டாகும் கொடிய தீமைகளை இடைவிடாமல் சிந்தனைசெய்துவா. விஜாரித்து வா. முதலில் சிந்தனை செய்து உண்மையைத் தெரிந்து கொள். பிறகு சிந்திக்காமல் சும்மாயிரு. சுகம் உதையமாகும். மறவாதே.

250. ஏ மனமே! உன்னையுமறியாது மோஹத்தினால் நீ உனது சொந்த நல்ல உள்ளமாகிய நிலத்தில் பயிரிடுகிறாய். பயிர் முளைத்து செடியாகி விருக்ஷமானவுடன் (மரமானவுடன்) பூத்துப் பிஞ்சாகிக், காய்த்துப் பழமானவுடன், பழத்திலிருந்து கொடிய விஷம் நிறைந்த, ஸதாகாலமும் இடைவிடாமல் துக்கத்தைத் தரும் விஷவித்துக்கள் கோடிக்கணக்காக உண்டாகி, அவைகள் ஒவ்வொன்றும் மேலும் பலகோடி கோடி விஷ விருக்ஷங்களையும் உண்டாக்கி வைத்துக்கொண்டே இருக்குமென்பதை நீ மறந்துவிடாதே. மனமே! மோஹத்தினாலும், ஆசையாலும் பற்றுவது கொடிய விஷம் நிறைந்த துக்கமாகுமென்பதை நீ சொப்பனத்திலும் மறந்து விடாதே. ஜாக்ரதை.

251. ஏ மனமே! ஆசையினாலுனது வாழ்க்கையே வீணாகிப் போவதை நீ ஏன் மறந்து விட்டாய். நீ ஆசைப்படுவது ஒன்றாவது நிலைத்திருக்கப் போவதில்லை. எதுவும் நிலையற்றதென்பதை நீயேன் மறந்து போகிறாய். சிந்தித்துப்பார். விஜாரணை செய்து தெரிந்துகொள். உலகவாழ்வு நிலையற்றதாகும். மின்னலைப்போல் உண்டாகி அழிந்துபோகும் உலகில் நீ எதை சாஸ்வதமென்று நீ நினைத்து, அதனிடம் ஆசைப் படுகின்றாய்? எதனிடமும் ஆசை வைக்காதே. நீ எதனிடம் ஆசைப்படுகின்றாயோ, அதுவே உனது முதல் சத்ருவாகும். அது எதுவானாலும் சரி. அது உன்னை உயிருடன் வைத்து, சித்ரவதை செய்து பாழ் நரகில் கொண்டு தள்ளியும் விடுமென்பதை மறவாதே. ஜாக்ரதை.

252. ஏ மனமே! நீ, ஆசைக்குள் துன்பமும், துன்பத்திற்குள் ஆசையும் கலந்திருக்குமென்பதை மறந்துவிடாதே. ஆசை இருக்குமானால், துன்பத்தையும் கூட அனுபவித்தே ஆகவேண்டும் என்பதையும், நம்புவாயாகுக. ஏ மனமே! வீண் கற்பனைகளைச் செய்து ஆசைகளைப் பெருக்கிக் கொள்ளாதே. ஆசை இருக்குமானால் தொல்லையும், துன்பமும் உறுதியாக உனக்குண்டாகும். மறந்துவிடாதே.

253. ஏ மனமே! சோம்பலுக்கு இடம் கொடாதே. சோம்பேறிகளை பிசாசுகள் தங்கள் இருப்பிடமாக்கிக் கொண்டு ஸதாகாலமும், தீய எண்ணங்களையே உண்டாக்கிக்கொண்டு குடியிருக்கின்றதென்பதை நீ மறந்துவிடாதே. ஒவ்வொரு நிமிஷமும் நீ ஜாக்ரதையாக இரு. சோம்பலுக்கு இடம் தந்து விடாதே. சோம்பேறிகள் கெட்ட சிந்தனையுள்ள பிசாசுகளே ஆவார்கள். மறந்துவிடாதே, ஜாக்ரதை.

254. ஏ மனமே! உன்னைக் கெடுப்பது மண், பெண், பொன்னாசைகளாகும். மூவாசையால் உனது மனம் நெருப்பில் இட்ட மெழுகுபோல் உருகிப் போகிறதை நீ மறந்துவிடாதே. ஆசையிருப்பவன் மனம்போனபடி போய்த் தீராத துன்பத்தையும், துக்கத்தையும் தானே வாங்கிக்கொண்டு கஷ்டப் படுகிறான். மனமே! இந்த ஜகத்தைப் பற்றிய கற்பனைகளை அறவே விட்டுவிடு. உலகமனைத்தும் (உனது) மனத்தின் கற்பனையாகும். மனமுண்டு என்றால் உலகமுண்டு. மனம் அற்ற இடத்தில் இவ்வுலகமில்லை. எவ்வுலகமுமில்லை. மனமே! உன்னைக் கெடுப்பது ஆசைதான். எதனிடமும் நீ ஆசைப் படாதே. ஆசையற்ற மனத்தில் இன்ப துன்பங்கள் அறவே ஒழிந்துபோகும். மிஞ்சுவது நீதான், அதுதான் உனது நிஜ ஸ்வரூபம். அதைத்தான் ப்ரம்மம் என்கிறார்கள். நீ ப்ரும்மமாக வேண்டுமானால், முதலில் ஆசைகளை அறவே விட்டுவிடு.

*அதிஷ்டானம், புதுக்கோட்டை.*

ஸங்கல்பங்கள் தானே ஒழிந்துபோகும். ஸங்கல்பமில்லை யென்றால் இன்பமுமில்லை, துன்பமும் உனக்கில்லாது போகும். அனைத்தும், உன் மயமாகி நீ இடைவிடாத இன்பமயமாகி, விடுவாய். மறவாதே.

255. ஏ மனமே! கடமையைச் செய்பவனே உன்னத நிலையை எய்தமுடியும். உனது கடமை இடைவிடாமல் கடவுளை நினைப்பது, வழிபடுவது, போற்றுவது, அ ந் நி ய ம ா க உபாஸித்துத்தியானம் செய்வதுதான் ஒன்றே வழியாகும், என்பதை நீ மறந்துவிடாதே. உனக்குள்ள கடமைகளைச் சரிவரச் செய்வதே நீ செய்ய வேண்டிய தவமாகும். அதுவே யோகமும், பக்தியும், கர்மமும், ஞானமுமாகு மென்பதை நீ மறந்துவிடாதே.

256. ஏ மனமே! உனது உடல் கஷ்டப்படுவதற்குக் காரணம் உனக்குத் தெரியுமா? அதை சொல்கிறேன் கேள். உனது மனம் தனது ஸங்கல்பங்களினால் உனது உடலை ஆட்டி வைக்கிற தென்பதை நீ மறந்து விடாதே. ஒரு ஸங்கல்பத்தை உனது மனம் முதலில் உண்டாக்கியவுடன், பிரபஞ்சமனைத்தும் உனக்குள் வந்து விடுகின்றது. ஆசை நிறைவேறாத போது, துக்கம் மேலிட்டு, உனதுடல் பூராவும் கஷ்டத்தை உண்டாக்குகிறது. மனமே! ஆரோக்யத்திற்கும், உனக்குண்டாகும் ரோகத்திற்கும் காரணம் ஸங்கல்பமேயாகும். உனது மனம் அலையற்ற கடல்போல் ஸங்கல்பம் இராமல் இருக்குமானால், நீ ஆரோக்யமாக, கவலையற்று, நிம்மதியுடன், சுகமாக சும்மா இருக்கலாம். மனம் ஸங்கல்பம் செய்து விடுமானால் ப்ரபஞ்சமனைத்தும் உனக்குள் வந்து உன்னை வேதனைப்படுத்தி, வதைத்துக் கொண்டிருக்கும். ஆசையினால் ஸங்கல்பம் மேலிடுகிறது. ஸங்கல்பத்தினால் சகல அனர்த்தங்களும் உனக்கு உண்டாகிற தென்பதை நீ மறந்துவிடாதே.

257. ஏ மனமே! உனக்கு ஆசையுண்டாக எனச்சொல். அது சீக்கிரம் நிறைவேற பதட்ட முண்டாகிறது. பிறகு, தாமதமாகுமானல், கவலையும் கூடவேவந்து உன்னைச் சிரமப் படுத்தும். ஆசை நிறைவேருதபோது, அனைவரிடத்திலும், துவேஷமும், பொருமையும், சூது. வாதுகளும் உண்டாகி, உன்னைக் கெடுக்குமென்பதை நீ மறந்து விடாதே.

258. ஏ மனமே! நீ ஒன்றையுமே நினைத்துக் கொள்ளாமல் சும்மாயிரு. அதுதான் உண்மையான தியான மாகும். மேற்கண்டபடி நீ தியானம் செய்து வருவாயானல், உன்னுடைய ஹ்ருதயக் குகைக்குள் இருந்து கொண்டிருக்கும் உனதாத்மாவாகிய இறைவனை நீ உனது மயமாகவே உணர்ந்து கொள்வாய். பிறகு கவலையற்றுவிடும். நீ கவலைப் படாமல் இருக்க இதுவே நல்ல சுலபமான, சுகமான வழியாகு மென்பதை நீ மறந்து விடாதே.

259. ஏ மனமே! நீ ஸங்கல்பத்தை அறவே தியாகம் செய்தால்தான், உனக்குத் தியாகம் ஸித்தியாகும். எண்ணக் கூடாத எண்ணங்களை நீ எண்ணி வருவதால், உனக்கென்ன லாபமிருக்கிறது? சொல். பிரயோஜனமற்ற, உன்னைக் கெடுக்கும் ஸங்கல்பங்களை நீ செய்து வருவதால் நீ எப்படி க்ஷேமத்துடன் இருந்துவரமுடியும்? சொல். உனக்கே க்ஷேமமுண்டாக வேண்டுமென்று நீ தவம் செய்வதாகவும் சொல்கிருய். உன்னைப் பாழ் நரகத்தில் தள்ளி வதைக்கும் ஸங்கல்பங்களை நீ இடைவிடாமல் செய்து கொண்டிருக்கிருய். என்னே உனது சிறுபிள்ளைத்தனம். மனமே! ஸங்கல்பம் இருக்கும்வரை உனக்கும், முக்திக்கும், வெகு தூரமாகும். நீ பேசிவரும் மோக்ஷத்திற்குக் கொடிய விரோதி ஸங்கல்பமாகும் என்பதைச் சொல்லிவிட்டேன். நீ இம்மையில் ஜீவன் முக்தனுக வேண்டுமென்கிற எண்ணம் உனக்கு ஸித்திக்க வேண்டுமானுல் இக்கணமே ஸங்கல்பத்தைத் தியாகம் செய்து விடுவையாகுக.

---

260. ஏ மனமே! உன்னை நீயே இடையறாது நான் யார்? நான்யார்? என்று கேட்டுவா. உனது ஞாபகமனைத்தும் உன்னையே நீ, நான்யார்? என்று கேட்பதில் ஸதாகாலமும் ஈடுபட்டுக் கொண்டே இருக்கவேண்டும். வேறு எண்ணம் வருமானால் அது யாருக்கு வருகிறதென்று உன்னை நீயே கேட்டுக்கொள். முடிவான பதில் உனது ஹ்ருதயத்திற்குள் இருந்துவரும். மறவாதே.

261. ஏ மனமே! எந்த பாவனைகளையும் செய்யாதே. இரண்டு பாவனைகளும் பிறவியை உண்டு பண்ணும் வித்தாகும். ஸங்கல்பம் இருப்பவன் பிறந்தேயாக வேண்டும். நீ பிறவாமல் இருப்பதற்கு ஒரேவழி பாவனையற்று இருப்பதேயாகும், பாவனை இருக்கும்வரை உன்னையும் அறியாமல் நீ பாவம் செய்து விடுகிறாய். பாவனைகளைத் தியாகம் செய்துவிடு. இக்கணமே பாவனையற்று சும்மாயிரு. உனக்குள் சுகமுதயமாகிவிடும்; மறவாதே.

262. ஏ மனமே! சிந்தனையற்றிருப்பாயாகுக. நல்லது கெட்ட, சிந்தனைகள் எதுவுமே செய்யாதே. சிந்தனை அற்று இருப்பவனே ஜீவன் முக்தனாவான். ஜீவன் முக்தி, மோக்ஷம், என்பதெல்லாம் ஸதாகாலமும் சிந்தனையற்று இருப்பதுதான் என்பதை மறந்துவிடாதே. சிந்தனையற்று இருப்பவனையே ஸஹஜ சமாதியில் இருப்பவர்கள் என்று சாஸ்திரம் கூறுகிறது. நிர்விகல்பஸமாதிக்கும் மேலான நிலையாகும் ஸஹஜ ஸமாதிநிலை. மனமே! மேலான, நிலையான, ஸஹஜ ஸமாதிநிலை உனக்கு வரவேண்டுமானால் சிந்தனை செய்யாதே. ஸங்கல்பத்தைத் தியாகம் செய்வாய் ஆகுக. ஸங்கல்பமற்றுவிட்டால் சிந்தனைகள் மறைந்துபோகும். சிந்தனையற்றவனிடம் அணுவளவு ஆசையும் இராது. ஆசை அற்றவன், ஸங்கல்பமற்றவன், சிந்தனையற்றவன் என்பவர் எல்லாம் இம்மையில் ஸஹஜ ஸமாதி நிலையை அதிசுலபமாக

அடைந்துய்வார்கள் என்பதையும் உனக்கு சொல்லிவிட்டேன். இப்பொழுதே நீ செய்துவரும் ஸாதனைகளனைத்தையும் தியாகம் செய்துவிடு. நீ சும்மாயிருப்பதே நீ முதலில் செய்ய வேண்டிய ஸாதனையாகும். நீ சும்மாயிருக்க வேண்டுமானால் சிந்தனை செய்யாதே. ஸங்கல்பம் செய்யாதே. எதனிடமும் இதைச் செய்யவேண்டும், அதைச்செய்ய வேண்டுமென்கிற ஆசையை இக்கணமே தியாகம் செய்து விடுவையாகுக. மறந்துவிடாதே.

263. ஏ மனமே! சும்மாயிரு என்றால் பலன் என்ன. என்று எதிர்ப்பார்க்கிறாயே? பலன் வேண்டுமென்கிற எண்ணம் உனக்கு இருக்கும்வரை பாவமும் உன் கூடவே வரும். பலனைத் தியாகம் செய்துவிடு. எது வந்தால் உனக்கென்ன. நல்லதும், கெட்டதும் இருவிலங்குகளேயாகும். எந்த விலங்கு உனக்கு நன்மையைத்தரப்போகின்றது. மனமே! சும்மாயிரு. எதையும் விரும்பாதே. எந்தத் தயக்கமும் செய்யாதே. சிந்தனையற்றிரு. நீயேசிவமாவாய். நீயே ஜீவன் முக்தனுமாவாய். நிஜமாகச் சொல்லிவிட்டேன். சும்மாயிரு. மறந்துவிடாதே.

264. ஏ மனமே! ஆதியந்தமில்லா இன்பத்தை நீ இப்பொழுதே அனுபவிக்க வேண்டுமானால் நீ சும்மாயிருப்பாயாகுக. சும்மாயிருப்பவனுக்குத்தான் சுகமுதையமாகும். ஸங்கல்பத்தினால் நீ வேதனைப்பட்டதுபோதும். இனி எந்த ஸங்கல்பத்தையும் செய்யாதே. எது வேண்டுமானாலும் நடக்கட்டும். நடக்காது போகட்டும். வரட்டும். வராது போகட்டும். சூரியன் உதயமாகட்டும், ஆகாமல் போகட்டும். இவ்வுலகமிருக்கட்டும், இல்லாது போகட்டும். எதைப் பற்றியும் நீ நினைக்காதே. நீ சும்மாயிருப்பதே உனக்குள்ள வேலையாகும். உனது வேலையை உறுதியாகச் செய்துவா.

---

இதுவே ஜபமாகும், தியானமுமாகும். தவமென்பதெல்லாம் சும்மாயிருப்பதே ஆகும். மறவாதே.

265. ஏ மனமே! இவ்வுலகை அறியும் கல்வியினல் புகழும், காசுமே உனக்குக் கிட்டும். மேலான பேரின்பத்தைத் தரும், தன்னை அறியும் கல்வியை நீ எப்போது கற்கப் போகிருய். இவ்உலகைப் பற்றிப் பிறர் மயங்கப் பேசியும், எழுதியும் பிரயோஜனமில்லை. உனக்குப் பிரயோஜனம் உன்னையறியும் கல்வியும், பேச்சுமே உனக்கு வேண்டும் என்பதைச் சொல்லிவிட்டேன். தன்னை அறிந்துய்ய வேண்டிய கல்வியை முதலில் கற்றுக் கொள்வாயாகுக.

266. ஏ மனமே! பிறவிப் பிணியாகிய நோயைப் போக்கும் மருந்து உன்னை நீயே ஸதாகாலமும் நான்யார்? நான்யார்? என்று கேட்டு உனக்குள்ளேயே தன்னைத் தெரிந்து கொள்வது ஒன்ருகும். தன்னை அறிந்து கொண்டவனே காய கல்பமுண்டவன். அவனே சிரஞ்ஜீவியாக எந்நாளும் இவ்வுலகமழிந்தபோதும், தன்னை அறிந்து கொண்டவன் ஒருவனே இருந்து வருகிருன் என்பதை நீ மறந்துவிடாதே.

267. ஏ மனமே! நீ இறக்கப்போவது உறுதியாகும். சாவதற்கு முன் நீ எதற்காகப் பிறந்தாயோ, அந்தக் கார்யத்தைப் பூர்த்தி செய்யாது போனல் மீண்டும், மீண்டும் நீ பிறந்து கொண்டேதானிருக்கவேண்டும். மனமே! நீ பிறந்துள்ளது உன்னை நீ அறிந்து கொள்ளத்தான். இவ் உடம்பிருக்கும்போதே, உன்னை நீ உனக்குள் அறிந்து கொண்டுவிடு. உடனடியாக உன்னை நீ அறியும் நற்பணியைத் துடங்கி விடுவையாகுக. மறவாதே!

268. ஏ மனமே! பிறருக்குத் துக்கத்தை உண்டாக்கி விடாதே. பிறரை இகழாதே. அனைவரையும் உனது ஆத்ம பந்துவாகவே உறுதியாக நம்பிப் பழகிவா. பிறரை வெறுத்தும்

பேசுவதைப் போன்ற தீயவொழுக்கம் வேறில்லை. அனைவரும் உன்னைப் போற்றும் படியான நல்லறத்தையே இடைவிடாது நான் செய்து வருவேன் என்று நீ உறுதியெடுத்துக் கொண்டு விடு. பொறுமையாய் அனைத்தையும் இடைவிடாது செய்துவா. உன் தலையே போகுமானாலும் போகட்டும். பொய் சொல்லாதே. சத்தியத்தை நம்பி விடு. அனைத்திலும் வெற்றிக் கிட்டும். மறவாதே.

269. ஏ மனமே! நல்லவர்கள் பேசுவது அனைத்தும் சாஸ்திர சம்பிரதாயமாகவே இருக்கும். நல்லவர்கள் தமது மனம் போன போக்கில் போகமாட்டார்கள். எதைச் சொன்னாலும், செய்வதனைத்தும் சாஸ்திரத்திலுள்ளதுபடிதான் சொல்வார்கள். மனமே! அப்படிப்பட்ட நல்லவர்களை நம்பு. நல்லவர்களையே தோழனாக்கிக் கொண்டுவிடு. நல்லவர்கள் சொல்வதைக்கேட்டு அதன்படி நடந்துவிடு. உனக்கு யாதொரு கேடும் உண்டாகி விடாது. நலமனைத்தும் கிட்டும். நம்பு.

270. ஏ மனமே! பிறருக்குத் துன்பத்தைக் கடுகளவு நீ செய்வாயானால், அதுவே உன்னைக் கெடுக்கப் போதுமானது. பிறர் உனக்குக் கெடுதல் செய்து விட்ட போதிலும் நீ பொறுமையாய் இரு. கேடு நினைத்தவன், கேட்டைச் செய்தவன் யாராயிருப்பினும் அவனிழைத்த, செய்த கேட்டின் பலன்களை அவனை நிழல்மாதிரி பின்பற்றிக் கேட்டைச் செய்து விடுமென்பதை நீ மறவாதே. ஜாக்ரதையாக இரு.

271. ஏ மனமே! நீ கஷ்டப்பட்டு நேர்வழியில்கிடைத்த பொருளை தர்மம் செய்துவா. பிறரை ஏமாற்றிக் கொண்ட பொருளை நீ தர்மம் செய்வதால் அந்தப்புண்ணியம் அவர்களையே சாரும். ரகசியம் புரிந்து கொள்ளாத பிறர் உன்னை தர்மிஷ்டன் என்று மெச்சுவார்கள். ஆனால் தர்மத்தின்

புண்ணியம் செல்லுமிடம் வேருகுமென்பதை நீ மறந்து விடாதே. உண்மையாக இரு. பிறரை ஏமாற்ருதே. கஷ்டப் பட்டுக் கடுகளவு ஸம்பாதித்ததை தர்மம் செய். அந்தத் தர்மம் உன்னை ரக்ஷிக்கும். மறவாதே!

272. ஏ மனமே! உன்ஞல் முடியாததை நான் செய்து விடுகிறேன் என்று நீ உறுதி கூருதிருப்பாயாகுக, உன்ஞல் முடியாததைப் பிறர் செய்வதைக்கண்டு நீ பொருமைப்பட்டு அவர்களைப் பழித்தும், இழித்தும் கூறிவிடாதே. எதையும் நன்கு யோஜித்துப் பேசி முடிந்ததை உறுதியாகச் செய்துவா. முடியாத செயல்களை என்ஞல் முடியாது என்று கூறிவிடுவதே உனக்கு நல்லதாகும். மறந்துவிடாதே.

273. ஏ, மனமே! பிறர் உன்னைப் பார்க்கும் போது, அவர்களுக்கு அருவருப்பு உண்டாகும்படி நீ நடந்து கொள்ளாதே. உன்னுடைய அகத்தின் அழகுதான் முகத்தில் தெரிகிறதென்பதை நீ மறவதே. உன்முகத்திலுண்டாகும் அருவருப்பானது உனதகத்தில் இருந்து வெளியேறி வருகிற தென்பதை நீ உணர்ந்து கொண்டுவிட்டாய். ஆஞல் உனதகத்துள் உள்ள அருவருப்பை நீ வெறுத்து அவைகளை அழித்துத்தொலைத்து விட்டால். பிறகு உன்முகம் ஸதாகாலமும் பிரசன்னமாகவே இருக்கும். மனமே! அருவருப்பை உண்டாக்கும் துர்குணம் அணு அளவாவது கூட உன்னிடம் இருக்கக்கூடாது. கடுகளவு அருவருப்பை உண்டாக்கும் குணம் உன்னிடமிருப்பின் அதுவே உன் வாழ்நாளைக்கெடுத்துவிடும் என்பதை நீ மறவாதே.ஜாக்ரதை.

274. ஏ மனமே! கீழ்மக்கள் என்பவர்கள் எல்லாரும் யாரென நீ நினைத்தாய்? அவர்களனைவரும் தன்னை அறியாத வர்கள்தான். எவன் இம்மையில் தன்னைத் தனக்குள்தான் அறிந்து கொள்ளாதவர்களனைவரும் கீழ்மக்களாவார்

கள். மனமே! நீ மேன்மக்களாக வேண்டுமானால் உடன்
னக்குள் உன்னை நீ நான்யார்? நான்யார்? என்று கேட்டு.
இம்மையில் தனக்குத்தானே அறிந்து கொண்டு விடுவாயாகுக.

275. ஏ மனமே! உன்னை நீயே போற்றிக் கொள்ளாதே. பிறரை நீ போற்றவேண்டுமென்பதற்காகவே கடவுள் உன்னைப் படைத்துள்ளார். தன்னைத்தானே போற்றிக்கொள்பவன் அதர்மங்களின் தலைவனாவான். உன்னைப்பிறர் போற்ற வேண்டுமே ஒழிய தன்னைத்தானே நீ போற்றிக்கொள்வது மிகவும் வெட்கக் கேடான செய்கையாகும். பிறரை நீபோற்றினா. பின்பு பிறர் உனையும் போற்றுவார்கள், இதுவே கடவுளுக்கும் சமமாகும்மென்பதை உனக்குச் சொல்லி விட்டேன். மறந்து விடாதே!

276. ஏ மனமே! உனக்குள் மாசிருக்குமானால், அதுவே உன்னைக் கெடுத்துவிடும். மனத்தின் கண் மாசில்லாதிருப்பது தான் மிகப்பெரிய தவமாகும். தவம், தவம் என்பதெல்லாம் தமக்குள்ளிருக்கும் மாசுகளைக் களைவதற்கேயாகுமென்பதை நீ மறந்து விடாதே. உண்மைப் பொருள் உனக்குள் உண்மையாகத் தெரியவேண்டுமானால் உனது உள்ளத்தில் உள்ள மாசுகளை அறவே நீ போக்கிக்கொண்டு விடுவாயாகுக.

277. ஏ மனமே! அடக்கம், பொறுமை. நேர்மை, சத்தியம் முதலிய நல்லொழுக்கமில்லாதவனின் உபதேசம் ஊரையே கெடுத்துவிடும். மனமே! நல்ல புஷ்பங்களைத் தேடிச் சென்று தேனைச் சேகரிக்கும் வண்டைப்போல் நீ அனுபவமுள்ள மஹான்களைத் தேடிச்சென்று அவர்களுடைய அனுபூதி வாக்கை கேட்டு அதை மனதில் பதித்து வைத்துக்கொண்டு, அதன்படி நீயும் நடந்து வருவாயானால் இவ்வுலகில் நீ நல்லொழுக்கத்தின் இருப்பிடமாகத்திகழ்வாய் என்பதை மறந்து விடாதே.

---

*அதிஷ்டானம், புதுக்கோட்டை.*

278. ஏ மனமே! நீ இவ்வுலகமக்கள் அனைவரையும் பெற்ற தாயைப் போல் கருதி விடுவாயானால் எவரிடமும் உனக்கு ஏற்றத்தாழ்வு உண்டாகாது. தாயின் மடியில் ஒரு குழந்தைக்குப் பாலும், மற்றொரு குழந்தைக்கு நீருமா சுரக்கும். தாய் தனது குழந்தைகள் அனைவரையும் ஒன்றாகவே தான் பார்ப்பாள். பேத புத்தி உள்ளவள் தாயாக மாட்டாள். பேய்க்கே பேதபுத்தி உண்டாகும். மனமே! நீ எல்லாருக்கும் தாயாகி விடு. மறவாதே.

279. ஏ மனமே! உனக்கு உதவி செய்தவனை வாழ்த்த மறக்காதே. போற்றிவா. ஒருவன் ஒரு உதவி செய்தாலும் போதும். அதை நீ மறந்து விடாதே. முன்பு உதவி செய்தவன் பிற்காலத்தில் உனக்குக் கெடுதல் செய்துவிட்டாலும் அவன் முன்பு செய்த உதவியை நீ மறந்து விடாதே. காலத்தில் உனக்குச் செய்த உதவியை மறந்து விட்டால் கீழ் மக்களின் வரிசையில் வைக்கப்பட்டவனாவாய். மேன் மக்கள் என்பவர்கள் கடுகளவு உதவி செய்தவர்களையும் மறக்க மாட்டார்கள். ஒரு உதவி செய்தவனை உயிருள்ளவரை மறக்கலாகாது. மனமே! உனக்கு உதவியவர்களை நீ மறவாதிரு. பிறருக்கும் இடை விடாமல் நீ உதவிசெய்து கொண்டும் இருந்து வா, மறந்து விடாதே.

280. ஏ மனமே! உனக்குள்ள பணிகளை பிறர் ஏவு வதற்கு முன் நீ செய்துவிடு. பிறர் ஏவிச் செய்துவரும் பணியாளனை (வேலைக்காரனை) மேன்மக்கள் கயவன்என்றுரைப் பர். கயவர்கள் இரும்புள்ளத்தைப் போன்றவர்களாவார்கள். இரும்பு உளி தானே வேலை செய்யாது. அதைப் பிடித்து கொண்டு அதன் தலையில் ஓர் இரும்புத் தடிகொண்டு ஓங்கி அடித்தால்உளியானதுதனது வேலையை செய்யத் துவங்கும். மனமே! இரும்புளியைப் போல் நீ இருதே. உனது வேலை களைப் பிறர் உனக்கு எடுத்துச் சொல்வதற்கு முன்னதாகவே

நீ செய்து முடித்து விடு. அதுவே உனக்கு நல்லதாகும். மேன் மக்களின் குணமும் அதுவேயாகும். மறவாதே!'

281. ஏ மனமே! நல்லவர்களை ஹிம்சை செய்பவன் பூண்டோடு அழிந்து போகிறான் என்பதை நீ மறவாதே. அழிவு காலம் நெருங்கியவனுக்கு ஆத்திரமுண்டாகும். மேலும் பொறுமையால் சாதுக்களைப் பலவிதமாகத் துன்புறுத்துவான், எவன் நல்லவர்களைத் துன்புறுத்துகிறானோ அவனை அவனிட முள்ள கெட்டஎண்ணமே ஹிம்சை செய்துவிடுமென்பதை நீ மறவாதிருப்பாயாக.

282. ஏ மனமே! நீ ஸதாகாலமும் கோலாகலமாக சோபையுடன் விளங்கி வர வேண்டுமென்றால் எல்லோரிடமும் அன்பைச் செலுத்துவாயாக. அன்புள்ளவனிடத்தில்தான் குறைவற்ற ஆனந்தத்தைக் காணமுடியும். அன்பைப் பெருக்கு வாயாக. ஆனந்தமனைத்தும் உன்னைத்தேடிவவரும் மறவாதே.

283. ஏ மனமே! உனக்குண்டாகும் இன்பங்களும் துன்பங்களும், நீ முன்பு செய்த பாப புண்ணியங்களின் பலனேயாகுமென்பதை இப்பொழுதே நீ நம்பி விடுவா யானால் சுகமோ, துக்கமோ, உன்னைப் பாதிக்காது. அனைத்தும் விதியின் செயலென்பதை நீ நன்கறிந்து கொண்டு விடுவாயானால் எதுவும் உன்னைத் தொந்திரவு செய்யாது. நீ இம்மையில் சுகமாக இருக்கலாம், மறவாதே!

284. ஏ மனமே! உனதுள் உனதாத்மாவாக இருந்து வருபவன் அழிவற்ற பகவான் என்பதை நீ மறந்துவிடாதே.

285. ஏ மனமே! கடவுளுக்குத் தன்னையே கொடுத்தவன் கடவுளாகவே ஆகிவிடுகிறான் என்கிற ரகசியத்தை உனக்குச் சொல்லி விட்டேன். இனி நீ செய்ய வேண்டியதைத் திருந்த செய்துவிடுவாயாகுக.

---

அதிஷ்டானம், புதுக்கோட்டை.

286. ஏ மனமே! செல்வம் அளவிற்கு மீறி விட்டால் பயங்கரமான பாவங்களைத் துணிந்து செய்யத் தூண்டும். பிறர் கஷ்டங்களை கடுகளவும் உணரமாட்டான். செல்வச் செருக்கினால் அஹங்காரமும், கர்வமும், தலைவிரித்தாடும். மனமே! நீ ஜாக்ரதையாக இரு. செல்வம் உன் கண்களைக் குருடாக்கி விடும். செல்வத்தினால் கண் தெரியாதவனுக்கு மருந்தில்லை. கடவுள் இவனுக்குக் கூடிய சீக்கிரமே வறுமையாகிய மருந்தைக் கண்ணில் ஊற்றுவார். அப்போது செல்வத்தால் கண்ணிலேற்பட்ட திமிர் மறைந்து போகும். பிறகனைத்தும் சரியாகி விடும் என்பதை நீ மறந்து விடாதே, ஜாக்ரதை.

287. ஏ மனமே! உன்னிடம் உண்மையான பக்தி இருக்குமானால் கடவுளை நீ அதி சுலபமாக வசமாக்கிக் கொண்டு விடலாமென்பதை நீ மறந்து விடாதே. பக்தியற்றவனுக்கும் கடவுளுக்கும் வெகு தூரமாகும். பக்தியிருந்தால் முக்தியை சுலபமாக கடவுளிடமிருந்து நீ பெற்றுய்யலாம், பக்தி ஒன்றையே உனது மூச்சுக் காற்றாக மாற்றிக்கொள். பக்தர்களுடன் சேர்ந்து வாழ்வாயாகுக. பக்தியானது உனது உயிராக மாறி விடட்டும் மறவாதே.

288. ஏ மனமே! பக்தியற்றவன் அரிசிக்காக உமியைக் குத்திக்கொண்டிருப்பவனைப் போலாவன். பக்தியற்றவன் ஞானமெல்லாம் உமியை குத்திக் கொண்டிருப்பவன் கதையாகவே முடியுமென்பதை நீ மறந்துவிடாதே ஜாக்ரதை.

289 ஏ மனமே! கர்வமானது உன்கண்களை மறைத்துவிடும். கர்வப்படாதே. நீ கர்வப்படும்படி உன்னிடம் என்ன இருக்கிறது? யோஜித்துப்பார். கர்வமுள்ளவன் ஸதா தவறுசெய்து கொண்டிருப்பான். கர்வமுள்ளவனுக்கு சத்ரு அவனிடமுள்ள கர்வமேதான். கர்வத்தைவிடு. நீ சிறந்த பாக்கியவானவாய். மறவாதே.

---

290. ஏ மனமே! கடவுளிடம் முழு மனதையும் செலுத்தி விட்டவனை எமன்தான் என்ன செய்து விடமுடியும்? கடவுளைச் சரணமடைந்தவனைத் தேவாதி தேவர்களும் சென்று சரணமடைந்து விடுவார்கள் என்பதை நீ மறந்துவிடாதே.

291. ஏ மனமே! மேகத்தைப்பார். தன்னிடமுள்ள நீரையெல்லாம் உனக்காக உன்னிடமிருந்து அணுவளவும் ப்ரயோஜனத்தை எதிர்பாராது உனக்குக் கொடுத்து உதவுவதைப் பார்த்தாயா? இனிமேலாவது மேகத்தைப் பார்த்துத் தெரிந்துகொள். தியாகம்செய். மிகப் பரிசுத்தமான, வெண்மையான மேகம்போல் நீயும் களங்கமற்றிருப்பாயாகுக மறவாதே.

292. ஏ மனமே! பட்டம் பதவிகளில் மோஹமுள்ளவன் ஆடம்பரத்தையும், கர்வத்தையும் விடமாட்டான். ஆடம்பரமும் கர்வமும் இருக்கும்வரை இறைவன் திருநாமத்தை ஸ்மரிக்கவும் முடியாது. பலகோடிப் பிறவி எடுப்பினும் திருநாம பஜனமில்லாதவனுக்கு சித்தசுத்தி உண்டாகாது. சித்தசுத்தியற்றவனுக்கு இறைவனின் திருவருள் உண்டாகாது. இறைவனருள் இல்லாதவன் மூச்சுள்ள நடைப்பிணமாவான். மனமே! மோஹத்தை விட்டுவிடு. கர்வம் மதியை மயக்கும். கர்வத்தினால் அஹந்தைதான் மேலிடும். அஹங்காரத்தினால் மனிதன் கொடிய பாவங்களைத் துணிந்து செய்து விடுகிறான். பாபத்தினால் மேலும் பந்தனாகி பலகோடி ஜன்மங்கள் நரகவேதனைகளை அனுபவிக்க நேருமென்பதை நீமறந்து விடாதே. ஜாக்ரதை.

293. ஏ மனமே! கர்வமுள்ளவன் ஹ்ருதயம் பரிசுத்தமாயிராது. கர்வம் கடவுளை அடியோடு மறக்கவைக்கும். மனமே! உனது பாவங்களையும், துன்பங்களையும் நீ போக்கிக்கொள்ள வேண்டுமானால் முதலில் கர்வத்தை அறவே விட்டுவிடு. பிறகு கடவுளின் திருநாமத்தை இடைவிடாமல்

பஜித்துவா: உனது தாபம் அனைத்தும் அறவே விலகிவிடும். நீ பேரின்பத்தை அனுபவிப்பாய். மறவாதே!

294. ஏ மனமே! உனது இஷ்டகாமனைகள் பூர்த்தி அடைவதற்காக நீ பிறரிடம் அன்பு செலுத்துவதானது உனது சுயநலத்தையே காட்டுவதாகும். சுயநலமுள்ளவனிடம் தர்மத்தைக் காணமுடியாது. அதர்ம புத்தியானது சுயநல முள்ளவனை விடவே விடாது. சுயநலமுள்ளவன் பாவத்தைப் பயமில்லாது செய்யத் துணிந்து விடுவான். சுயநலமானது இருக்கும்வரை உண்மையான அன்பை அனுபவிக்கமுடியாது போகும். மனமே! உண்மையான அன்பை செலுத்து. உண்மை யான அன்பை நீ எல்லோரிடமும் செலுத்த வேண்டுமானல் முதலில் நீ அனைத்தையும் தியாகம் செய்தாக வேண்டும். பற்றுள்ளவனிடம் உண்மையான அன்பு உதயமாகாது. மறவாதே.

295. ஏ மனமே! சுயநலமுள்ளவன் பிறருக்குத் துரோகம் செய்ய அஞ்ச மாட்டான். சுயநலமுள்ளவன் முடிவில் நன்றி கெட்டவனுகியும் விடுவான் என்பதை நீ மறவாதே. பிறர் நலத்தைப் பாராத சுயநலமுள்ள முட்டாள் எல்லோரையும் அவமதித்துப் பேசுவான், சுயநலமுள்ளவன் தனது கார்யத் திற்கு அனுகூலமில்லாதவர்களை நிமிஷ நேரத்திற்குள் அலக்ஷியம் செய்து தூஷிக்கவும் செய்வான். மனமே! சுயநலத்தை விட்டுவிடு. ஜாக்ரதை:

296. ஏ மனமே! தர்மவிரோதமான செய்கைகளைச் செய்பவன் முடிவில் அவன் அழிந்து போவதுடன் அவன் குலமும் அடியோடு நாசமடைந்து போகிறதென்பதை நீ மறந்து விடாதே.

297. ஏ மனமே! உனதுள்ளத்தில் பயனைக்கருதி எதையுமே நீ செய்யாதே. நீ செய்வதனைத்தும் கடவுளின்

ஆக்ஞையென உறுதியாக, நம்பிக்கையுடன் செய்துவா. நடைபெறுகின்றதனைத்தும் தெய்வச்செயல் என்று நம்பி விடுகிறவன் மனம் திருவருளால் நிரம்பப்பட்ட குடம்போல் கவலையற்றிருக்கும். இன்பத்தையும், துன்பத்தையும், கடவுள் கொடுத்த வரப்ரசாதமாகும் என்று ஏற்றுக்கொண்டு கவலையின்றி செய்வன திருந்தச்செய்து வருபவனே நல்லறிவுடையவனாவான் என்பதை மறந்து விடாதே.

298. ஏ மனமே! கடவுளைச் சத்தியமாகச் சரணமடைந்தவன் கீர்த்தியை தேவர்களும் கானம் செய்வார்களென்பதை நீ மறந்துவிடாதே.

299. ஏ மனமே! மரத்திற்குள் மறைந்திருக்கும் நெருப்பைப் போல் கடவுள் உலகிலுள்ள அனைவரிடத்திலும் மறைந்திருக்கிறார் என்பதை நீ மறந்துவிடாதே.

300. ஏ மனமே! சுயநலமுள்ளவன் ஸாதுவாகமுடியாது. ஸாதுக்கள் ஸதாகாலமும் பிறர் நலனுக்காகவே உழைப்பார்களென்பதை நீ மறந்து விடாதே. சுயநலம் அணுவளவும் இல்லாத ஸாதுவை உலகமே பூஜிக்குமென்பதை நீ மறந்து விடாதே.

301. ஏ மனமே! அணுவளவுகூட சுயநலமற்ற ஸாதுவின் தரிசனம் ஆச்சர்யமான பலத்தையும், ஆனந்தத்தையும் உண்டாக்குமென்பதை நீ மறவாதே.

302. ஏ மனமே! பிறருக்கு நீ எதைச் செய்வதால் அவர்களுக்கு நன்மை உண்டாகுமோ அதை மாத்திரமே நீ செய்து வா. சொப்பனத்திலும் பிறருக்கு தீங்கு நினைத்து விடாதே.

---

303. ஏ மனமே! இம்மையில் கடவுளை மறந்து விடுவா யானுல், உனக்கு அபகீர்த்தியும், நரகமுமே, கிட்டும் என்பதை மறந்துவிடாதே.

304. ஏ மனமே! ஆசை இருக்கும் வரை முக்தியைப் பற்றி பேசமுடியுமேயொழ்ய, முக்தர்கள் அனுபவித்து வரும் ஆனந்தத்தை அனுவளவுகூட அனுபவிக்க முடியாதென்பதை மறந்துவிடாதே. ஆசையிருப்பவன் குரு ஸேவைகளைத் திறம் படச் செய்ய முடியாது. நிராசையோடு உருதியான உள்ளம் படைத்தவனுல்தான் ஸத்குரு ஸேவைகளை முழுமனதுடன் செய்யமுடியு மென்பதை நீ மறவாதிருப்பாயாகுக.

305. ஏ மனமே! உன்னிடமுள்ள அக்ஞானம் அகல வேண்டுமானுல் த்ருட ஞானியை உனது ஹ்ருதயத்திற்குள் இருத்தி வைத்துக்கொண்டு விடுவாயானுல், நீ இம்மையில் ஞான பாஸ்கரனுகி விடுவாய். மறவாதே.

306. ஏ மனமே! கடவுளிடம் மனதைச் செலுத்திய வனும் உறுதியான உள்ளம் படைத்தவனுமாக எவன் இருக் கின்ருனே, அவனிடம் ஆச்சர்யமான சக்தியைக் காணலா மென்பதை நீ மறந்துவிடாதே. கடவுளிடம் அசைக்கமுடியாத ச்ரத்தா பக்திஉள்ளவனுடைய மனம் உலக விஷயங்களைத் திரணமாக நினைத்து ஒதுக்கிவிடும். கடவுளைச் சரணமடைந் தவனின் மனம் ஸதாகாலமும் த்ருப்தியுள்ளதாகவே இருக்கும். தர்மத்தைவிட்டு கடுகளவும் நழுவாதுமிருந்தும் வருமென்பதை நீ மறவாது இருப்பாயாகுக.

307. ஏ மனமே! உனக்கு சாந்திவேண்டுமானுல் நீ சாஸ்த்திரத்தில் சொன்ன தர்மங்களையே ச்ரத்தா பக்தியுடன் இடைவிடாது முழு மனதுடன் நம்பிக்கையோடு அனுஷ்டித்து வருவையானுல் சாந்த ஸ்வபாவம் மேலிட்டு இடைவிடாமல் நீ அமைதியோடு இருந்து வரலாமென்பதை மறவாதே.

308. ஏ மனமே! எவனிடம் நல்லொழுக்க மிருக்கின்றதோ அவனிடம் தேவதைகள் வாசம் செய்வார்கள். அவனால் இவ்வுலகிற்கே நன்மைகள் ஏற்பட்டு வருமென்பதையும் மறவாதிரு. அஹங்கார மற்றவனானவனும், நல்லொழுக்கத்தையே தனது ஆபரணமாகக் கொண்டவனுமான உத்தமனை உலகில் உள்ள பெரியோர்கள் அனைவரும் தங்கள் தலையால் வணங்குகின்றனர் என்பதையும் மறவாது இருப்பாயாகுக.

309. ஏ மனமே! மிகச்சிறந்த பக்தன், மிகச்சிறந்த பதிவ்ருதையை போன்றவனாவான். பக்தனின் ஹ்ருதயத்தில் பகவான் ஒருவருக்குத்தானிடமுண்டு. பதிவ்ருதையின் உள்ளத்தில் தனது பதிக்குத்தானிடமுண்டு. பதியைத் தவிர கடவுளுக்கும் இடமிருது என்று மேன்மக்கள் கூறுவார்கள். மனமே! நீ நல்ல சிறந்த பதிவ்ருதையைப்போல் இருந்து விடுவாயாகுக. மறவாதே.

310. ஏ மனமே! உனக்குத் துக்கமுண்டாகியதற்குக் காரணம் தெரியுமா? சொல்கிறேன் கேள், அதுதான் உன்னிடமுள்ள அக்ஞானத்தின் வேலையாகும். அக்ஞானமிருக்கும்வரை துக்கம் உண்டாகிக்கொண்டே இருக்கும். துக்கமானது உனது உள்ளத்தையும், சரீரம் முழுவதையுமே வாட்டி, வதைத்து, வறட்சியுமடையச் செய்துவிடு மென்பதை நீ மறந்து விடாதே. மனமே! முதலில் உனக்கு ஞானமுண்டாக வேண்டும். ஞானமுண்டாவதற்கு அடையாளம் எதுவரினும், எதுநேரினும், அது நீ முன் செய்த பாப, புண்ணியங்களால் தான் வருகின்றதென்றும், பிறரால் எதுவுமுன்னைச் செய்ய முடியாதென்கிற உறுதியுமே, ஞானோதயம் உண்டாவதற்குண்டான அறிகுறியாகுமென்பதை நம்பி விடுவாயாகுக.

---

அறிவில்லாதவன் தனக்குண்டான துக்கம் பிறரால்தான் வந்ததென்று நினைத்து வருந்துவதே, அக்ஞானமாகு மென்பதை நீ மறவாதிருப்பாயாகுக.

311. ஏ மனமே! உலகிலேயே மிகக்கீழ்தரமானவன் எவன் தெரியுமா உனக்கு? சொல்கிறேன் கேள். அவன்தான் இந்திரியங்களுக்கு வசப்பட்டு ஸதாகாலமும் மாயையில் மயங்கிக் கிடப்பவனேயாகும். மேன்மக்கள் இவனை பாக்கிய மற்றவனென்றும், மேலும் கீழ்த்தரமான பிறவியை அடையப் போகிருனே என்றும், இவனைப் பார்த்து வருந்து வார்கள். மனமே! உலகில் மாயையின் வசப்பட்டவனே கீழ்த்தரமானவன். தீண்டத்தகாதவனும் கூட ஆகி விடுகிருன். மாயையின் வசப்பட்டவன் எந்தக் கொடிய பாபத்தையும் ஆசையினுல் துணிந்து செய்து விடுவான். மறவாதே. மனமே! ஜாக்ரதை.

312. ஏ மனமே! உலகிலேயே கடவுளின் படைப்பில் மகச்சிறந்தவன் எவன் தெரியுமா உனக்கு? அதையும் சொல்லி விடுகிறேன் கேள். அவன்தான் கடுகளவும்கூட பலனை விரும்பாமல் கடமையைச் செய்பவனுகு மென்பதை நீ மறந்து விடாதே. பலனை விரும்பிச் செய்யும் கார்யங்களில் (கர்மாக்களில்) துக்கமும் கூடவே வரும். துக்கம் மிகுந்த பலன்களில் ஆசை வைத்து கடவுளை வழிபடும் பக்தன் அதமனுகும். மனமே! நீ அதமனுகி விடாதே. ஜாக்ரதை.

313. ஏ மனமே! உனக்கு முதலில் வேண்டியது பொறுமைதான். பொறுமை இல்லையென்ருல் மனிதப் பிறவியே வீணுகிவிடுமென்பதை நீ மறந்துவிடாதே. பொறுமை உள்ளவன் பூமியைப் போலிருப்பான். எதற்கும் அஞ்ச மாட்டான். மலையே தலையில் விழுவதாகயிருந்தாலும், பொறுமையால் ஸஹித்துக்கொண்டு விடுவான். பொறுமை

யுள்ளவனுக்கு சகிக்கமுடியாதது எதுவுமே இல்லை: உனக்கு முதலில் பொறுமை ஒன்றிருந்தால் போதும். நீ இவ்வுலகை வெற்றிகொண்டு விடலாமென்பதை மறவாதிருப்பாயாகுக

314. ஏ மனமே! உன்னிடமுள்ள ஸகல பாபங்களி லிருந்தும் உடனடியாக நீ விடுதலையடைந்துய்ய வேண்டு மென்றால், முதலில் கடவுளைச் சரணமடைந்து விடுவாயாகுக. மறந்துவிடாதே. சரணாகதியின் மஹிமையைக் கடவுளாலும் கூட கூறமுடியாது. சரணமடைந்தவன் எக்கடவுளைச் சரண மடைந்து விட்டானோ, அக்கடவுள் மயமாகவே ஆகிவிடுவ தால், கடவுளைச் சரணம் அடைந்தவன் கடவுளாகவே ஆகி விடுகிறபடியால் சரணாகதியின் பெருமையும், அறிவையும், பற்றிக் கடவுளும்கூட கூற முடியாதென்று உனக்குச் சொன்னேன். மனமே! கடவுளைச் சரணம் அடைந்துவிடு. கவலையற்றுப்போகும். மறவாதே.

315. ஏ மனமே! நீ சிறந்த ஞானியாகிவிட வேண்டு மானால் முதலில் விஷய சுகங்களில் உனக்குண்டான ஆசைகளை அறவே விட்டுவிட்டு, உடனடியாகக் கடவுளைச் சரணமடைந்து விடுவையாகுக. மனமே! கடவுளைச் சரணமாக அடைந்த வனுக்கு கடவுள் தன்னையே கொடுத்து விடுவார் என்பதை நீ மறந்துவிடாதே. முதலில் சரணமடைந்துவிடு.

316. ஏ மனமே! கடவுளை நீ சத்தியமாக நம்பி அவனி டம் உனது உள்ளத்தைச்செலுத்தி பக்தி செய்து வா. நித்ய தரித்தராகிய நீ, கோடி குபேரனிடமுள்ள ஸம்பத்துக்கள் தானே உனக்கு உண்டாகிவிடும்.

317. ஏ மனமே! கடவுளைச் சரணமடைந்துவிடு கடவுள் உனக்குக் கிடைத்து விடுவதோடு தன்னையே கடவுள் உனக்குக் கொடுத்தும்விடுவார். மனமே! நம்பு. மறவாதே கடவுளைச்

சரணமடைந்தவனுக்கு அளவற்ற செல்வமும், சுகபோக வாழ்வும், ஸ்வர்க்கமும், கூட திரணமாகத் தோன்றும் செல்வ மனைத்திற்கும், இருப்பிடமான செல்வமும் கடவுளாவார். கடவுளைச் சரணமடைந்தவன் கடவுளாகிவிடுவான் என்றால், அதைவிடப்பெரிது உலகில் எங்குள்ளது? சொல். மனமே! மறந்து விடாதே கடவுளைச் சரணமடைந்துவிடு.

318. ஏ மனமே! உண்ட உணவிற்குத்தக்கவாறு நற்பணிகளைச் செய்து வா. இல்லையேல் நீ உண்ட உணவு உன்னைச் சோம்பேறியாக்கி, உன்னை அடியோடு கெடுத்து விடும். ஜாக்ரதை.

319. ஏ மனமே! திரைமறைவில் தெரிந்துசெய்யும் பாவத்திற்குக் கொடிய தண்டனை நரகம்சித்திக்குமென்பதை சொப்பனத்திலும் நீ மறந்துவிடாதே. ஜாக்ரதை.

320. ஏ மனமே! உணவிற்காகவும், மற்றவைகளுக் காகவும், நிஷித்த சேவைகளை நீ செய்வதை விட்டு விடுவா யாகுக.

321. ஏ மனமே! கடவுளைத் தவிர உலகில் வேறொரு பதார்த்தம் இல்லவே இல்லை. உன் மயமாகவும், நீ காணும் அனைத்துமாகவும் கடவுள் இருப்பதால், உனக்கு நலம் செய்ப வனும், மற்றவைகளைச் செய்பவனும், கடவுளேதான் என்பதை நீ நம்பி எல்லோரிடமும் கடவுளைக்கண்டு, எல்லோரையும் மனதார வாழ்த்திக்கொண்டு, உனக்கிட்டபணிகளை கடவுளின் கட்டளை என உண்மையாக நம்பி, அவைகளைத்திருந்தச் செய்துகொண்டு, நடப்பதனைத்தும் இறைவன் ஆக்ஞை என்று சத்தியமாக நம்பிக்கொண்டு, இறைவன் திருநாம ஜபத்துடன் உன் வாழ்க்கையை நடத்திவா. மறந்துவிடாதே.

322. ஏ மனமே! ஒருவருமறியாமல் நீ செய்த பாவத்தை ஒருவருமறியாதபடி உனக்குள்ளிருக்கும் அந்தராத்மா பார்த்துக் கொண்டிருப்பதால் நீ செய்ததவறை ஒருவரும் அறியவில்லை யென்று நீ நினைத்து ஏமார்ந்து விடாதே உனக்குள் மறைந்திருக்கும், பார்த்துவரும் கடவுளாகிய உனது அந்தராத்மா நீ செய்தக் குற்றத்திற்காக உன்னை உயிருடன் வைத்திருந்து நீ செய்த தவறை அவ்வப் பொழுது உனக்கு ஞாபகப் படுத்திவைத்து உன்னை உயிருடன் சித்ரவதை செய்து, உன்னைத் தண்டித்து வருமென்பதை நீ சொப்பனத்திலும் மறந்து விடாதே. ஜாக்ரதை.

323. ஏ மனமே! உன்னிடம் சிரத்தையுடன் கூடிய நிச்சயப் புத்தி இருக்குமானால், இறைவன் திருவருள் உன்னை, உன்னினைவை உன்னதப் படுத்தி, அவைகளைத் திறம்பட நடத்தியும் காட்டுமென்பதை நீ மறந்து விடாதே.

324. ஏ மனமே! உனக்கு முதலில் வேண்டியது ச்ரத்தை. ச்ரத்தை இல்லாத புத்திசாலித்தனமும், ஸாமர்த்தியமும் பலன் கொடாது போகுமென்பதை நீ மறந்து விடாதே. ச்ரத்தை குறையுமானால் சம்சயமுண்டாகி நீ நினைத்த கார்யம் வெற்றி அடையாது போய்விடும். நீ மேன்மைகளை அடைந்துய்ய உனக்கு முதலில் வேண்டியது ச்ரத்தை என்பதை மேலும் சொல்லிவிட்டோம். ஜாக்ரதை.

325. ஏ மனமே! மனத்தளர்ச்சி உடையவன் எதையும் நினைத்தப்படி சாதிக்கமுடியாது. ச்ரத்தை இருப்பின் எப்படிப்பட்ட மஹத்தானப் பெரிய கார்யமாக இருப்பினும் அது இறைவனருளால் சுலபமாகச் செய்து முடித்துவிட முடியும். மறவாதே!

326. ஏ மனமே! உன்னிடமுள்ள ராகத்துவேஷம் முதலிய அஹங்காரம் அழிந்து போக வேண்டுமென்றால் நான்

யார்? எவருக்கு ராகத்துவேஷமுண்டாகிறது? எனக்கும், அவைகளுக்கும், என்ன ஸம்பந்தம்? என்று விஜாரணை செய்து வா. அஹங்காரம் அழிந்துபோய் அங்கு உன்னையே நீ அங்கு கடவுளாகக் (ப்ரும்மமாகக்) காணலாம் மறவாதே.

327. ஏ மனமே! நீ துக்கமில்லாது, சதாகாலமும் இன்புற்றிருந்து வர வேண்டுமென்றால் உன்னையே நீ நான் யார்? என்று விஜாரணைசெய்துவா. துக்கமற்றிருக்க மேற்கண்ட ஒரே வழியைத் தவிர இவ்வுலகில் மேலான, சுலபமான, நல்வழி வேறு இல்லவே இல்லை. மறந்து விடாதே.

328. ஏ மனமே! அமைதியற்றவன் தனக்குள் தன்னைக் கண்டு கொள்வது மிகக் கடினமாகும். முதலில் உனக்கு அமைதிவேண்டும். அமைதி வேண்டுமானால் முதலில் சங்கல்ப விகல்பங்களை அறவே தியாகம் செய்து விடவேண்டும் சங்கல்ப விகல்பமற்றவனின் மனம், கடலினடியில் இருக்கும் நீரைப் போல் அமைதியுடனிருக்கும். மனவமைதி உண்டானால் உன்னை உனக்குள் காண்பது மிகச் சுலபமாகும் என்பதை உனக்குச் சொல்லி விட்டேன். மறவாதே.

329. ஏ மனமே! நீகாண்பதனைத்தும் (இவ்வுலகமனைத்தும்) கனவில் கண்ட சொப்பனம் போல் கண்டுவா. கனவைஉண்மை யென்று யாரும் நம்பமாட்டார்கள். விழித்துக் கொண்ட உடன் கனவுகள் அறவே மறைந்து போகின்ற அனுபவம் உனக்கு முண்டு மனமே! ஸொப்பனமான உலகை நிஜமென்று நம்புகிறவனுக்கு பலகோடி பிறவியிருப்பினும் சத்யம் புரியாது. சொப்பனத்தில் கண்டகாட்சி போல் இவ்வுலகைக் கண்டு, அனுபவித்து வருபவனுக்கு துக்கம் கடுகளவும் அணுகாது. அநித்யமான இவ்வுலகை நித்யமென்று நம்புகிறவன் சொப்பனத்தை உண்மையெனநம்பும் முட்டாளாவான். மனமே! நீ முட்டாளாகி விடாதே. ஜாக்ரதை.

---

330. ஏ மனமே! புல்லின் நுனியில் நிற்கின்ற பனி நீர்த் துளியைப் போன்றது உன்னுடையது என்று நீ ஸதாகாலமும் சொல்லிக் கொண்டிருக்கும் இந்த உடம்பு என்பதை நீ மறவா திருந்து கொண்டு மேலான நல்லறச் செயல்களை அதாவது உன்னை உனக்குள் நான்யார்? என்று கேட்டு தன்னைத் தான் அறிந்து கொள்வதான நல்லறங்களை உடனுக்குடன் செய்து நல்ல உடம்பினைப் பெற்றபயனை இக்கணமே பெற்றுய்வாயாகுக.

331. ஏ மனமே! நீ சென்றநாளை நினைத்துவருந்தாதே. நாளை வரப் போகிறதையும் நம்பி ஏமாறுதே. உனது பிறப்பின் பயனை இப்பொழுதே நீ அடைந்துய்ய வேண்டு மாதலால் இக்கணமே உனது உள்ளத்தில் உள்ள ஆசைகளைத் துறந்துவிடு. சங்கல்பங்களை இக்கணமே அறவே தியாகம் செய்துவிடு. சிந்தனை அற்றுச் சும்மாயிருந்து விடுவதே உனது முதல் வேலையாகும். சென்றதையும், நாளை வரப்போவதையும் நினைக்கவே நினையாதே. உடன் நீ செய்ய வேண்டியது சும்மா இருப்பதாகும். மறந்துவிடாதே. ஜாக்ரதை.

332. ஏ மனமே! நீ பிறந்து விட்டாய். நாளையோ மறுதினமோ, இறப்பது உறுதியாகும், என்பதெல்லாம் உனக்குத் தெரியும் தெரிந்திருந்தும் காயம் அழியுமுன் என்ன செய்ய வேண்டுமென்பதை நீமறந்து விட்டாய் போலும் மனமே! நாளை இறப்பதற்கு முன் உன்னை நீ உனக்குள் அறிந்து கொள்ள வேண்டியதற்காக அனைத்தையும் இக்கணமே தியாகம் செய்து விடுவாயாகுக. தியாகம் ஒன்றிருப்பதால்தான் உன்னை நீ அறிந்து கொள்ள முடியும். உன்னை நீ அறிந்து கொண்டால்தான் மறுபடியும் நீ பிறவாமலிருக்க முடியும். மறந்துவிடாதே.

333. ஏ மனமே! தன்னைத்தான் அறிந்தவனையே உலகிலுள்ள மேன்மக்கள், மஹான், மஹாத்மா என்று கூறிப்

போற்றுவர். தனக்குள் தன்னைத்தான் அறியாதவர்களை மேன் மக்கள் என்றோ, மஹாத்மா என்றோ, மேன்மக்கள் கூற மாட்டார்கள். உண்மையான மேன்மக்களின் வரிசையில் நீ வரவேண்டு மென்றால், முதலில்உன்னை நீயே நான்யார்? என்று நன்கு விஜாரித்து முதலில் தெரிந்து கொண்டு விடு. பிறகு உனக்கும் மஹாத்மா என்கிற பட்டம்கிட்டும். மறந்துவிடாதே.

334. ஏ மனமே! அக்ஞானி களர் நிலத்தைப் போன்றவன். தன்னைத் தனக்குள் நன்கறிந்து கொண்டவன் (நஞ்சை) விளை நிலம் போன்றவனாவன். களர் நிலத்தை எவரும் விரும்பார். ஒருவருக்கும் களர் நிலம் பயன் தராது. களர் நிலம் பூமிக்குப் பாரமே ஆகும். விளை நிலமோ அனை வருக்கும் பயன்தருகிறதாகும். தன்னை அறிந்து கொண்டஞானி ஒருவனால் உலகமே நலமடைந்துய்யும். உலகமக்கள் அனைவருமே விளையும் (நஞ்சை) நிலத்தைப் விரும்பிப் போற்றுவார்கள். மனமே! நீ நன்கு விளையும் நிலத்தைப் போல் இருந்து விடுவாயாகுக.

335. ஏ மனமே! உனது நல்லறிவைக் கெடுக்கும் துஷ்டத்தனமுள்ள நண்பர்களையோ, அல்லது புஸ்தகங் களையோ நீ வெறுத்து ஒதுக்கிவிடுவாயாகுக. பயனற்றவர் களோடு பழகுவதும், பயனற்ற புஸ்தகத்தைப் படிப்பதும் உன்னை நீயே பாழ்படுத்திக் கொள்வதாகும். உத்தமர்கள் உறவையும், உத்தமர்கள் உரைத்த அருளுரைகளையும் என்றும் கைவிடாதிருப்பையாகுக. நல்லறிவும், நல்லொழுக் கமும், நல்லமனமும் உள்ள உத்தமர்கள் உறவு ஒன்றையே நாடுவையாகுக. மறவாதே.

336. ஏ மனமே! ஞானிகள் நிறைகுடத்தைப் போன்ற வர்கள். அக்ஞானிகள் குறைகுடத்தைப் போன்றவர்கள் நிறைகுடம் தளும்பாது. குறைகுடம் தளும்பிக் கூத்தாடும்.

அரைகுறை ஞானமுள்ளவன் பிதற்றிக் கூத்தாடுவான். நிறையான ஞானம் உள்ளவன் அடக்கமே உருவமாக அமைதியுடன் இருப்பான் என்பதை மறவாதே.

337. ஏ மனமே! இம்மையில் தன்னைத்தான் இன்னாரென தன்னை அறிந்து கொள்ளாமல் நீ உனது உடலை அழகுப் படுத்திக்கொள்ளும் வேஷமானது உயிருள்ள பிணத்திற்குச் செய்து கொள்ளும் அஹங்காரமாகவே உன்னைக்காணும் மேன்மக்கள் கருதுவார்கள் என்பதை நீ மறந்துவிடாதே.

338. ஏ மனமே! தன்னைத்தனக்குள் அறிந்து கொண்டவனுக்கு உடலை அழகு படுத்திக்கொள்ள வேறு சாதனம் வேண்டியதில்லை. அகத்துள் ப்ரும்மத்தைக் கண்டவன் மூகத்தில் கடவுளேயேக் காணலாம். அகத்தில் உள்ளதையே மூகம் காட்டிவிடும். அகத்துள் அக்ஞானமிருக்குமானல் மூகத்தில் மூதேவியே முன்னிற்பாள் என்பதை நீ மறந்துவிடாதே.

339. ஏ மனமே! எதையும் நம்பாதே. இன்று நகரமாக இருப்பது நாளை சுடுகாடாகவும், மாறலாம். சுடுகாடு நகரமாகலாம். உலகிலுள்ள ஒவ்வொன்றும் மாறிக் கொண்டே இருக்குமென்பதை நீ மறந்துவிடாதே. என்றுமே மாருதது அழியாதது பிரம்மம் (கடவுள்) அது உனக்குள்ளேயே உள்ளது. அதைத் தெரிந்துகொண்டு, அதன் மயமாகவே நீ இருந்து விடுவையாருக. மறவாதே

340. ஏ மனமே! எதன்பலத்திலும் நீ செருக்குருாதிருந்துவா. உன் கண்முன் உள்ள எதுவும் (உலகமனைத்தும்) நிலையுடையதென்று நம்பி ஏமார்ந்துவிடாதே. இன்று மணல் மேடாகியுள்ள இடம் நாளை வரும் வெள்ளத்தில் பள்ளமாகிவிடும். மறுநாள் மேடாகியும் விடலாம். அஹந்தயை விட்டுவிடு. வண்டிச் சக்கரம்போல் அனைத்தும் மாறி,

மாறி, வந்தும் போய்க்கொண்டும் இருக்கும். எல்லோரிடமும் நிதானமாக, அன்பாக, மரியாதையாக, உண்மையாகப் பேசியும், நல்லனவைகளை எல்லோருக்கும் செய்தும்வா. தேனீக்கள் போல் நீயும் ஏமார்ந்துவிடாதே. நீயும் உண்டு, எல்லோருக்கும் கொடுத்தும், நல்லறத்தைச் செய்துகொண்டு இம்மையில் வாழ்வாயாகுக. மறந்துவிடாதே.

341. ஏ மனமே! சிறுபிள்ளைத்தனமாக தவறுசெய்துவிடாதே. இம்மையில் ஒரு குற்றமும் செய்யாமல் இருப்பதையே நீ செய்து வரும் தவமெனக்கொள்ளவும். ஒருதரம் கெட்டபெயர் எடுத்தால், அக்குற்றத்தை மாற்றி நல்லபெயர் எடுப்பது மிக மிகக் கஷ்டம். உன்னை எவரும் தவருனவன், பாவிஎன்று கூருதவாறு இம்மையில் நீ நடந்து கொண்டு விடுவாயாகுக. மறவாதே.

342. ஏ மனமே! சிறுபிள்ளைகள் உனக்கு நல்லதைச் சொன்னாலும், அதை நீ ஏற்றுக்கொண்டு நடப்பதே உனது நல்லொழுக்கமாகும். வயதில் மிகப் பெரியவன் என்று சொல்லப் படுகிறவர்களானாலும், தீய ஒழுக்கமுள்ளவர்களாய் இருப்பின் அவர்களைக்கண்டு நீ தூரவிலகி ஓடிவிடுவாயாகுக. மனமே! உனக்குப் பகுத்தறிவு இருப்பதால் உனக்கு எது நல்லது, கெட்டது, என்பதும் தெரியும் அதனால் நீ பிறர்கண்டு மெச்சும்படியான நல்லொழுக்கத்தையே கடைபிடித்து இம்மையில் நலமனைத்தையும் பெற்றுய்வாயாக.

343. ஏ மனமே! முதலில் உனது உள்ளத்தில் நீ மறைத்து வைத்துக்கொண்டிருக்கும் குற்றத்தைக் கண்டுபிடித்து, அதை நீக்க உறுதி எடுத்துக்கொள்வாயாகுக. குற்றமுள்ள நெஞ்சு கஷ்டப்பட்டுக் கொண்டே இருக்கும். மறைவில் செய்த குற்றமோ உன்னை உயிருடன் வைத்து, சித்ரவதைச் செய்துகொண்டுமிருக்கும். ஏ மனமே! நீ குற்ற

மற்றவன் என்று முதலில் உனது அந்தராத்மா உன்னைக் கூறும்படி நீ நடந்து கொள்வாயாக.

344. ஏ மனமே! பழிபாவத்திற்கு அஞ்சி நடந்துவா. பிறர் உன்னைப் பார்த்து இவன் பாவிப்பயல், பழிபாவத்திற்கு அஞ்சமாட்டான் என்று சொல்லும்படி இம்மையில் நீ நடந்து கொண்டு விடாதே. மாபெரும் மலைகளையும் சிற்பி உளியால் உடைத்து, இருக்குமிடம் தெரியாதவாறு செய்து விடலாம். பழிச்சொல்லை மாற்றவே முடியாது. பாவி என்ற பெயரை உண்டாக்கிக்கொண்டு விடாதே. இம்மையில் கடுகளவும் பழிச் சொல் உண்டாகாத செயல்களை நீ திருந்தச் செய்து கொண்டு, பெருமைபெறும்படி இருப்பாயாகுக.

345. ஏ மனமே! நல்லொழுக்கம் என்பதெல்லாம் உனக்குள் உண்டாக வேண்டுமானால், முதலில் உன்னை நீ உனக்குள் நான் யார்? நான்யார்? எங்கிருந்து வந்தேன்? எங்குச்செல்லப் போகிறேன்? என்று உன்னை நீயே உனக்குள் கேட்டுத் தெரிந்து கொண்டு விடுவாயானால், நீ இவ்வுலகில் மிகச்சிறந்த நல்லொழுக்க முடையவனாகித் திகழ்வாய். மறவாதே.

346. ஏ மனமே! சூரியன் உதயமானால், இருட்டு இருந்த இடம் தெரியாமல் போய் விடுவதைப்போல் நீ ஸங்கல்ப்ப தியாகம் செய்து உடன் ஆசையாகிய மாயை இருளானது இருந்தயிடம் போய்விடும். ஸங்கல்ப்பம் ஒன்று வந்தவுடன் அது கடலலை போல் ஓயாது மேலும் மேலும் வந்து கொண்டே இருப்பதால், முதலில் நீ ஸங்கல்பம் செய்வதில்லை என்று உறுதிபூண்டு கொள்வதுடன், ஸங்கல்ப்பத்தை அறவே தியாகமும் செய்து விடுவாயானால், உனக்குள் உருவாகிக்கொண்டே இருந்துவரும் ஆசையானது அடியோடு மறைந்துபோய்விடும். பிறகு உனது அகமானது கடலின்

அடித்தளத்தைப்போல் அசைவற்று, மலைபோல், உறுதியாகி விடும். அசைவற்ற உனது மனம், இடைவிடாது ஸதாகால மும், சும்மாயிருந்து கொண்டு பிரும்மானந்தத்தில் தழைத் திருக்கும். மனமே! உனக்குக் குறையற்ற செல்வமான ஆனந்த முண்டாக வேண்டுமானால், முதலில் சங்கல்பத்தைத் தியாகம் செய்வாயாகுக. மறவாதே.

347. ஏ மனமே! நீ எவரையும் பகைத்துக்கொண்டு விடாதே. இவன் சிறு பிள்ளைதானே? இவன் நம்மை என்ன செய்து விடமுடியும்? என்று நீ அகந்தையுடன் சிறு பிள்ளை களுடன் பகை வைத்துக் கொள்வாயானால், கடுகளவுள்ள ஒரு சிறு உப்புக்கல் மிகப்பெரிய அண்டாப் பாலையும் கெடுத்து விடுவதைப்போல்தான், சிறுபிள்ளையிடம் நீ கொண்ட பகையும் முடியுமென்பதை நீ மறந்து விடாதே. ஜாக்ரதை.

348. ஏ மனமே! பல உத்தமர்களாகிய நண்பர்களின் துணைதான் உனக்கு மேலான நலத்தைக் கொடுக்கும். ஆதலால் நீ எல்லோரையும் நண்பனாக்கிக்கொண்டு விடுவை யாகுக. தனித்துள்ள ஒருமரம் கெடுவதைப்போல் தனித்துள்ள ஒருவனானவன் அடியோடு கெட்டு நசிந்து போய்விடுவான். ஆதலால் நீ எப்போதும் உத்தமர்களான நண்பர்களுடைய சங்கத்தில் ஸதாகாலமும் இருந்து வருவாயானால், உனக்குக் கேடு வாராதென்பதை நீ மறந்து விடாதே.

349. ஏ மனமே! ஒருவரிடம் ஒருதரம் பகை உண்டாகு மானால் அவர்களை நீ உவர் மண்ணைப்போல் நினைத்துக் கொண்டு, அவர்களுடன் நீ பழகி வா உவர் மண்ணைத் தண்ணீர் விட்டு எவ்வளவு மிதித்துக் குழைத்தாலும், ஒட்டிக் கொள்ளாது உதிர்ந்து போவதைப்போல், உனது பகைவனை நீ எவ்வளவு தரம் போற்றி அன்பு செய்தாலும், அவர்கள் சமயம் பார்த்திருந்து உனக்குத் தீங்கிழைப்பாராகையால், உனது

பழம் பகைவர்களை முழுமனதுடன் நம்பிவிடாதே. ஜாக்ரதை, ஜாக்ரதை, ஜாக்ரதை.

350. ஏ மனமே! நல்ல பாம்பைப் பிடித்து வைத்துக்கொண்டு பிழைத்து வருபவன் முதலில் பாம்பின் விஷப்பல்லைப் பிடுங்கிவிடுவதை நீ கவனித்துக் கொள் விஷப்பல்லை பிடுங்கிய பாம்பு சீறுமே தவிர கடிக்காது. அதைப்போல் உனது பிழைப்பிற்கு உதவியாக வேலை செய்பவர்களிடம் நீ பாம்பாட்டியைப் போல் நடந்து கொண்டுவிடுவாயானால் எவராலும் உனக்குத் தீங்குண்டாகாது. மறவாதே.

351. ஏ மனமே! எவரிடமும் கடுகளவும் பகையும் உனக்குக் கூடாது. பகை வருமானால் அதை உடன் மறந்துவிட்டு எல்லோரையும் உள்ளன்புடன் உறுதியாக நேசித்துவிடு. எல்லோரும் உனக்கு நண்பனாகி விட்டால், பகைவன் உன்னை என்ன செய்து விடமுடியும்? பகைவருமானால் அதை வேரோடு அப்பொழுதே பிடுங்கி எறிந்துவிடுவையாகுக. மறந்துவிடாதே.

352. ஏ மனமே! சகலவிதமான பாவத்தையும் நொடிப்பொழுதில் போக்கும் புனித கங்கையிலேயே இருந்துவரும் தவளைகள், தங்கள் உடலின் மேலுள்ள வழவழப்பான அழுக்கைப் போக்கிக் கொள்ள முடியாததைப்போல், நான் மேன்மக்களின் பரம்பரையில் வந்தவன், நன்கு பல சாஸ்திரங்களைப்படித்துள்ளவன் நான், எவருக்கும் உபதேசம்செய்யும் திறமும் உள்ளவன் நான், என்று கூறிக்கொள்ளும் நீயும், தவளையைப்போன்றவனேதான் என்பதை நீ மறந்துவிடாதே. மனமே! உன்னிடம் என்ன இருப்பின் பயனென்ன? உனது அகத்துள் உள்ள அக்ஞானமாகிய இருள் அகலாதவரை நீ எதைச் செய்தும், பேசியும், பயனில்லை. நீயும் பகுத்தறிவுள்ள ஒரு தவளைதான் மறந்துவிடாதே.

353. ஏ மனமே! இழிவான குணம் உன்னிடமிருப்பின் அதை உடன் நீ போக்கிக்கொள்ளாதவரை உன்னை ஒருவரும் மேன்மக்கள் என்று கூறுர். நீ மேன்மக்கள் பரம்பரையில் பிறந்ததினுல் மட்டும் நீயும் மேன்மக்களாகிவிடமாட்டாய். மேன்மக்களின் முக்கியமான லக்ஷணம் ஞானமாகும். உனக்கு ஞானமுண்டாகாதவரைஎவருமுன்னை மேன்மக்கலென கூறமாட்டார்கள். மனமே! உனது பாரம்பர்யத்தின் பெயரை நீ போக்கிக் கொண்டு விடாதே. குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக்காம்பு போல் நீ பெயரை உண்டாக்கிக்கொண்டு விடாதே. நற்குலத்தில் பிறந்தவனே! உனக்கு மேலான நல்லபெயர் உண்டாக வேண்டுமானுல், உனக்கு முதலில் வேண்டியது ஞானமாகும். உனக்கு ஞான முண்டாக வேண்டுமானுல் உன்னிடமுள்ள இழிவான குணங்களை(அக்ஞானத்தை) உடன் போக்கிக் கொண்டு விடு. மறந்து விடாதே.

354. ஏ மனமே! உனது படிப்பெல்லாம் உண்மைப் பொருளை உனக்குள் உள்ளது உள்ளபடி தெரிந்து கொள்வதற்காக நன்கு ஆராய்ந்து, விசாரம் செய்து, மாசில்லாமல் நன்கு அறிந்து கொள்வதற்குண்டான படிப்பைப் படித்து வருவாயாகுக. மாயை என்ருல் எது? ப்ரும்மம் எப்படிப்பட்டது? என்கிற நன்மை தீமைகளை மனவுறுதியுடன் தீர விஜாரணை செய்து பார்த்தால்தான், உனக்குள் ஸதாகாலமும் இடைவிடாமல் உள்ளிருந்து வரும் ப்ரும்மத்தை நீ நன்கு அதுதான், நான், நானே அது, என்று உறுதியான உண்மைப் பொருளை நீ அறிந்து கொள்ளமுடியும். மறவாதே.

355. ஏ மனமே! நல்லனவற்றையே இடைவிடாமல் பேசு. நல்லனவெல்லாம் கடவுளின் மயமேயாகும். நல்ல பரிசுத்தமான பேச்சினுல் இவ்வுலகமே நன்கு தூய்மை அடையும். நல்லபேச்சினுல்எல்லோரையும் நல்லவனுக்கி விடலாம்.முதலில் நீ நல்லவனுக நல்லதை நினை. நல்லதைப் பேசு. நல்லதைச் செய்துவா. அனைத்தும் நல்லதாகவே முடியும். மறந்து விடாதே.

பொன் மொழிகள்

ஸ்ரீ சத்குரு பரமாத்மனே நம:

# ஆத்ம போதனை

1. ஏ மனமே! உனக்கு இன்பம் வேண்டும் மென்பதற்காக நீ பிறருக்கு ஏன் துக்கத்தை தருகிறாய்? பிறரைத் துன்புறுத்துவதால் உனக்கு இன்பம் உண்டாகி விடு மென்கிற நினைப்பை இக்கணமே மறந்து விடுவாயாக. மனமே! இன்பங்கள் அனைத்தும் உனக்குள்ளேதான் இருந்துவருகிறது. வெளியில் இன்பம் இருப்பதாக நினைப்பவன் மிகவும் கெட்டிக்கார முட்டாளாவான். யாருக்கு இன்பம் உண்டாகியது? நான்யசர்? என்னையே எனக்குத் தெரியாமல் இருக்கும் போது, எனக்கு இன்பம் வெளியிலிருந்து வருகிறதென்று நினைத்து நீ பாடு படுகிறாயே, சந்தோஷப்படுகிறாயே; மனமே! உள்ளது ஒன்றுதான் என்று வேதாந்தம் சத்தியத்தைச் சொல்லியிருப்பதை நினைத்துப்பார் உள்ளது ஒன்றானல் அதனிடமிருந்து நீ எப்படி ஆனந்தத்தை அனுபவித்தேன் என்கிறாய்? நீ சொல்வதைப் பார்த்தால், நீயும் உனக்கு அன்னியமான இன்னொன்றும் இருந்தால்தானே நான் அதனிடமிருந்து சுகத்தை அனுபவித்தேன் என்பதற்கு. மனமே! ஏமார்ந்துவிடாதே. நீ முன் செய்த பாவம் உன்னை இக்கணம் ஏமாற்றுகிறது. மனத்தை தூய்மையாக்கிக் கொண்டு உனக்குள் பார் உள்ளது ஒன்றேதான் என்பது உனக்குத் தெரியவரும். பிறகு வேறொன்றிடமிருந்து எனக்கு ஆனந்தம், சுகம் கிட்டியதென்கிற சொல்லெல்லாம் உன்னிடமிருந்து மறைந்து போகும். உள்ளது தெரிந்த பிறகு இன்பத்திற்காக நீ பிறரை துன்புறுத்தமாட்டாய் - மறந்து விடாதே.

2. ஏ மனமே! இரண்டு இருப்பதாக நினைப்பு உனக்கு வருமானல், நீ உயிருடன் சித்திரவதையை அனுபவித்தே

ஆகவேண்டுமென்பதை மறந்துவிடாதே. இரண்டாவது தோன்றும் வரை அச்சமாகிய கொடிய பிசாசு உன்னைவிடவே விடாது. மனமே! உனக்குண்டாகும் துக்கமும், பயமும் மறைந்து போகவேண்டுமென்றால் நான் யாரென்று உன்னை நீ கேட்டுவா, உனக்குள்ளிருந்து நானே இவ்வுலகில் அனைத்துள்ளிருக்கும் உயிருக்குயிரும், ஆன்மாவுமாக இருக்கிறேன் என்று விடை வரும். அப்பொழுதுதான் பல கோடி ஜன்மங்களில் உன்னை விடாது துடர்ந்து வரும் துக்கமும், அச்சமும், அழிந்து போகுமென்பதைமறவா திருப்பாயாக. நான் யார் என்றவிசாரணை உன்னிடம் இல்லாது போகுமானால், இரண்டாவ தொன்று இருக்கிற தென்கிற அச்சமாகிய மாபெரும் பூதம் உன்னை பிறப்பு, இறப்பாகிய துக்கசாகரத்தில் ஆழ்த்திக்கொண்டிருக்கு மென்பதை நீ மறந்து விடாதே. மனமே! நீ துக்கப்படுகிற அனைத்திற்கும் முழுக்காரணம் உன்னிடம் இரண்டாவ தொன்று இருக்கிறதென்கிற எண்ணமேதான் என்பதைச் சொல்லி விட்டேன். இரண்டாவது இருக்கிற தென்பவன் இறந்தும், பிறந்தும் கொண்டுதான் இருப்பான். நீ ஜாக்கிரதையாக இருப்பாயாக.

3. ஏ மனமே! உன்னைப்பற்றி (உனதான்மாவைப்பற்றி) நீயே "நான் யார், நான் யார்" என்று இடைவிடாமல்கேள். பிறகு ஊக்கமாக, உறுதியுடன் ஆராய்ந்துபார். அதன் பிறகு இடைவிடாமல் சிந்தித்துவா. இதுதான் உன்னை உய்விக்கும் மிக மிக உயர்ந்த தவமாகும். உன்னை இன்னாரென உணர்ந்துக்கொள்வதற்காக, "நான் யார், நான் யார்" என்று உன்னை நீயே கேட்டு விசாரம் செய்யும் நாளெல்லாம் மிகப்புனிதமான நல்ல நாளாகும். மற்ற புனிதமான தென எந்தநாளாயினும்சரி, எப்பணியாயிருப்பினும் சரி அது அனைத்தும் உனக்குக் கேட்டை உண்டாக்குவனவாகும் என்பதை நீ மறந்து விடாதே. உனக்கு அன்னியமானபுறத்தே உள்ள எந்தப் புனிதப் பொருளாகயிருப்பினும் அதனிடம் நீ

ஆசை வைப்பாயாயின் அந்த ஆசை முடிவில்லாத்துன்பத்தை யும் துக்கத்தையுமே சதாகாலமும் உனக்கு உண்டாக்கி வைத்துக் கொண்டேயிருக்குமாதலால் மனமே! உனது ஆன்மாவிடம் (உன்னிடம்) நீ முழுமனத்தையும் செலுத்தி, அதனிடமே ஆசையையும், அன்பையும் வைத்து, நிறைவுற்ற, குறைவற்றபேரின்பத்தை, பிரும்மானந்தத்தைநீ அனுபவித்து வருவாயாகுக. உலகில் உள்ள தேவதைகள் உள்பட அனைத் திற்கும் கதி நீதான். (உனதாத்மாதான்). உலகில் உள்ள நீருக்கெல்லாம் கதி கடலேயாவதைப் போல் நீயே அனைத் திற்கும் கதியாக இருக்கிறாய் என்பதை ''நான் யார்'' என நீ தீவிரமாக முழுமனத்துடன் விசாரணை செய்து பார்த்தாயானால் தெரியவரும். மறந்துவிடாதே.

4. ஏ மனமே! நீ உனக்குள் கற்பனை செய்துக் கொண்டிருப்பதால்தான் உனக்கு நல்லது கெட்டது தெரிய வருகிறது. சுக, துக்க மெல்லாம் உனது மூட கற்பனைகளே யாகுமென்பதை நீ மறந்து விடாதே. உண்மையில் இரண்டாவது என்பதே இல்லை. அனைத்தும் உனது ஆத்மாவின் பிரகாசமேயாகும். உலகிலுள்ள அனைத்திலுள்ளும் உனது ஆன்ம ஒளி ஒன்றுதான் இருந்து வருகிறது. இவ்வுலகில் மிகச் சிறந்தது, அழிவற்றது ஒன்றே ஒன்றுதான் உளது. அதுதான் உனது ஆன்மாவாகும். உனதான்மாவில் நன்மை தீமை என்கிற இரண்டும் இல்லை. உனது மூடத்தனமான கற்பனையினால் உன்னை நீயே அச்சுறுத்திக் கொள்கிறாய். உன்னை நீயே பயமுறுத்திக் கொள்வதுடன், கெடுத்தும் கொள்கிறாய். மனமே! நன்மை, தீமைகளைத் தியாகம் செய்து விடுவாயானால் முடிவற்ற பிரும்மானந்தம் உனக்குள் கங்கை போல் ஓடத்துடங்கி விடும். பிறகு அனைத்துமே உனது ஆன்ம மயமாகிவிடுவதினால் கற்பனை யென்பதெல்லாம் உன்னிட

யிருந்து மறைந்துபோகும். மனமே! என்று நீ கற்பனையைத் தியாகம் செய்கிருயோ அன்றுதான் உனக்குள்ளிருக்கும் உண்மையை நீ உணர்ந்துக் கொண்டவனுவாய். அன்றுதான் பேரின்பப்பெருக்கானது உனக்குள் ஓடத்துவங்கு மென்பதை நீமறந்து விடாதே.

5. ஏ மனமே! உனக்குள் பேதமிருக்கும்வரை நீ துன்பத்தை அனுபவித்தே ஆகவேண்டும். பலவடிகோடி கோடிமக்களின், உள்ளத்தில் உள்ள ஜீவாத்மாக்கள் அனைத்தும் உனது ஆத்மாவேதான் என்பதை நீ மறந்து விடாதே. நீ உனதான்மாவை தியானம் செய்தால் இவ்வுல கிலுள்ள ஜீவகோடிகள் அனைத்துள்ளும் இருக்கும் ஆத்மாக் களையும் தியானம் செய்வதாகி விடுமென்பதை நம்புவாயாக. நீ வெளி உலகில் காணும் ஜீவகோடிகள் அனைத்தும் உனதான்மாவின் பல வடிவங்களேயாகும். ஒரே பரம் பொருளாகிய ஸ்வயம் பிரகாசமே உனதான்மாவாகவும், அதுவே உலகமனைத்துமாகவும் இருந்து வருவதாக நம்பி விடுவையாகுக. இவ்வுலகில் பல கோடானுகோடிபேர்கள் செய்துவரும் வழிபாட்டின் நோக்கமும் இந்த ஒருமையை அறிவதற்காகவேதான். மனமே! பேதபுத்தி உனக்கு வேண்டாம்; பேத புத்தியே உலகில் அனர்த்தத்தை உண்டாக்கி வைத்துக்கொண்டிருக்கிறது: நீ க்ஷேமமாக சுகமாக நல்லவனாக இருந்துவரவேண்டு மென்ருல் பேத புத்தியை அறவே விட்டொழித்து விடுவையாகுக மறந்து விடாதே.

6. ஏ மனமே! உன்னை இவ்வுலகத்தை ஆண்டு பரிபாலித்து வருபவன் உனக்குள்ளிருக்கும் உனது ஆன்மா வாகும். உனது உடலாகிய (இந்திரியக் கூட்டங்களாகிய) ராஜ்யத்தின் ராஜா உனதான்மா என்பதை நீ மறந்து விடாதே. உனதான்மாவின் கட்டளை இல்லாமல் உனது

இந்திரியங்கள் இயங்க முடியாது என்பதை நீ மறந்துவிடாதே. ஆன்மாவிசாரமிருப்பவனுக்கு இந்திரியங்கள் அடங்கி நடக்கும் மனமே உனது இந்திரியங்களை நீ அடக்கி ஆளத் தெரிந்துக் கொள்ளவேண்டுமென்றால் உன்னை நீ "நான் யாரென்று" கேட்டு இடைவிடாமல் ஆன்மவிசாரம் செய்துவா. அப்பொழுது தான் உனதான்மாவுக்கும், உனது இந்திரியங்களுக்கும் என்ன சம்பந்தமிருக்கிறதென்று உனக்குத் தெரியவரும். மனமே! உனதான்மாவுக்குத் தொடக்கமோ, முடிவோ இல்லை. - அது சாஸ்வதமானது, அழிவற்றது. ஸ்வயம் பிரகாசமான தென்ப தெல்லாம் உன்னையே நீ "நான்யார்" என்று கேட்கும் ஆத்ம விசாரத்தைச் செய்தால்தான் உனது ஆன்மாவின் பெருமை, உண்மை உனக்குப் புரியும். மனமே! உனது ஆன்மா எங்கும் நிறைந்ததாகும். இருப்பது ஒன்றேதான். அதுதான் உனது ஆன்மாவகும். முடிவற்றவனும், குறைவற்றவனும், நாமரூப மற்றவனும், ஸ்வயம் பிரகாச ஸ்வரூபமானவனுமான உனது ஆன்மாவே பிரும்மயமாக இருந்துவருகிறது. மனமே! பல கோடி நீர்துளிகளில் தெரியும் சூரியனின் பிரதிபிம்பங்களைப் போலவே நீ காணும் ஜீவகோடிகளனைத்தும் உனதான்மாவே யாகும். இருப்பது ஒரே சூரியனைப்போல், இருப்பது உனதான்மா ஒன்றேயாகுமென்பதை நீ மறந்து விடாதே- ஜாக்கிரதை.

7. ஏ மனமே! உண்மைப் பொருளாகிய நீ (உனது ஆன்மா) தன்னைத்தானே எப்படி பார்த்துக் கொள்ளமுடியும் சொல்? உனது முகத்தை நீ பார்த்துக்கொள்ள வேண்டு மென்றால், முகம் பார்க்கும் சுத்தமான கண்ணாடி ஒன்று உனக்கு வேண்டும். அதன் மூலமாகத்தான் உனது முகத்தை நீ பார்த்துக் கொள்ளமுடியும். அப்படிப்போல் உண்மைப் பொருளாகிய உன்னை நீ பார்த்துக் கொள்ள வேண்டு மென்றால் உனது பிரதி பிம்பமாகிய பிரபஞ்சத்தின் (விசாரணையின்) மூலமாகவேதான் நீ உனது ஆன்மாவாகிய

உண்மைப்பொருளை அறிந்துக்கொள்ள முடியுமென்பதை மறந்து விடாதே. 'நான் யார்'' என்று மனமே! விசாரணை செய்து பார். முதன் முதலில் நீ பிறந்த அதிசயத்தையும், முடிவாக நீ நல்ல பகுத்தறிவுள்ள மனிதனாக அவதரித்துள்ள ஆச்சரியமும் உனக்குத் தெரியவரும். விசாரணையினால் தோன்றியுள்ள அனைத்துமாக நீ முதலில் பிறந்து, முடிவாக பகுத்தறிவுள்ள மனிதனாகி இருக்கிறாய் என்றும், மேலும் நீ தான் காணும் இந்த பிரபஞ்சமாகவும் இருக்கிறாய் என்றும் அதனால்தான் உன்னை நீ அறிந்துக்கொள்ள முதலில் உனது பிரதி பிம்பமாகிய பிரபஞ்சத்தின் வரலாற்றை (காக்ஷியை) கண்டுகொள்ள ''நான்யார்'' என்று விசாரணை செய்துவரு வையானால் நீயே அனைத்தின் மயமாகவும் இருப்பது உனக்குத் தெரியவரும். உன்னை நீ காண வேண்டு மென்றால் முதலில் உனது பிரதி பிம்பமாகிய இவ்வுலகின் விசாரணையின் மூலமே உன்னை நீ தெரிந்துக் கொள்ள வேண்டுமென்பதை நீ மறந்து விடாதே.

8. ஏ மனமே! இவ்வுலகமனைத்தும் உனது மன மயக்கங்களே ஆகும். வெளி உலகமனைத்தும் அடிக்கடி மாறு கின்றவைகளாகும். என்றுமே மாறாதவன் நீதான். உன்னை அது, இது, என்று சொல்லிக் கொள்ளாதே. நீ என்றும் குறைவற்றவன். நித்தியமாக என்றென்றும் நீ நிறைவுற்ற வனாவாய். உன்னை நீ ''நான் யார்'' என்று உறுதியாக விசாரணை செய்துபார். பிறகு நீதான் இப்பிரபஞ்சத்திலுள்ள முழு முதற் கடவுளாக இருக்கிறாய் என்று உனக்குத் தெரிய வரும். தேவர்கள் வணங்கும் கடவுள் நீதான், எல்லாம் வல்ல கடவுளாகிய நீ, தன்னைத்தானே மறந்த நிலையில், உன்னை நீயே அஞ்ஞானியென்று நினைத்துக்கொண்டு, மன மாயை யினால் தவிக்குகிறாய். மனமே! உனக்கு இனிமேலாவது மனமயக்கம் வேண்டாம். இவ்வுலகமனைத்திற்கும் நீயே காரணமாகயிருக்கிறாய். நான் யார் என்று விசாரணைசெய்து

யார். உன்னுடைய அனுக்ரகத்தினுல்தான் உலகம் அன்புடன் இயங்கிவருகிறது. எல்லாவற்றுள்ளும் நீயே ஸ்திரமாக, சாஸ்வதமாக இருந்து வருகிருய். எல்லாம் நீதான். கோபத்துடன் வெறுப்பவனும் நீ தான். அன்புடன் அரவணைப்பவனும் நீயேதான். நீ காணும் எல்லாவற்றினுள்ளும் உள்ளவனும் எல்லாமுமே நீதான் என்பதை மறந்துவிடாதே. மேலும் உனது நிஜஸ்வருபமாகிய உன்னை நீ மறந்தபோது, நீ அஞ்ஞானியாகிவிடுகிருய். உன்னை நீ அறிந்துகொண்டு, இடைவிடாமல் "அதுவே நான்" என்று ஸ்திரமாக உறுதியாகிவிடும்போது நீ எல்லாம் வல்ல இறைவனுகிவிடுகிருய் என்பதை மறந்து விடாதே. ஜாக்ரதை.

9. ஏ மனமே! இவ்வுலகமனைத்தும் ஒரு கானல் நீரேயாகும். நீ காணும் எதையும் சத்தியமாக உள்ளதென நம்பிவிடாதே. இவ்வுலகில் உன்னை மயக்குவது உனது மனமாயையாகும். நீ இவ்வுலகில் எதனிடம் ஆசை வைக்கின்ருயோ அது உன் கண்முன்னதாகவே அழுகிப்போய் துர்க்கந்தமெடுத்து, முடிவில் அழிந்தும் போகிறதென்பதை நீ நன்கு ஊன்றி, உறுதியாக விசாரணை செய்துபார்த்தால் உனக்கு நன்கு தெரியவரும். இந்த பிரபஞ்சமனைத்தும் ஒரு நாள் அறவே மறைந்துவிடக்கூடியதாகும். இதை இவ்வுலகை நீ கானல் நீரைப்போல் உருதியாகப் பாவித்துக்கொண்டு உலகிடம் பழகிவா. உனக்கு மேற்கண்ட பாவனைகள் இல்லையென்ருல் உனது வேதாந்தம் அனைத்தும் வெட்டிப்பேச்சாகவே மறைந்துவிடும். உனது வாழ்நாளில் உன்னை நீ அறிந்துகொண்டு, அனுபவித்து அறிந்துகொள்ளவேண்டியதைச் சொல்லிவிட்டேன். மனமே! இந்த உலகம், இந்த உடல் எந்த நிமிஷமும் மறைந்துபோகக்கூடியதாகும். உலகையும் உடலையும் கானல் நீரைப்போல் கண்டு கொண்டு அதனிடம் பழகிவா. எதனிடமும் ஆசையை வைத்துவிடாதே.

---

நீ முழுமனதுடன் ஆசைப்படவேண்டிய வஸ்து நீயேதான். உன்னிடமே நீ ஆசையை வைத்துவிடு. உனக்கு அன்னியமானது ஒன்று உலகில் இல்லவே இல்லை நம்பு. உன்னையே நீ "நான் யார்" என்று கேள். உன்னைக்காண ஆசைப்படு. உன்னை நீ உனக்குள் கண்டுகொண்டு உறுதியாக நீ நீயாகவே இருந்து விடுவையாகுக. மறந்துவிடாதே.

10. ஏ மனமே! நீ பந்தப்பட்டிருப்பதற்கும், துக்கம், துயரம், துன்பமெல்லாம் உனக்கு இடைவிடாமல் உண்டாவதற்கும் காரணம் என்னதெரியுமா உனக்கு? சொல்லுகிறேன் கேள். அனைத்தும் உனது மனமயக்கங்களே யாகும். மனமே! இவ்வுலகமே மாயையின் பொய் தோற்றமேயாகுமென்பதை நீ மறந்துவிடாதே. அனைத்திற்கும் ஆதாரமாகயிருப்பவன் நீ தான். நீ யார் என்று உன்னை நீ கேட்டுக்கொள். உனக்குள்ளிருந்து, உன் மயமாகவே இருக்கும் உனதான்மா உனக்குவிடை கூறிவிடும். உயிர் உள்ளபோதே "நான் யார்" என்று உனக்குள்ளேயே நீ கேட்டுக்கொள் உன்னைப்பற்றிக்கொண்டுள்ள பந்தமனைத்தும், துக்கம் துயரம், கொடிய துன்பமெல்லாம் இருந்தயிடம் தெரியாது மறைந்துபோகும். உனது உடலில் உயிருள்ளபோதே நீ பேரின்பத்தை இடைவிடாது அனுபவித்துய்யலாம். அப்பொழுது உன்னை ஜீவன்முக்தன் என்று உனது அந்தாரத்மாவே உனக்கு பெயர் கொடுத்துவிடும். நீ முக்தனாக வேண்டுமென்றால் "நான் யார்" என்று விசாரணையை இடைவிடாமல் செய்துவா. உனது லக்ஷ்யம் நிறைவேற்றிவிடும். நீ பற்றற்றவனாகவே ஜீவித்திருக்கலாம். மேல் கண்டபடி நீ விசாரணை செய்து இம்மையில் தண்ணீரில் கிடக்கும் தாமரைபோல் இவ்வுலகில் இருந்துகொண்டு இன்புற்றிருந்து வருவாயாகுக. மறந்துவிடாதே.

11. ஏ மனமே! கடல் நீர் ஆவியாகி மேலே செல்லுகிறது அதைக்காற்றானது தனது வேகத்தினால் அங்குமிங்கும்

கொண்டுசென்று மழைத்துளிகளாக பூமிக்குத் திரும்பி அனுப்பிவிடுகிறது. அந்த மழைத்துளிகள் மலை, காடு மற்று முள்ள இடங்களில் விழுந்து, ஒன்றாகச் சேர்ந்து பெரிய நதி யாகி, உலகிற்கு உபகரித்துக்கொண்டு முடிவில் தான் எங்கிருந்து வந்ததோ அந்தக்கடலையே சரணமென்று அடைந்துவிடுகிறது பார். மனமே! உனது வாழ்க்கையும் இப்படித்தான். நீ முதலில் பரம்பொருளில் இருந்து வந்தாய். பலகோடி ஜீவர்களாகப் பிறந்து, உலகிற்கு உபகாரம் செய்து விட்டு இறந்தாய். முடிவாக நீ நல்ல பகுத்தறிவுள்ள மனிதனாக இப்பொழுது அவதரித்துள்ளாய். முடிவில் நீ எங்கிருந்து வந்தனையோ அந்த பரம் பொரு ளிடமே இரண்டறக்கலந்து விடப்போகிறாய். இதுதான் உலகில் அனைவர்க்கும் உண்மையாக நடைபெற்றுக்கொண்டி ருக்கும் சமாச்சாரமாகும். மனமே! கடல் நீரே மழையாகி உலகிற்கு நல்ல பலனைக் கொடுத்துவிட்டு, முடிவில் கடலோடு கலந்துவிடுவதைப்போல, நீ பரம்பொருளிடமிருந்து வெளி வந்து, உலகிற்கு உபகாரம் செய்துவிட்டு மீண்டும் அந்தப் பரம்பொருளிடமே கலப்பது உறுதியாகுமென்பதை நீ மறந்து விடாதே. கடல் நீருக்கும், மழைநீருக்கும் சம்பந்தம் இருப் பதைப்போல், உனக்கும் பரம்பொருளுக்கும் இடையறாத சம்பந்தம் உண்டு என்பதை நம்பிவிடுவாயாகுக. மனமே! உனக்கும், பரம் பொருளுக்கும் துளி வேற்றுமையும் கிடையா தென்பதை சொல்லிவிட்டேன். மறந்துவிடாதே. மறந்து விடுவையானால் கவலையும், அச்சமும், உன்னை பலகோடி ஜன்மங்களிலும் விடாது பற்றிக்கொண்டுவிடும், ஜாக்கிரதை. மறந்துவிடாதே.

12. ஏ மனமே! காணும் இவ்வுலகமனைத்தையும், நீ தூங்கும் போது காணும் கனவைப்போலவே விழித்துக் கொண்டிருக்கும்போதும் எல்லாம் கனவுகளே என்று உறுதி யாக நீ நம்பிவிடுவையாகுக. உண்மையில் நீ உன் கண்

களால் காணும் அனைத்திற்கும், எதற்கும் இருப்பேயில்லை. கானல் நீரைப்போன்றதே இவ்வுலகம். நன்கு விசாரணை செய்துபார். வேதாந்த விசாரம் இன்றேல் சத்தியம், உண்மைப் பொருள், விளங்காது. உனக்கு தொல்லைகளை தந்துகொண்டிருக்கும் இந்த நீ காணும் உலகம் அனைத்தும் உனது மனமாயையின் கொடுமைகளாகு மென்பதை நீ மறந்து விடாதே. உன் மனம் போனபோக்கில் நீ போகாதே. உனது மனமே துக்கத்திற்கும், கொடிய தொல்லைகளுக் கெல்லாம் காரணமாகும். மனமே! உனக்கு விடுதலைவேண்டு மானால் சங்கல்பத்தைத் தியாகம் செய்துவிட்டு நீ சும்மாயிரு. உனக்கு தைர்யமிருக்குமானால், துணிவுடன் நீ சும்மாயிருந்து விடுவையாகுக. சும்மாயிருக்கத் தெரியாதவன் மனம் பல கோடானுகோடி சங்கல்பங்களுடன், மாயா ஜால விசித்திரங் களை இடைவிடாமல் செய்துகொண்டிருக்கும், மேலும் சங்கல்பத்தியாகம் இல்லாதவனுக்கு இடைவிடாத பிறவியை அவனது மனம் உண்டாக்கி வைத்துக்கொண்டேயிருக்கும். மனமே! அனைத்தையும் கனவு போல் கண்டு இது இல்லை, இது நானில்லையென்று அறவே ஒதுக்கி, சங்கல்பங்களை ஒழித்து விடுவையாகுக. நீ காணும் எல்லாமே பொய்த் தோற்றமாகும், மன மாயையின் சேஷ்டைகளை நம்பாதே. உன்னை நீ நம்பு. உன்னை உனக்குள் அறிந்துக்கொள்ள மனம் இறந்தபடி நீ சும்மா இருந்துவிடு. உனக்குள் சுகம் உதயமாகிவிடும். மறந்துவிடாதே, மறந்துவிடாதே.

13. ஏ மனமே! ஸங்கல்பம் ஒழியாவிடில், அதிலிருந்து பலவகைப்பட்ட விசித்திர நிகழ்சிகள் இடைவிடாமல் வந்து கொண்டேயிருக்குமென்பதை மறவாதே. ஸங்கல்பத்தை தியாகம் செய்யாதவனுக்கு ஞான முண்டாவது மிகக் கடின மாகும். மனமே! ஸங்கல்பத்தை தியாகம் செய்வதற்கு உனக்குத் துணிவும், தைரியமும் வேண்டும். பிரபஞ்சமே ஒழிந்தாலும் ஒழியட்டுமென்கிற தைரியமிருப்பவனுக்கே

ஆசைகளைத் தியாகம் செய்யமுடியும். ஆசையிருப்பவனுக்கு ஸங்கல்பம் கோடி கோடியாக அகத்துள் வந்து கொண்டே இருக்கும். (ஸங்கல்பம்) ஆசை இருப்பவனுக்கு சுதந்திரம் வெகுதூரமாகும். ஆசையுள்ளவன் மாயையின் வசம் பந்தப் பட்டிருக்கிறான் என்பதை நீ மறந்து விடாதே. ஆசையற்ற வனுக்கு விடுதலை உண்டு. ஆசை அற்றவனே ஆன்மாவின் உண்மையை உணர்ந்து கொண்டு, விடுதலைபெற்று ஸதா காலமும் இன்புற்றிருப்பன். மனமே! மெய்ப்பொருள் எங்கும் வியாபித்துள்ளதாகும். அது இல்லாத இடமேயில்லை. ஆசை களாகிய அழுக்குள்ளவன் மனம் மெய்ப்பொருளை அனுபவிக்க இயலாது தவிக்கும். அழுக்கற்ற (ஆசையற்றவன்) வன் உள்ளத்தில் மெய்ப்பொருள் ஸ்வயம் ப்ரகாச மாகவே இருந்து வரும். மெய்ப்பொருளிடம் உனது மனமோ, நினைவோ செல்ல முடியாது. பிறகு வாக்கினால் அதைப்பற்றி நீ எப்படிப் பேச முடியும்? மனமே! ஸங்கல்பத்தை விட்டு விடு. ஆசைகள் இருந்தயிடம் தெரியாமல் மறைந்து போகும். பிறகு உனது அகத்துள் பேரின்ப வெள்ளம் ஸதாகாலமும் பெருக்கோடத் தொடங்கிவிடும். மறவாதே!

14. ஏ மனமே! உனக்குள்ளிருக்கும் உனது ஆத்மாவின் அனுபவம் உனக்கு வேண்டுமானால் பற்றுகளை அறவே விடு. அனைத்தையும் ஊக்கமாகத் தியாகம் செய்வாயாகுக. ஒரு பயனையும் கொடாத புலன்களின் இன்பத்திற்காக நீ என்ன வெல்லாமோ துணிந்து செய்கிறாய். முடிவில் புலன்களால் ஏற்படும் இன்பம் கொடிய பாவத்தையும், பிறவியையும் உண்டாக்குமென்பதை நீ மறந்துவிடாதே. முட்டாள் சிற்றின்பத்தை அனுபவிக்க உயிரையும் தியாகம் செய்து விடுகிறான். முட்டாளாகிய அக்ஞானி, தன்னை அறிந்து கொள்ளாது, பிறவற்றிலிருந்து தனக்கு இன்பம் உண்டாவ தாக நம்பி, நாய்கள் எலும்பை கடித்து ருசித்து வருவதைப் போல் அக்ஞானியானவன் தனக்கு அன்னியமானவற்றில்

பற்றுவைத்து, பிறருக்காகவே உழைத்து, முடிவில் பாவக் கடலில் ஆழ்ந்து மடிந்து போகிறனென்பதை மனமே! நீ மறந்து விடாதே. மனமே! இருப்பது ஒரேயொரு ஆன்மா தான். அதை நீ உனக்குள் அறியவே புறப்பொருளைத்தை யும் நீ தியாகம் செய்ய வேண்டுமென்று சொன்னோம். தான் வேறு, நீ காணும் பிரபஞ்சம் வேறாகக்காணும் வரை சத்யம் உண்மை, புலப்படாது போகும். உன்னையே நீ நான் யார்? என்று கேள். விஜாரணை செய். புறத்தே உள்ளது அனைத் தும் உனது பொய்த்தோற்றமாகிவிடும். புறத்தோற்றமனைத் தும் உனது மனமாயையின் தோற்றமே என்கிறது விஷய மானது நான் யார் என்கிற விசாரணையினால் உனக்குள் உறுதி யாகிவிடும். பிறகு இருப்பது உனது ஆத்மாவாகுமென்பதை உள்ளங்கையில் இருக்கும் நெல்லிக்கனிபோல் உன்னை, உனதாத்மாவை, நீ உனக்குள் கண்டு கொண்டு விடலாம். மறந்துவிடாதே.

15. ஏ மனமே! நீ கற்பனை செய்வதை இக்கணமே நிறுத்திவிடுவாயாகுக. எவ்வளவு நல்லவர்களையும் கற்பனை கெடுத்துவிடுகிறது. கற்பனைகளை நம்பி ஏமாந்தவர்கள் இவ்வுலகம் தோன்றிய நாள்முதல் முடிவு வரை இருந்துக் கொண்டேயிருப்பார்கள். கற்பனைதான் அக்ஞானம். அக்ஞானி சதாகாலமும் கற்பனை செய்துகொண்டு, தன்னை பாபி என்றும், புண்யாத்மா என்றும், மாறி, மாறி கூறிக் கொண்டு, நரகத்தையும், ஸ்வர்க்கத்தையும், தனது கற்பனை யால் சிருஷ்டித்தவாறு இறந்தும், பிறந்தும் கொண்டு இருந்து வருகிறன். ஏ மனமே! நீ எதை நினைத்து கற்பனை செய்கிறயோ, அதன் மயமாகி விடுகிறய். உனது கற்பனை யினல் நீ நாயாகவும், ஆகலாம், கடவுளாகவும் மாறலாம். இரண்டும் கெட்டுத்திண்டாடவும் செய்யலாம். மனமே! கற்பனைகளை அறவே தியாகம் செய்து விடுவாயாகுக. சத்தி யத்தையும், ஆனந்தத்தையும், கற்பனையினல் நீ தெரிந்து

கொண்டு விட முடியாது. நீ எந்த நிமிஷம் கற்பனைகளைத் தியாகம் செய்துவிட்டு சும்மாயிருக்கிறயோ, அக்கணமே உனக்குள் ஆனந்த ஊற்று பெருக்கெடுக்கத் தொடங்கிவிடும். எங்கும் நிறைந்த ஆனந்தம் உனக்குள் உன் மயமாக இருப்பதை நீ காண்பாய் அதை நீ உனக்குள் அனுபவிப்பாய். மறந்துவிடாதே.

16. ஏ மனமே! உனக்குக் கவனக்குறைவு உண்டாகுமானல், நீ துக்கப்படநேரும். எவனுக்கு லட்சியத்தில் இடையருத கவனம் உறுதியாக இருக்கிறதோ, அவன் தன்னைத்தானே காப்பாற்றிக் கொண்டு விடுவான். மனமே! பொறுமையுடன் அமைதியாக முழுமனத்தையும், கவனமாக செலுத்துகிறவன் எதையும் வெல்லக்கூடிய ஆற்றல் (மார்க்கம்) தானே உதயமாகி விடுமென்பதை நீ மறந்துவிடாதே. பதட்டப்படாது உனது கவனத்தை லக்ஷ்யத்தில் மேலும் செலுத்தி வெற்றி பெறுவையாகுக. மறந்துவிடாதே.

17. ஏ மனமே! உன்னைக் கெடுக்க மாயையானது காமரூபத்திலும், கோப ரூபத்திலும், உனக்குள்ளிருந்து உன்னையும் அறியாது, கெடுத்துவிடுமென்பதை நீ மறந்துவிடாதே. உனக்கு மிகக் கொடிய பகைவன், சத்ரு, காமமும், கோபமுமே ஆகும். இரண்டும் நரகத்தின் வாயில்களாகுமென்பதை மேலும் உனக்கு ஞாபகப் படுத்துகிரேம். காமமும், கோபமும், இருக்கும்வரை ஞானனுபவம் உனக்குள் உண்டாகாது. காமமும், கோபமும், ஞானிகளையும் கெடுத்துவிட வல்லதாகும். மறந்துவிடாதே. கடுகளவுகாமமோ, கோபமோ, உனக்குள் இருக்கக் கூடாது. உனது மனம் போகிறபடி நீ அதை விட்டுவிடலாகாது. இந்திரியங்களையும், மனத்தையும் நீ அடக்கியாளவேண்டும். காமம் நிறைவேருதபோது கோபம்வரும். கோபம் கொலையையும் துணிந்து செய்துவிடு

மென்பதை நீ மறவாதே. காமத்தினுலும், கோபத்தினுலும், கெட்டவர்கள் எத்தனை என்பதை எண்ணமுடியாது. உலகம் தோன்றிய நாள்முதல் காமத்திற்கும், கோபத்திற்கும் அடிமையாகிக் கெட்டவர்கள் எத்தனையோ கோடான கோடிப்பேர்களாகும். மனமே! தபஸ் என்பதெல்லாம் ஸித்திக்க வேண்டுமென்ருல் முதலில் காமத்தையும், கோபத்தையும் அறவே தியாகம் செய்துவிடவேண்டும். காமத்தையும், கோபத்தையும் ஜயிப்பவன் எவனே அவனுல்தான் தவம் செய்ய முடியும் ஆத்மாவையும் அறியமுடியும். மறந்துவிடாதே. ஜாக்ரதை. ஜாக்ரதை.

18. ஏ மனமே! உன்னை நீ உள்ளபடி அறிந்து கொள்வதில் உனக்கு விருப்பமில்லை. எதுவானுலும் அதை வேருென்ராக, ருசியாகப் பேசி, சர்க்கரைப் பாகைக்கொண்டு அதைமேலேபூசி மறைத்துவிடுகிருய். காரணம், அதனிடமுள்ள ஆசைதான். ஆசையாகிய சுயநலம் இருக்கும்வரை உன்னை நீ உள்ளபடி கண்டுகொள்ளமுடியாதென்பதை நீ மறவாதே. ஆசை இருக்கும்வரை உண்மை அறிவு உனக்குள் ஒருபோதும் உதயமாகாது. மனமே! உனதாத்மாவை, உன்னிடமிருக்கும் ஆசை மறைத்துக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு ஆசையும், அகங்ஹாரமாக மாறி, எதற்கெடுத்தாலும் நான்தான் என்று சொல்லிக்கொண்டு தன்னைத்தானே மறைத்துக் கொள்கிறதென்பதை நீ மறந்துவிடாதே. மனமே! பட்டுப்புழுவைப்போல் தான் உனது கதியுமாகும் பட்டுப்புழு தன்னைத்தானே சிறைப்படுத்திக் கொண்டு மடிவதைப்பார். உனக்கும், அதற்கும், என்ன வித்யாசம் சொல். மனமே! உனக்கோ பகுத்தறிவு இருக்கிறது. எதையும் உள்ளபடி அறிந்து கொள்ளும் சக்தி அபாரமாக இருக்கின்றது. உன்னை நீயே விலங்கிட்டுக் கொள்ளாதே. உனது முயற்சிஅனைத்தும் உன்னை நீ அறிந்துய் வதில் செல்லட்டும். முதலில் ஆசைகளைத்தியாகம் செய்துவிடு. காமக்ரோதங்கள் அழிந்து போகும் பயனை எதிர்பாராது

செய்வனத் திருந்தச்செய்துவா. இடைவிடாது பற்றன்றிச் செயல் புரிந்துவா. உன்னை நீ உள்ளபடி உனக்குள் அறிந்துகொண்டு விடலாம். மறந்துவிடாதே. மறந்து விடாதே.

19. ஏ மனமே! உனது சொந்த நலத்திற்காகவே நீ கடவுளை (உனதாத்மாவை) உனக்குள் கண்டுவிடுவாயாகுக. பிறர் கண்டுள்ள கடவுளைப் பற்றி நீ நாளெல்லாம் பேசினால் உனக்குப் பயனுண்டாகுமா? சொல். நீ உணவருந்தினால் உனக்குப் பசி நீங்கும். பிறர் சாப்பிட்டால் உனது பசி எப்படிப் போகும் சொல். பிறர் தெரிந்துகொண்ட கடவுள் நிச்சயமாக உன்னைக் காப்பாற்றாது. நம்பு, மனமே! உனக்காகவே நீ உனக்குள் இருக்கும் கடவுளைக் கண்டு கொண்டு விடு. பேசிப்பொழுதைப் போக்காதே. உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு விடாதே. கடவுளைக் கண்ட மாதிரி பாசாங்கு செய்யாதே. பிறரை நீ ஏமாற்றலாம், ஆனால் நீ செய்யும் பாசாங்கு உன்னை நீயே ஏமாற்றிக் கொள்வதாகு மென்பதை நீ மறந்துவிடலாகாது. மனமே! உனக்குள்ளிருக்கும் கடவுளாகிய உனதாத்மாவினால்தான், உனக்குண்டாகும் எண்ணங்களும், செயல்களும், மற்றெல்லாமே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அனைவருக்கும், அனைத்திற்கும் காரணமாக இருந்து வரும் உனதாத்மா உனக்குண்டாகும் நன்மை, தீமைகளாலோ, இன்பதுன்பங்களாலோ, தட்பவெப்பங்கலாளோ, இரட்டைகலாளோ பாதிக்கப்படுவதில்லை என்பதை. நீ மறந்து விடாதே. உலகம் அனைத்திற்கும் காரணமாகவும், எதனிடமும் பற்றற்றதாகவும், அனாதியாகவும், ஸதாகாலமும் ஆனந்தமாகவும், இருந்துவரும் உனக்குள்ளிருந்து வரும் உனதாத்மாவை, உனது சொந்த நலத்திற்கு நீ முதலில் அறிந்துகொள். மறந்துவிடாதே.

---

*அதிஷ்டானம், புதுக்கோட்டை.*

20. ஏ மனமே! தெய்வத்திட்டம் எதையும் வேண்டாதே. எதையும் கேட்காதே. வேண்டுவதையெல்லாம் நான் கொடுக்கிறேன் என்று ஒரு கடவுள் உன்னை நோக்கி வந்தாலும், அந்தக் கடவுளிடம் ஒன்றையுமே நீ கேட்காதே. கடவுள் உனக்குத் தேவையுள்ளவைகளையும், மேலான உலகையுமே கொடுக்க வல்லவராக இருப்பினும், அது உனக்கு நல்லதன்று உலகில் தேவை பூர்த்தியாகி விட்டது போதுமென்று சொன்ன மனிதனே கிடையாது. கிடைக்கக்கிடைக்க மேலும் தேவையும் அதிகரித்துக்கொண்டேதான் போகும். மனமே! போதுமென்று இருந்துவிடு. கிடைக்கக்கிடைக்கத் தேவையும் அதிகரித்துக்கொண்டேதான்போகும். என்கிற வட்டத்தில நீ இது வரை சுற்றிக்கொண்டிருந்தது போதும். குழந்தைகளைப் போல்விளையாடிக்கொண்டு இராதே.கனவுலகில் நீசஞ்சரித்தது போதும் சொப்பனம் என்றுமே சொப்பனம்தான் ஒருக்காலும் உண்மையாகாது. ஜாக்ரதை விழித்துக்கொண்டுவிடு எதையும் வேண்டாதே. நான் யார் என விஜாரணை செய்துவா. அதுவொன்றேபோதும் உனக்கு. உன்னை உனக்குள் காட்டக்கூடியது நான் யார்? என்கிற விசாரணைமொன்றேதான். உன்னிடமுள்ள சர்வத்தையும், நீ தியாகம் செய்துவிடு. பிறகு எஞ்சியிருப்பது. நீ தான். நான் யார்? எனக்கேள். அதுவே சொல்லும். கவலையகன்றுவிடும். எதுவுண்டோ அதுவே நீயாவாய். மறவாதே.

21. ஏ மனமே! உன்னை பிறர் மெச்ச வேண்டுமென்று நீ செய்யும் கார்ய மெல்லாம் உன்னைத் துன்புறுத்தவே செய்யும். பிறருடைய பாராட்டுக்காக நீ செய்வதெல்லாம் மேலும் உனக்குக்கவலையை கொடுத்துக் கொண்டிருக்கு மென்பதை நீ மறவாதே. இவ்வுலகைக்கடவுள் சிருஷ்டித்தார். மனமே! அந்த சிருஷ்டியில் நீயும் ஒருவனுகும். உலகமனைத்தும் கடவுளாகவே இருக்கும்போது இவ்வுலகிற்கு நீ என்ன கைங்கர்யம் செய்யக் கிடக்கிறது. உன்னை எவர் போற்றினுலும்

அவர் கடவுளேதான். எவர் தூற்றினாலும் அவரும் கடவுளே தான். கடவுளுக்கு அந்நியமாக இவ்வுலகில் ஒரு அணுவும் இல்லையாதலால் மனமே! எவர் உன்னை மெச்ச வேண்டும் மென்று நீ நினைக்கிறாய். மனமே! எது நடப்பினும், நீ எதைச் செய்யினும், அனைத்தும் இறைவனுடைய செயலாகும் என்பதை நீ உறுதியாக நம்பி விடுவாயானால் உனக்குள் மன அமைதி உறுதியாக ஏற்பட்டுவிடும். நீ நிறை ஞானமே வடிவெடுத்த வனாகவும், ஆகிவிடுவாய். மேலும் நீ அன்பின் சொரூபமாகவே மாறிவிடுவாய். பிறகு உனது கண்ணில் கேடு தென்படாது. எல்லாம் பிரும்மயமாகவே (கடவுள் மயமாகவே) நீ காண்பாய். மனமே! நீ துன்புறாமலிருக்க வேண்டுமானால், ஆசைகளைத் தியாகம் செய்து விடுவாயாகுக. ஆசையிருக்கும் வரை உன்னைப்பிறர் பார்க்க வேண்டும். மெச்ச வேண்டும். தனக்குப் புகழ்வேண்டும். மற்றெல்லாம்வேண்டாம் என்கிறஎண்ணங்கள் கடலலைகள் போல் வந்து கொண்டே இருக்குமென்பதையும் உனக்குச் சொல்லிவிட்டேன். மனமே! உனக்கு இன்பம் குறையற்ற இன்பம் வேண்டுமானால் ஆசையைத் தியாகம் செய்து விடுவாயாகுக.

22. ஏ மனமே! தன்னை உள்ளேவைத்துக் கூடுகட்டிக் கொண்டு மறைந்து போகும் பட்டுப்பூச்சியின் கதை போல், உனது கதையும் ஆகிவிடாதிருக்கட்டும். நீ சுதந்தரமாக இருக்க வேண்டுமானால் தன்னைத்தானே உள்ளேவைத்துத் தாளிட்டுக்கொண்டுள்ளநீ உனது தாழைத் திறந்து கொண்டு சுதந்தரமாக நீ வெளியே வருவாயாகுக. மனமே! பட்டுப் பூச்சியைப் போல் உன்னை நீயே கெடுத்துக் கொண்டுவிடாதே. மனமே! தன்னைத்தானே அக்ஞானி என்று நினைத்துக் கொண்டுள்ள உனது நினைப்பே உனக்குள்ளிருக்கும் மிகக் கொடிய பலவீனம் ஆகும். உன்னிடம் பலவீன மிருக்கும் வரை எத்தனை கோடிப்பிறவி எடுப்பினும் நீ கடைத்தேற முடியாது.

அதிஷ்டானம், புதுக்கோட்டை.

மனமே! பலவீனத்தை உனக்குள்ளிருந்து விரட்டுவாயாக. ஸதாகாலமும் நானே அவன். அவனே நான் (அஹம் ப்ரம்மாஸ்மி, ப்ரும்மைவாஹமஸ்மி) என்று இடைவிடாமல் உனக்குள் நீ கூறிவருவாயாகுக. உனது ஒவ்வொரு அசைவிலும், நானே அவன் என்று நீ கூறிவரும் நினைவுகள், தழும்பேறி விடட்டும். மனமே! மறந்துவிடாதே. உண்மையைக் கூறிவிட்டேன். வாயை மூடிவிடு. உனதகத்துள் இடைவிடாமல் அஹம்ப்ரும்மாஸ்மி (நானே அவன்) என்று இடைவிடாமல் பாவனைசெய்துகொண்டு விடுவதையே தவெமனக் கொள்வாயாகுக. மனமே! உன்னைப் பலவீனம் படுத்திவரும் சங்கல்பங்களை அறவே, இக்கணமே தியாகம் செய்து விடுவையாகுக. ஆசையானது மிகக்கொடிய நோயாகும் சங்கல்பத்தில் இருந்து அனைத்தும் வெளிவருகின்றன. ஆசை ஒழிய வேண்டுமானால்ஸங்கல்பத்தைத், தியாகம் செய்து விடு. பிறகு இருப்பது நீ தான் நீயே அதுவாகஇருப்பது அப்போது தான் உனக்குத் தெரியவரும். நீ அதுவாக வேண்டுமானால் சங்கல்பத்தைஇக்கணமே தியாகம் செய்துவிடுவாயானால், அது நீயாக இருப்பது உனக்குத் தெரியவரும். மனமே! பட்டுப் பூச்சி போன்று மடிந்து போகாதே. விழித்துக்கொள். மனமாயை யாகிய கதவைத் திறந்து கொண்டு வெளியேவா. உன்னை நீயே காப்பாற்றிக் கொள். மறந்துவிடாதே. ஜாக்ரதை.

23. ஏ மனமே! ஆசையை உனது உள்ளத்தில் நிரப்பிவைத்துக் கொண்டு கடவுளை வழிபடுவாயானால், ஒவ்வொரு ஆசையும் நூறு மடங்கு, பெருக்கெடுத்து அளவு கடந்த தீமைகளை உனதுள்ளத்தில் செய்து கொண்டு இருக்கும் மென்பதை நீ மறந்து விடாதே. மனமே! நீ ஆசையின் கட்டுக்கு அகப்பட்டு விடாதே; தேனிபோல் இருந்துவா. எங்கு உனக்கு சௌகரியமோ, அங்கு சென்று சுகித்திரு. எந்த

விடத்திலும், எவரிடத்திலும் கட்டுப்படாதிருப்பாயாக. உனது விடுதலை உனதிடமே இருக்கின்றது. மனமே! ஆசை ஆகிய விலங்கை உனது கையில் நீயேதான் பூட்டிக் கொண்டுள்ளாய் விலங்கை அவிழ்க்கவும், உனக்குச் சுதந்திரமுண்டு. மறந்து விடாதே. ஆசை, அணுவளவுள்ளவன் எவனாலும் அவன் நரகத்தில்தான் இருந்து வருகிறான். மறவாதே. ஆசைகளில் நல்ல ஆசை என்று உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு விடாதே. ஆசையில் நல்லது, கெட்டது என்பது இல்லை இரண்டும் நரகவாயில்களேயாகும். மறந்து விடாதே. ஆசையுள்ளவன் ஆன்மாவை உணர முடியாது. உனது ஆன்மாவை நீ உணர வேண்டுமாயின் கடுகளவு ஆசையும் உன்னிடம் இருக்கலாகாது. மறந்துவிடாதே. ஜாக்ரதை. ஜாக்ரதை.

24. ஏ மனமே! சுகமும்,துக்கமும், எங்கிருந்து உண்டாகிறதென்பதை உனக்குள் நீ முதலில் கண்டுபிடிப்பதையே தவமெனக்கொண்டு விடுவையாகுக சுகமுண்டானால் அடுத்தது துக்கமும் வந்தே தீரும். இப்படி இரண்டும் மாறி மாறி வந்து கொண்டிருந்தால் என்ன பிரயோஜனம் சொல்? விஜாரணை செய்து பார். மனமே! சுகதுக்கமாகிய இரண்டிற்கும் உற்பத்தி ஸ்தானம் எங்கே? இருக்கிறதென்பதைக் கண்டுப் பிடித்து அதனை வேரோடு பிடுங்கி எறிந்து விடுவையாகுக. மேல் கிளை களை வெட்டி விடுவாயானால், மறுபடியும் காலம் வரும் போது துளிர் விட்டுக் கொண்டு, வெளிவரும். வேரோடு பிடுங்கி விடுவாயானால், மறுபடியும் முளைவராது. மறந்து விடாதே. நீ உடனடியாகச் செய்ய வேண்டிய வேலையாவது இடை விடாது சுக, துக்கம் எங்கிருந்து உண்டாகிறது? யாருக்குண் டாகிறது? ''எனக்கு'' என்று பதில் வருமானால் நான் யார் எனக்கும், துக்கத்திற்கும், சுகத்திற்கும், என்ன சம்பந்த மிருக்கிறது? நான் சுக ஸ்வரூபியா? அல்லது துக்கமே

---

உருவானவனு? என்று விஜாரணை செய்து பார். மனமே! சுகமும், துக்கமும், உனக்கில்லையென்பதை உனது ஆத்ம விஜாரணை ஒன்றினுல் தான் உனக்குத் தெரியவரும். நான் யார்? என்று உன்னை நீயே கேள். அனைத்திற்கும் விடை உனக்குள்ளிருந்தே வரும். மறவாதே.

25. ஏ மனமே! சிந்தனை செய்து வா. இடைவிடாமல் நான் யார் என்று சிந்தித்து வா. (விஜாரணை செய்து வா) ஆத்ம சிந்தனை அற்றவன் விடுபட முடியாது. பந்தநிவர்த்தி உண்டாக வேண்டுமானுல் முதலில் நான் யார் எனச் சிந்தனை செய்ய வேண்டும். சிந்தனை அற்றவன் என்றும் அடிமையாக இருந்து வருவான். சிந்தனையற்றவர்களை மூடர்கள் என்று நல்லறிவுடையவர்கள் கூறுவார்கள். சிந்தனை அற்றவன் பிறருடைய தயவை ஸதாகாலமும் நாடியும், அறிவுள்ளவர்கள் சொல்படி செய்யவேதான் பிறந்துள்ளதாக நம்பியுமிருந்து அடிமைகளாகவே காலத்தைக் கடத்துவார்கள். மனமே! உனக்கு அடிமைத்தனம் வேண்டாம். சிந்தனை செய். நான் யார் என்று இடைவிடாது சிந்தனை செய்து வா. பிறகு உன்னை நீயே அறிந்து கொண்டு விடுவாய். பிறகு உனக்குள் இருக்கும் ஆனந்த ஊற்று பெருக்கெடுத்து ஓடத் தொடங்கி விடும். எல்லையில்லாத ஆனந்த ஸாகரத்தில் நீ சதாகாலமும் இருந்து வருவதை நீ உனக்குள் உணர்ந்து கொண்டு விடுவாய். மறவாதே. சிந்தனை செய்து வா.

26. ஏ, மனமே! பிறரைத் திருத்த வேண்டும். அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்கிற எண்ணம் இருக்கும்வரை உனக்கு மன அமைதி உண்டாகாது போகுமென்பதை நீ மறந்து விடாதே. ஏதோ ஒன்றை அனைவரும் போற்றும்படி சாதித்து விடவேண்டுமென்கிற ஸங்கல்பத்தை இக்கணமே நீ தியாகம் செய்து விடுவாயாகுக. பிறருக்கு உதவ வேண்டும் என்கிற எண்ணம் காதில் கேட்பதற்கு

நன்ருகவே இருப்பினும், அவைகள் உன்னை மேலும் துக்கத்தில் கொண்டு விடுமென்பதையும் நீ மறந்து விடாதே. கடவுள் இருக்கிருர். அவரில்லாத இடமே இல்லை. உனது உயிருக்கு உயிரை ஊட்டிக் கொண்டிருப்பவன் கடவுளாகுமென்பதை நீ மறந்து விடாதே. கடவுளை மறந்தவர்கள்தான் தனக்குப் பேர் வேண்டும், புகழ வேண்டும், தன்ருல்தானிதை முடிக்க முடியும். தானில்லையெனில் ஒன்றும் நடைபெருது என்றெல்லாம் நினைத்துக் கொண்டுத் திட்டங்களை வகுக்கின்றனர். உலகில் அரும்பெரும் செயல்களையெல்லாம் செய்து முடிக்கும்படி மக்களை ஊக்குவிக்கின்றவன் கடவுளாகுமென்பதை நீ மறந்து விடாதே. எது முடிவு பெறினும் அது கடவுளையே சாரும் மனிதன் உலகில் கருவியாகவே இருந்து வருகிருன். ஒவ்வொருவருக்குள்ளும் கடவுள் ஆத்மாவாக இருந்து கொண்டு உலகை ஆட்டிப்படைத்து வருவதை நீ சொப்பனத்திலும் மறந்து விடாதே. மனமே! முதலில் உன்னை நீ திருத்திக் கொள்ள முயன்று வா. உனக்கு உன் குருநாதன் செய்த உபதேசப்படி நீ இன்று முதல் பிசகாது நடந்துகொள். உனது முயற்சிகளெல்லாம் உன்னைத் திருத்திக் கொள்வதிலும் உன்னை நீ அறிந்து கொள்வதிலும் இருக்கட்டும் மறந்து விடாதே.

27. ஏ மனமே! உனது திருஷ்டி முழுவதும் உனக்குள் இருக்கும் உண்மையிலேயே ஸதாகாலமும் இருந்து வரட்டும். சத்தியத்தை (உண்மையை) மட்டும் நீ நம்பவே பிறந்துள்ளாய் பகுத்தறிவுள்ள மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவரும் உண்மையை நம்பாதவரை அறியாமையாகிய (அக்ஞானமாகிய) கொடிய பேய்க்கு இருப்பிடமாகி மடிவது திண்ணமாகும். மனமே! தன்னைத்தானே நம்பத் தெரியாதவன் தன்னிடமுள்ள மூட நம்பிக்கையினுல் தான் கெடுவதுடன், தன்னைச் சார்ந்த அனைவரையும் (தேசத்தையும்) கெடுத்து

விடுகிறான். என்பதை நீ மறந்து விடாதே. அனைத்திடமுள்ள மெய்ப்பொருளை அறிந்து கொண்டு பொய்ப் பொருளை விலக்குகின்றவனே மேன்மைகளை அடைந்துய்ய முடியும். மூடநம்பிக்கை அழியாதவரை உன்னிடம் தன்னம்பிக்கை உண்டாகாது என்பதையும் உனக்குச் சொல்லிவிட்டேன். மனமே! தன்னம்பிக்கையுடன் உனக்குள்ளிருக்கும் உன்னை நீயே அறிந்து கொள்ள முதலில் உனக்கு மனத்தூய்மை வேண்டும். உனது மனம் தூய்மையற்றிருப்பதற்குக் காரணம் அளவு கடந்த பொய்க் கற்பனைகளாகும். கற்பனையாகிய அழுக்குகள் ஒன்றின்மேல் ஒன்றாக கோடிக் கணக்காக உனக்குள் உன்னை மறைத்துக் கொண்டிருக்கின்றது. மனமே! உனது திருஷ்டியை அகத்துள் செலுத்து; நான் யார்? என்று தீவிரமாக, உறுதியாக விஜாரணைசெய். வீரனைப் போன்று இருந்து கொண்டு விஜாரணை செய். பேடித்தனம் கூடாது. பேடித்தனமிருப்பின் மூடத்தனம் மேலும் தலைவிரித்தாடும். மூடத்தனமாக நடந்து கொள்ளாதே மனமே! வெளியுலகை கண்டு மயங்காதே. உனது பார்வையை உள்ளே செலுத்திவிடு. அங்கே, உனதாத்மாவை காணலாம். அதன் மயமாகி விடுவாயாகுக. அதுவே நீ யாவாய். நீயே அதுவாவாய். மறந்து விடாதே ஜாக்ரதை.

28. ஏ மனமே! விதி, என்தலைவிதி என்று சொல்லி, சோம்பேறியாய்ப் பொழுதைப் போக்காதே. விதியை நீ கடந்து செல்ல உனக்கு ஒருவழி சொல்கிறேன். அதன்படி நீ செய்துவிடு. விதியை நீ கடந்து சென்று விடலாம். நம்பு சொன்னபடி செய். உறுதியாகச் செய்துவிடு. நம்பிக்கை யுடன் இடைவிடாமல் இருந்தபடி இருந்து கொண்டு, ஸதா காலமும் நான் சொல்வதையே செய்து வருவேன் என்று சத்திய சங்கல்பம் செய்து கொண்டு விடுவையாகுக. அதுதான் நான் யார்? என்று உன்னை நீயே கேட்டு வருவ தாகும். விதியை வெல்ல நான் யார்? என்று கேட்பதே

முதல்தரமான வழியாகும். நான் யார்? என்று உனக்குள் கேள். நீ இதுவல்ல, இதுவல்ல என்று உனக்குள்ளிருந்து பதில்வரும். முடிவு தெரியும்வரை விடாது கேட்பாயாயின் முடிவில் நான் தானாகவே இருந்துவரும். அதுவே மஹா மௌனம் என்கிற நிலையுமாகும். அப்பொழுதே நீ விதியை வென்றவனாகி விடுவாய். சும்மாயிராதே. நான் யார்? என்று கேள். விசாரணை செய். விடாது செய்து வா. தானே சும்மாயிருக்கச் செய்து விடும். தலைவிதி மறைந்து போகும். மறந்து விடாதே.

29. ஏ மனமே! உள்ளத்தில் ஒன்றும், புறத்தில் ஒன்றுமாக இராதே. வெளியில் வேண்டாம் என்பதை உனது உள்ளத்தினால் நீ விரும்பினாயானால், பொய்யொழுக்க முடையவனாகி விடுவாய். உள்ளும், புறமும் ஒன்றாகவே கருமத்தைச் செய்யவேண்டும். எதனிடத்திலும் உனக்குப் பற்று மட்டும் இல்லாதிருக்கட்டும். பற்றற்றுப் பணிகளைச் செய்து கொண்டிருப்பவனே, மனவமைதியுடன் இருந்து வர முடியும். மனமே! ஆசைப்படாதே. ஆசையோடு எதையும் செய்யாதே. எதையும் வேண்டாதே. முக்தியையும் வேண் டாதே. பூர்ண திருப்தியுடன் உனக்குண்டான பணிகளை இருந்தச் செய்து கொண்டே இரு. அனைத்தையும் உனக்குள் நீ காண்பாய். மனமே! பற்றற்றுக் கடமைகளைச் செய்யாதவன் சாந்தியை எய்த இயலாதென்பதை மேலும் உனக்குச் சொல்கிறேன். உனக்கு உண்டான பணிகளை இடைவிடாது பற்றற்றுச் செய்து கொண்டே இரு. உனக்குக் கடமை என்று ஒன்றுமே இல்லை என்றாலும், பலனை எதிர் பாராது பற்றற்று, பிறருக்காகவே நீ உறுதியாகக் கர்மத்தைச் சிரத்தாபக்தியுடன் செய்வனத்திருந்தச் செய்வதே ஆகவேண்டு மென்பதை மேலும் உனக்குச் சொல்லிவிட்டேன். உனது உள்ளும், புறமும், ஒன்றாகச்செயல் படட்டும். எதிலும் பற்றுதல் மாத்திரம் உனக்கு இருக்கக்கூடாது. மறந்து விடாதே.

80. ஏ மனமே! உனக்குண்டான நியமத்தை மாற்றி விடாதே. மீறுவாயானால் உனக்குக் கேடுவரும். உனது லக்ஷ்யத்தை மேலும் உறுதிப்படுத்திக்கொள். இலட்சியத்தை நோக்கிப் போய்க் கொண்டேயிரு. பின்னால் பாராதே. குறிக்கோள் தவறுமானால் வழிதவறிவிடும். லக்ஷ்யம் கைகூடாது. மனமே! கங்கா நதியைப்பார்! நதியின் லக்ஷ்யம் கடலுடன் சென்று விழுந்து இரண்டரக் கலப்பதாகும். நதியைப் போல் நீயும் உனது கடமையைச் செய்து வருவாயாகுக. அமைதியானது தானே உனக்குள் உண்டாகிவிடும். நியமத்தை உறுதியாகக் கொண்டு லக்ஷ்யத்தில் மேலும் உனது முழுமனத்தையும் ஊக்கமாகச் செலுத்துவாயாகுக. மறந்து விடாதே.

81. ஏ மனமே! ஒவ்வொருவரும் தனக்குண்டான ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக எதனிடம் ஆசைப் படுகின்றார்களோ, அவைகளை அடைவதன் பொருட்டு இது என்னுடைய கடமையாகுமென்று சொல்லிக்கொண்டு, பேராசையினால் கார்யம் கைகூடும்வரை போராட்டத்தில் இறங்கி விடுகின்றார்கள். மேலும் மனமே! ஆசையாகிய பெருநோயானது எவனைப்பற்றிக்கொண்டுள்ளதோ அவன்தனது ஆசை நிறைவேறும்வரை இடைவிடாமல் இதைச்செய்வது எனது தலையாய கடமையென்று சொல்லிக்கொண்டு, தன்னைத்தானே பிறர் அறியப் புகழ்ந்தும் கொண்டு, தனது முழுமனத்தையும், தான் ஆசை வைத்துள்ளதின் பேரில் இடைவிடாது செலுத்திக்கொண்டு வருவதுடன், தான் ஆசைப்பட்டுள்ள செயலைப் புனிதச்செயல் என்றும், சொல்லிக்கொண்டு பிறர் மெச்சவேண்டும் என்பதற்காக எல்லோரறிய கூறிக்கொண்டு அனைவரையும் ஏமாற்றியும், வஞ்சித்தும், மாயப்பொருள்களைப் பெருமளவு சேகரிக்கின்றனர். மனமே! நீ கடமை என்று சொல்லிக்கொண்டு வேஷம் போடாதே. உனது கடமைகள் அனைத்தையும் தியாகம் செய்து விடுவது ஒன்றுதான் உனது

கடமையாகும். எந்தக் கடமையாயிலும் சரி; அதை நீ வெறுத்து ஒதுக்கி விடுவதே உனது கடமையென்பதை நீ மறவாதிருப்பாயாகுக. கடமை இருக்கிறதென்ற எண்ணம் உனக்கு இருக்கும்வரை நீ கட்டுப்பட்டவனாகி விடுவாய். கடமை, கடமை, என்கிற பெருநோயானது மேலும் பந்த பாசத்தை உறுதியாக்கி, உன்னை உயிருடன் சித்ரவதை செய்து விடுமென்பதையும் சொல்லிவிட்டேன். நீ இவ்வுலகில் எவருக்கும் கடமை பட்டவனல்ல. கடமையிருப்பின் இன்ப, துன்பங்கள் ஆகிய இரு விலங்குகள் உன்னை விரட்டி வந்து உன் கையைப் பற்றிக்கொண்டுவிடும். மறந்து விடாதே. ஜாக்ரதை.

32. ஏ மனமே! நீ உனக்குள்ளிருக்கும் உண்மையைக் கண்டுபிடிக்கவே உன்னைக் கடவுள் சிருஷ்டித்து உள்ளார். உன்னிடமோ கற்பனைகள் கட்டுக்கடங்காமல் மேலும் கங்கை போல் பெருகிக்கொண்டிருக்கிறது. கற்பனை உள்ளவனால் ஆத்மாவைத் தெரிந்து கொள்வது பெரும்பாலும் இயலாத காரியமாகும். கடலின் அலையைப்போல் கற்பனை இருப்பவனின் மனம் எப்படி அமைதியுடனிருக்கும். மனமே! யோஜித்துப்பார். காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்டுள்ள தீபம்போல் அலையாமலிருக்கும் மனமுடையவனுக்குத்தான் தனக்குள்ளிருக்கும் இறைவனை (தனதாத்மாவை)க் கண்டு கொள்ள முடியும். முதலில் நீ உன்னிடமுள்ள எல்லைகடந்த கற்பனைகளை அறவே தியாகம் செய்து விடுவாயாகுக. ஒரு கற்பனை இருப்பின் அது ஒரு நூறு கற்பனைகளை உண்டாக்கும் சக்தி உடையதாகும். கற்பனை இருக்கும்வரை மனவமைதி அரைநிமிஷ நேரமும் இராது. மனமே! உண்மையான அமைதியை உனக்குள் நீ உண்டாக்கிக் கொள்ள வேண்டுமானால், உனது உண்மையை உறுதியாக நீ கண்டுப் பிடித்தாக வேண்டும். முதலில் கற்பனைகளை அறவே தியாகம் செய்து விட்டு நான்யார்? என்று உனக்குள் நீ கேட்டுவா.

உனக்கு அந்நியமான உலகம், உடல், மற்றுமுள்ள அனைத்தையும் நான் இதுவல்ல என்று வெறுத்து ஒதுக்கிவிடு. மேலும் நான் யாரென்று நீ கேட்பாயானால், உனக்கு அந்நியமான "நான்" இராது போகும். அப்பொழுது அந்த நானே அதுவாக ப்ரும்மமாக இருக்கிற உணர்வு அப்பொழுதுதான் உனக்குள் உண்டாகும். மனமே! கற்பனைகளை தியாகம் செய். நான்யார்? என்று விஜாரணைசெய். சாஸ்வதமான அமைதி உன்னிடம் நிலைத்துவிடும். மறவாதே.

33. ஏ மனமே! கற்பனைகளைத் தியாகம் செய்து விடுவாயாகுக. கற்பனை இருக்கும்வரை மனஅமைதி, சாந்தி உண்டாகாது. உண்மையை உள்ளவாறு நீ உனக்குள் அறிந்து கொள்ள வேண்டுமானால், முதலில் நீ செய்ய வேண்டியதாவது கற்பனைகளைத் தியாகம் செய்வதேயாகும். மனமே! கற்பனை செய்யாதே. சும்மா இருந்து பார்த்துக் கொண்டிரு. நீ சுகமாக இருக்கலாமென்பதை, மறந்து விடாதே. மனமே! கற்பனையற்றவனிடம் அவன் ஆன்மா அறிவொளியாய்ப் பிரகாசிக்கும். மனமே! கற்பனைக்கு நீ அடிமையாகி விடாதே. கற்பனை உள்ளவன் சுகமாக இருக்க முடியாது. கற்பனையெனும் பேய் பிடித்தவன் மனம் ஸதா காலமும் அலைந்து கொண்டேதானிருக்கும். கற்பனையிருக்கும் வரை நீ மிகக் கொடியவனின் அடிமையாகவே தான் இருந்தாக வேண்டும். மறந்து விடாதே. மனமே! விழித்துக் கொள். கற்பனையைத் தியாகம் செய்வதொன்றே உனது வழியாக இருக்கட்டும். மறந்து விடாதே. ஜாக்ரதையாக இரு. கற்பனை உள்ளவனுக்கு கடவுளாலும் உதவி புரிய முடியாது. கற்பனை உள்ளவன் தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டு சித்ரவதைப்பட்டு, இறந்தும், பிறந்தும், கஷ்டப் படுகிறான். மறந்து விடாதே. ஜாக்ரதை.

34. ஏ மனமே! உனக்குள்ளிருக்கும் கடவுளின் (உனதாத்மாவின்) வெளித் தோற்றமே இப்பிரபஞ்சமனைத்து

மாகுமென்பதை நீ மறந்து விடாதே. மனமே! எதைக் கண்டாலும் அவைகளிடம் நீ ஆசை வைத்து விடுவதற்குக் காரணம் தெரியுமா உனக்கு? சொல்கிறேன் கேள். மனமே! அதுதான் உனதாத்மாவின் செயலாகும். உனதாத்மாவாகிய கடவுள் எங்கும் நிறைந்து, அனைத்திற்குள்ளும் வியாபித்திருப்பதால்தான் நீ எதையும் ஈர்த்து விடுகிறாய். மனமே! ஜீவகோடிகள் ஒன்றை ஒன்று கண்டு ஆசைப்படுவதற்குக் காரணம் எது என்பதை நீ புரிந்து கொண்டாயா? இதைத்தான் பாமரனும் புரிந்து கொள்ளும்படி அன்பு, அன்பு என்கிறார்கள். உள்ளன்பு, மெய்யன்பு என்பதெல்லாம் எதுவென்று தெரிந்து கொண்டாயா? மனமே! உலகிலுள்ள ஜீவராசிகளனைத்திற்கும் கடவுளாகிய உனதாத்மாவே இருந்து வருவதால்தான் நீ பிறரிடம் அன்பு செலுத்துகிறாய். நாய் செய்து வரும் அன்பைப்பார். மாடு, கன்றுகள், காட்டி வரும் அன்பைப்பார். கொடிய மிருகங்களிடம் நீ அன்பு செலுத்துவாயானால், அவைகளும் அன்புடன் பழகுவதைப் பார். அன்பே சிவம், சிவமே அன்பாகும். அறிவிலிகள் இரண்டையும் வேறுவேறாகக் காண்கிறார்கள். நல்லறிவுள்ளவனே! கடவுளே உனக்குள் உனது ஆன்மாவாக இருந்து வருகிறார் கடவுள் உனக்குள் அன்பு மயமாகவும், இருந்து வருகிறார். அதனால் தான் எல்லோரிடமும் அன்பு செலுத்துகிறாய் பிறரும் உன்னிடம் அன்பு செலுத்துகிறார்கள். மனமே! உண்மையான அன்பு, உண்மையான கடவுள், உண்மையான உனதாத்மா எது என்பதை நீ புரிந்து கொண்டு விட்டாயா? மனமே! வெளியில் காண்பவைகளனைத்தும் உனது ஆன்மாக்களேயாகும். நீ பிறரை வெறுத்தால் உன்னையே வெறுத்துக் கொண்டதாகும். அன்பு செலுத்தினால், உனக்கே நீ செய்து கொண்டாலும் நல்லதும், கெட்டதும், அனைத்தையுமே உன்னைச் சாரும் மறவாதே. சத்தியத்தை நம்பு. கடவுளை நம்பு. உனதாத்மாவை நம்பு.

---

அதிஷ்டானம், புதுக்கோட்டை.

அன்புடனிரு. அன்பைச் செலுத்து அன்பு மயமாகி விடு. மறந்து விடாதே. ஜாக்ரதை.

35. ஏ மனமே! நீ கடவுளை உனக்குள் உனதாத்மாவாகக் கண்டு கொண்டு விடுவையானால், உனது உள்ளும், புறமும், கடவுளைத் தவிர வேறொன்றை நீ காண முடியாது. இருப்பது (கடவுளாகிய உனதாத்மா) ஒன்றுதான் என்றும், அதுவே உனக்குள் உனதாத்மாவாக இருக்கிறதென்பதையும், அதைக் கடவுள் என்று நீ போற்றி வந்ததையும், துவக்கத்தில், நடுவில், முடிவில் அதுவொன்றே ஸதாகாலமும் உனது மயமாகவே இருந்து வருவதையும், நீ உறுதியாக உணர்ந்து கொண்டு விடுவையானால் இவ்வுலகமென்று ஒன்று இருப்பதே உனக்குச் சொப்பனமாகி விடும். அங்கிங்கெனாதபடி எங்கும் உனதாத்மாவைத் தவிர நீ வேறொன்றையும் காண முடியாது. மனமே! முதலில் உனக்கு அந்நியமான அனைத்தையும் மறந்து விடு. எதனிடமும் பற்று வைத்து விடாதே. புறப்பற்று புற்று நோய்க்குச் சமமாகும். அகத்தில் உன்னையே நீ பற்றிக் கொண்டு விடு. அகத்தில் கடவுள், உனதாத்மாவாகவே இருக்கிறார். சத்தியமாக நம்பி விடு. உனக்குள்ளிருக்கும் கடவுளைச் சிக்கெனப் பற்றிக் கொண்டு விடுவாயேல், கடவுள் உன்னைப் பற்றிக் கொண்டு விடுவான். பிறகு உனக்கு ஒரு பற்றுமில்லாது போகும். மனமே! கடவுள் உன்னைப் பற்றிக் கொள்ள முதலில் உனக்குள் உள்ள கடவுளை நீ பற்றிக் கொண்டு விடுவையாகுக. மனமே! தீயைப் பற்றிக் கொண்டவிறகு முழுவதும் தீயாகவே மாறி விடுவதைப் போல் கடவுளைப் பற்றிக் கொண்ட நீயும் கடவுளாகவே மாறி விடுவாய். நம்பு. மறவாதே.

36. ஏ மனமே! நீ காணும் இந்த பிரபஞ்சமே உனக்கு நல்லறிவைத் தரும் புஸ்தகமாகும். நீ முன்னேற வேண்டுமென்றால் பிரபஞ்சத்தைப்பார். பிரபஞ்சத்திலுள்ள கடவுளுடன்

பழகு. ஸத்வ, ரஜஸ், தமோ குணம் உள்ளவர்களுடன் நீ பழகுவதினாலும், இயற்கையன்னை விரித்துள்ள உலகைப் பார்பதாலும் அனைத்திடமும் உள்ள நல்லவைகளை நீ நன்கு திறம்பட படித்துக் கொள்ளவதாலும், முடிவற்ற அறிவுக் களஞ்சியமாகி விடுவாய். மனமே! உனக்கு வேண்டுவதை யெல்லாம் இவ்வுலகிலிருந்து நீ படித்துக் கொள்ளலாம். எதையும் ஊடுருவிப் பார்த்து, அதன் உண்மையை (சத்யத்தைக்) கண்டு கொள். எதையும் மேலெழுந்தவாறு கண்டு, இது தவறுயென்று கூறி விடாதே. முடிவைத் தெரிந்து கொள்ளாமல் தவறு கூறுபவன் முட்டாளாவான். நீ காண்பதின் பிறந்த இடத்தை உறுதியாக விஜாரணை செய்து பார். மனமே! உனது அகத்துள் மாசு படிந்துள்ள வரையில் உண்மையை நீ காண முடியாது. ஒரு ஸ்படிகத்தின் பின்னால் சிவப்போ மற்றும் ஏதாவது நிறமுள்ள புஷ்பத்தை வைத்தால் ஸ்படிகம் புஷ்பத்தின் நிறத்தையே காட்டும். ஆனால் உண்மையில் ஸ்படிகம் நிறமற்றதாகும். என்பதை நீ மறந்து விடாதே. ஸ்படிகம் போன்றது உனதாத்மா. நிறமற்றது. குணமற்றது. ஜாதியற்றது. எதன்முன் ஸ்படிகம் இருக்கிறதோ அதன் மயமாகியிருப்பதைக் கண்டு கொண்டு, நீ உண்மையை உணர்ந்து கொண்டு, நல்லறிவுடன் இருப்பாயாகுக. மறந்து விடாதே.

37. ஏ மனமே! கடுகளவு சுயநலவிருப்பம் உனக்குள் ளிருக்கு மானால், அது காலத்தில் மாபெரும் பூதாகாரமாக வடிவெடுத்து, உன்னைப் பந்தத்திலாழ்த்தி விடுவதுடன் உலகப்பற்று என்கிற விலங்கை உன்கைகள், கால்களில் போட்டு, இறுகப்பூட்டியும் விடுமென்பதையும் நீ மறந்து விடாதே. இச்சையிருக்குமளவு இடைவிடாத, துன்பமும், துக்கமுமுனக்கு வந்தே தீருமென்பதை நம்புவாயாகுக. இச்சை அணுவிருப்பினும், மாபெரும் பந்தமுண்டாகி விடும்: இச்சை யற்றவனே, சுயநலமற்றிருக்க முடியும். நீ சுயநலமற்றிருக்க

வேண்டுமானால், முதலில் உனக்குள்ளிருந்துவரும் இச்சை யனைத்தையும், அறவே தியாகம் செய்து விடவேண்டும் மென்பதை உனக்கு ஞாபகப் படுத்திவிட்டேன். இச்சையே உனக்குச் சத்ருவாகும். இச்சையற்றவன் சிவஸ்வருபமாகி (ப்ரம்மஸ்வருபம்) விடுகிறான். உன்னை சுயநலமுடையவனாக ஆக்குவது இச்சையின் வேலையாகும். மனமே! சுயநலவிருப்பம் அணுவளவும் உனக்குளில்லாதவாறு உன்னை நீ ஆக்கிக் கொண்டு விட்டு இடைவிடாது தன்னலம் கருதாது உனக்கு உண்டான பணிகளைத் திருந்தச் செய்து வருவாயானால், முக்தி யானது தானே வந்து விடும். முக்தியைவேண்டி மற்றவைகளை செய்வதில் தவறினால் கஷ்டம் வரும். மனமே! நீ சுயநல மற்றுச் செய்து வரும் கர்மங்களின் பயனை இறைவனுக்கற்பணித்து விட்டு எதனிடத்தும் இச்சையற்று, பற்று நீங்கி, இருந்தபடி இருந்து வருவாயானால் உனக்குள் இடை விடாத சாந்தமும், ஆனந்தமும், கடலலைபோல் ஆகிவிடுமென்பதையும் நீ மறவாதிருப்பாயாகுக. மனமே! சுயநலமற்றிருப்பதே (இருப்ப வனே) பரிசுத்தனுவான். இச்சையிருப்பவன் தன்னைத்தானே கெடுத்துக் கொண்டு நரகில் புகுந்து விடுகிறானென்பதை மறவாதே. பற்றற்ற பரிசுத்தநிலை உனக்கு உண்டாக வேண்டுமானால் மோக்ஷத்திடமுள்ள இச்சையையும், உன்னிடம் இருந்து விடக்கூடாது. மனமே! நீ இச்சையற்று, இடைவிடாத பேரின்பத்தை உனக்குச் சொந்தமாக்கிக் கொண்டு விடுவையாகுக.

38. ஏ மனமே! உனது (நீ செய்ய வேண்டியது) அனுஷ்டானம் எது தெரியுமா? சொல்கிறேன் கேள். சுயநல மற்றிருப்பதொன்று. மற்றது கடுகளவு இச்சையின்றி, பணிகளில் வரும் பலனையும் தியாகம் செய்து விடுவது. எதனி டத்திலிருந்தும் (இறைவனிடத்திலிருந்தும்) பலனை அணு வளவும் எதிர்பாராது, நல்லவனாகவே இருந்து கொண்டு, நன்மை யொன்றையே மூச்சுள்ளவரை செய்து கொண்டிருப்பது

உனது மூன்ருவது முக்கியமான அனுஷ்டானமாகி விட வேண்டும். மனமே! மேல்கண்ட மூன்று அனுஷ்டானத்தையும் இம்மையில் உறுதியாகச் செய்து விடுவேன் என்று நீ சத்திய சங்கல்பம் செய்து கொண்டு விடுவாயேல், அது உனக்குள் இருந்து வரும் கடவுளை, சத்தியத்தை ஆனந்த மயமான உனதாத்மாவை உனக்குள் தானே முன் வந்து உணர்த்தி, அறிவித்து விடும் என்பதில் நீ சந்தேகப்படவேண்டாம். மனமே! உன்னைத்திருத்திக் கொள்ள மேலான நல்லெண்ணத்தை உண்டாக்கிக் கொள்வாயாகுக. நீ திருந்துவதற்காகவே உனக் குண்டான அனுஷ்டானத்தைச் சொன்னேம். பற்றை உண்டு பண்ணும் எதனிடமும் நம்பிக்கை வைத்து விடாதே. உன்னை நல்லவனுக்கும் அனுஷ்டானத்தை, நீ உறுதியாக முதலில் பற்றிவிடுவாயேல் அதுவே உன்னை உனதகத்தில் உண்மையை அடையும் படிசெய்து விடுமென்பதை நீ சொப்பனத்திலும் மறவாதிருப்பாயாகுக. மனமே! உலகில் மேன் மக்கள் எனப்படு பவர்கள் முதலில் தன்னைத் திருத்திக் கொண்டவர்களா வார்கள். பிறகுதான் பயின்ற, நல்லதெனக் கண்ட கொள்கையை, தன்னைத் தேடிவரும் மற்றவர்களுக்கும், உதவி உள்ளார்கள் என்பதை நீ மறவதே. மனமே! முதலில் தன்னைத் திருத்திக் கொண்டவர்களின், மேலான நற்பணிகளே, உலகிற்கு நலம் செய்யும், உத்தமர்களையும் திருத்துமென்பதை நீ நம்புவாயாகுக.

39. ஏ மனமே! கடமை, கடமை, என்று சொல்லி, உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு வருகின்ருயே? இது உனக்கு நல்லதையுண்டு பண்ணுமா? சொல். உனது கடமையெது என்பதை நீ முதலில் முழுமனதுடன் உறுதியாகத் தெரிந்து கொள் பிறகு அந்தக் கடமைகளைச் சரிவரச் செய்துவிடு. மனமே! உனது கடமை இன்னது என்பதையே நீ தெரிந்து கொள்ளாது, கடமை, கடமை என்று சொல்லிக் கொண்டு, உனக்கு சம்பந்தமில்லாதனவற்றை நீ செய்வது வருவதனால்

உனது கடமையைச் செய்தவனாக மாட்டாய். மனமே! உனக்கு எது கடமைஎன்பதை மனசாட்சியைக் கேள் முதலில். உனது மனசாட்சி ஒன்றே உனது கடமையை, ஒளிக்காமல், உறுதியாகக் கூறும், மனமே! உனது மனசாட்சி சொல்கிறபடி நீ நடப்பதே உனது மேலான நலத்திற்கு உதவக்கூடிய கடமையாகுமென்பதை நீ மறந்து விடாதே. மனமே! உனக்கு மேலும் சொல்லி விடுகிறேன். கேள். உன்னைக் கடவுளிடம் கடவுளோடு இரண்டறக் கலக்கும்படி செய்யும் எந்தக் கருமம் ஆனாலும் அதுவே, அதைச் செய்வதே, உனது முதல்தரமான கடமையாகும். மற்றவை அனைத்தும் உன் கண்ணைக் கட்டி (மறைத்து) வேறு வழியில் கொண்டு சென்று விடுமென்பதை நீ மறந்து விடாதே. ஜாக்ரதை.

40. ஏ மனமே! உனது முன்னேற்றத்திற்குண்டான கடமைகளைச்சொல்கிறேன். கேள். உலகிலுள்ள உயிர்கள் அனைத்தினிடத்திலும் கடவுளே நீ காணும் உயிருக்குயிராக இருந்து வருகிறார். ஆதலால் நீ உயிர்கள் அனைத்திடமும், முதலில் காணவேண்டியது உனது கடமை, கடவுளைத்தான் என்பதை நீ மறந்து விடாதே, நீ எந்த உயிர்க்கும் துன்பம் உண்டாக்குவாயானால், அது கடவுளை நீ துன்புறுத்தியவனாவாய். மனமே! நீ எவ்வுயிர்களுக்கும் துன்பம் விளைவித்திடல் கூடாது. மேலும் உனது முன்னேற்றத்திற்காக நீ செய்ய வேண்டிய மிகமுக்கியமான பணியாவது என்னவென்றால் நீ காணும் அனைத்துயிர்களுக்கும் நலம் செய்வதொன்றாகும். மனமே! உன்னால் நலம் செய்யமுடியாது போனாலும் பரவாயில்லை. எவ்வுயிர்களுக்கும் நீ துன்பத்தைத் தந்து விடாதே. மனமே! ஒரு உயிருக்கு நீ துன்பம் தருவாயானால், அது கடவுளுக்குச் செய்த அபசாரமாகும். ஒருஉயிருக்கு நலம் செய்து விடுவாயால், அது கடவுளுக்குச் செய்த மேலான கைங்கர்யம் பூஜையாகு மென்பதை நீ மறவாதே. மனமே! கடவுளில்லாத இடமே இல்லை. நீ எதை நினைக்கின்றாயோ,

அதன் மயமாக கடவுள் தோன்றுகிறார். எவருக்கும் தீங்கு நினைத்து விடாதே. எவரையும் வெறுத்து விடாதே. நல்லதை நினை நல்லதைச் செய்து விடு. இதுவே உனது கடமையாகும். மறவாதே! மறவாதே! ஜாக்ரதை.

41. ஏ மனமே! கடவுள் உனக்காக ஸ்வர்க்கத்தை மாத்திரமே சிருஷ்டி செய்து வைத்துள்ளார். நீயோ (கடவுளை) அதை மறந்து உனக்குள் நீயே நரகத்தைச் சிருஷ்டி செய்து கொண்டு விட்டாய். மதி கெட்டவனே கெட்ட சிந்தனைகளாலும். கெட்ட செய்கைகளாலும், மேலும் கெட்ட சேர்க்கையினால் உன்னை நீயே கெடுத்துக்கொண்டு விட்டாய். இதற்கு கடவுள் என்ன செய்ய முடியும். கண் கெட்டபிறகு சூர்ய நமஸ்காரம் செய்பவனைப் போல் இருக்கின்றது உனது நிலை மனமே! முதலில் உன்னிடமுள்ள குறைகளை அறவே போக்கிக் கொள். உனது மனம், வாக்கு, காயங்களினால் கடுகளவும் கெடுதல் செய்யாதிருப்பாயாக கண்ணைக்கட்டிக்கொண்டு வெளிச்சம் தெரியவில்லையே என்று கதறுவதால் என்ன ப்ரயோஜனம் உன் கண்ணை உன் கைகளே மறைத்துக் கொண்டிருக்கின்றன. முதலில் கையைத் தைரியமாக எடுத்து விடு. பிரகாசம் நன்றாக உன் கண்களுக்குத் தெரிய வரும். முதலில் நீ செய்ய வேண்டியது உன்னை நீயே திருத்திக் கொள்வதேயாகும். மனமே! உன்னிடமுள்ள குறையை நீ போக்கிக் கொள்ளாத வரை உன் தலையில் நீயே மண்ணைப் போட்டுக் கொண்டவனாவாய். தனக்குத்தானே நரகத்தையும், உண்டாக்கிக் கொண்ட அறிவிலியுமாவாய். மறந்து விடாதே. கடவுள் உனக்காக ஸ்வர்க்கத்தைத்தான் படைத்தார். மறந்து விடாதே. உன்னை நீ திருத்திக்கொள். ஜாக்ரதை.

42. ஏ மனமே! பகுத்தறிவில்லாத, பாம்பைப்பார். தனது சட்டையை கழற்றிவிட்டவுடன், அந்த சட்டையைத் திரும்பியும் பார்ப்பதில்லை. நீயோ அநித்தியமானதும், சோக,

மோகங்களை உண்டு பண்ணுவதும், சதாகாலமும் உனக்குத் துக்கத்தையே தந்து கொண்டிருப்பதுமான பொய்ப் பொருள்களையெல்லாம் இது எனக்குச் சொந்தம், பரம்பரை சொத்து இது, இதை வேருெருவராவது தனது என நினைத்தால் அவர்களைச் சும்மாவிடமாட்டேன். எனது உயிர் போனுல் அவர்களின் உயிரை போக்கி விடுவேன். ஜாக்கிரதை என்றும், பறைசாற்றிக் கொண்டும் நீ இருந்து வருகிருய் மனமே! இது உனக்கு வெட்கமாக இல்லையா? துளிக்கூட பொய்ப்பொருள்களிடம் உனக்கு அருவருப்பு ஏன் ஏற்பட வில்லை. மனமே! சத்தியம் உனக்குள் உனதாத்மாவாக இருந்து வருவதை நீ ஏன் மறந்து விட்டாய். கணத்தில் அழிந்து போகும் பாம்புச்சட்டை போன்றதினிடம் நீ மேலும் மேலும் பற்று வைத்திருப்பது அல்லாமல் இவைகள் நித்ய-மானதென்றும் நம்பி உனது நல்வாழ்க்கையை நீயே கெடுத்துக் கொண்டு விடுகிருயே? மனமே! நான் நான், எனது எனது, என்னுடையது இது, இது என்னுடையது என்ற எண்ணம் உனக்கிருக்கும் வரைத் துன்பம் உன்னைவிடாது பற்றிக் கொண்டிருக்கு மென்பதை உனக்குச் சொல்லி விட்டேன். துன்பத்தின் பிறப்பிடம் நான், எனது, என்கிற எண்ணமேயாகும். மனமே! இவ்வுலகில் நீ தாமரை இலை மேலுள்ள தண்ணீர் போல் இருந்து வருவாயாகுக. எனது, எனது, என்னுடையது என்பதை விடுத்து பற்றற்றவனுக இருந்து கொண்டு, கழற்றியசட்டையைப் பாம்பு திரும்பி பாராததைப்போல் சென்றதை மறந்து, பற்றின்றிப் பணி புரிந்து வருவாயாகுக. மறந்து விடாதே.

43. ஏ மனமே! நீ பிறர் உதவியை எதற்காகக் கோருகிருய்? கடவுளை விடப் பெரியவன் எவ்வுலகிலும் எப்படி இருக்க முடியும்? சொல். எங்கும் வியாபித்துள்ள இறைவன் உன்னுடன், உண்மயமாகவே, (உனதாத்மாவாகவே) இருந்து வரும்போது, பிறர் உதவியை நீ நாடுவதில் உனக்கு வெட்க

மில்லையா? சொல் மனமே! உத்தமிகளானபதிவ்ருதைகளைப் போல், அவர்கள் எண்ணத்தில், அவர்கள் உள்ளத்தில் அவரவர்களுடைய கணவன் ஒருவனேதான் இருந்து வருகிறான். பதிவ்ருதைகளுக்குப்பிறர் உதவி தேவையேயில்லை அவர்களுக்குத் தேவையுள்ளது அவரவர்களுடைய கண்கண்ட தெய்வமான கணவனேதான். பதிவ்ருதைகள் செய்து விட்ட வைகளைப்பார். அவர்களுடைய உடல், பொருள், அவைக ளனைத்தும் தனது பதியாகிய கடவுளுக்கு அர்பணம் செய்து விடுகிறார்கள். பதிவ்ருதைகளிடம் தன்னுடையதென்று சொல் வதற்கு அணுவளவும் வேறு சாதனமில்லை. பதிவ்ருதைகள் உயிருடனிருப்பதும், அவர்களுடைய அனைத்தும் தனது பதியின் நலமொன்றிற்காகவேதான் என்பது பதிவ்ருதை களின் சத்ய சங்கல்பமாகும். மனமே! நீயோ, நல்ல பகுத்தறி வுள்ள, த்ருடகாத்திரமான, ஆண்பிள்ளை. உனக்குள்ளேயே கடவுள் இடைவிடாமல் குடியிருந்து வருகிறார். உன்னைத் திக்குகள் தோறும் காத்து ரக்ஷிக்க இறைவன் கங்கணம் கட்டிக்கொண்டு, உன்னை சிருஷ்டித்துள்ளான். மனமே! கடவுள் இப்படியெல்லாம் உனக்கு அருள் பாலித்திருக்கும் போது, நீ பிறர் உதவியை எதிர்பார்ப்பது நன்றியுள்ளவர்களுடைய செய்கை இல்லை. மனமே! ஒருபதிவ்ருதையாகிய பெண்பிள்ளை தனது கணவனிடம் கொண்டுள்ள உறுதி கூட ஆண்பிள்ளை ஆகிய உன்னிடம் கடுகளவு மில்லையே பாடசாலையை அறியாதபெண் தனது பதிவ்ருதாமகிமையால் சூரியபகவானை உதயமாகாதவாறு செய்து விட்டாளே? இவைகளையெல்லாம் நீ நினைக்கும்போது, உனக்கு சூடு. சுரணை, வெட்கம், மானம் இல்லையா? நீயும் ஒரு ஆண்பிள்ளைதானா? சொல். மனமே! ஆணும், பெண்ணுமற்றவனோ நீ. மனமே! இனியாவது நான் சொல்வதைக்கேள். நீ கடவுளிடமிருந்து வெளி வந்துள்ளாய் கடவுள் உன் மயமாகவே இருக்கிறார். உனக்குள்

உனதாத்மாவாக இருந்துவரும் கடவுளைச் சத்தியமா உனது ஆத்மாவாக உறுதியாக நம்பிவிடு. பிறரை நம்பி விடாதே. உனக்குள் உள்ள கடவுளாகிய சத்தியமாக உனதாத்மாவையே உறுதியாக நம்பிவிடுவாயாகுக.

44. ஏ மனமே! நீ உண்மையாக, உறுதியாக. முழு மனத்துடன் சுயநலங்கருதாது, அனைத்துயிர்களிடமும் அன்புச் செலுத்துவாயாகுக. மனமே! சுயநலம் கருதி எதனிடமாவது அன்புச் செலுத்தி வருவாயானால், அதுமிகக்கொடிய துன்பமாகவே முடிந்து உன் உயிரை, உள்ளத்தை, உடலைச் சித்ரவதை செய்து கொண்டே இருக்குமென்பதை நீ மறந்து விடாதே.மனமே! அக்ஞானிகள் அழியக் கூடியதினிடத்திலும் ஸதாகாலமும் துக்கத்தைக் கொடுக்கக் கூடியதினிடத்திலும், ஆசை வைத்து, அன்பு செலுத்தி, இன்பம் வரப் போவதாக நினைத்து, ஸதாகாலமும் இடைவிடாத துன்பத்தையே அதனிடமிருந்து பெற்று வருகின்றனர் என்பதை எல்லாம் நீ நன்கறிவாய் மனமே, நீ ஞானி மாதிரி நடித்தாலோ, பேசினாலோ,பழகினாலோ போதாது.உனக்குள் உண்மையான அன்பு, அமைதி, சாந்தி, உண்டாக வேண்டுமென்றால் எதனிடத்திலும் நீ ஆசையுடன் அன்பு செலுத்தாதே. சுயநலத்துடன், அதனிடம் ஆசை வைத்து அன்புச் செலுத்து வாயானால் நீ கடுமையான கொடிய துக்கத்திற்கு ஆளாகியே தீர வேண்டும். சுய நலமானது பல்லாயிரம் பிறவிகளையும், உண்டு பண்ணும் சக்தி வாய்ந்ததாகும். என்பதை நீ மறந்து விடாதே. மனமே! சுயநலத்தோடு கூடிய ஸங்கல்பத்தை அன்பை, ஆசையை, கடவுளிடத்திலும் கூட நீ வைக்கலாகா தென்பதை உனக்கு மேலும் சொல்லி விட்டேன் மறந்து விடாதே. ஜாக்ரதை.

45. ஏ மனமே! கடவுளை நீ வேண்டுகிறாய். போற்று கிறாய். கடவுளுக்கு நீ பூஜை, ஜப, ஹோம, ஸமாராதனைகள்,

தானதர்மங்கள் செய்வதெல்லாம் வழிபடுகிருய். அனைத்தும் உனது சுயநலத்திற்காக இருப்பின் நீ ஏமார்ந்து விடுவாய். ஜாக்ரதை. மனமே! நீ எந்தக் கடவுளை வெளியில் வழிபடுகின்ருயோ, அந்தக் கடவுள்தான் உனக்குள், உனது உயிருக்குள் உயிராகவும், உனதாத்மாகவும் இருந்து வருகிருர். அப்படியிருக்க உனது சுயநலத்தின் விருப்பம் பூர்த்தியாவதற்காக வெளியிலுள்ள கடவுளை நீ உயிரை விட்டு வழிபட்டு உனது சுயநலத்தைப் பூர்த்தி செய்து கொண்டு விடலாமென நீ நம்புவதானது உனது முட்டாள் தனத்தை(அக்ஞானத்தை) தான் காட்டுகிறது. மனமே! கடவுளை நீ ஏமாற்றி விட முடியாது. எங்கும் நிறைந்துள்ள கடவுள் உனக்குள்ளும் இருக்கின்ருர். அவர் அறியாதது ஒன்றுமில்லை. உன்னைப் படைத்தவனுக்கு உனது விஷமம் தெரியாமலிராது. உனது பித்தலாட்டம், சூதுவாதுகள், காமக்ரோதங்களை மறைத்துக் கொண்டு, நீ நல்லவன் போல் பிறரறிய நடித்துப் போடும் பூஜை மற்றவைகள் செல்லா காசுக்கும் உதவாது போய்விடும் மனமே! கடவுளிடம் உனக்குள்ளிருக்கும் கடவுளிடம், நீ மூடி மறைத்து விடமுடியாது. சுயநலத்தை விடு. ஆசைகளைத் தியாகம் செய்து விட்டு, உயிர்களிடம் அன்பு செலுத்துவாயாக மறந்து விடாதே. மறப்பாயாளுல் உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு விடுவாய் ஜாக்ரதை.

46. ஏ மனமே! கடமை, கடமை என்று சொல்லி உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டு விடாதே. நீ எந்த நிலையில் இருக்கின்ருய்? என்பதை முதலில் நன்கு தெரிந்து கொண்டு விடுவாயாகுக. மனமே! பிரும்மச்சாரி, கிரஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸந்நியாசி, என்று மக்கள் நலத்திற்காகவும், கடமைகளைச் சரிவரச் செய்வதற்காகவும், சட்டத்தை (சாஸ்திரத்தை) ஏற்படுத்தியிருக்கிருர்கள். மேற்கண்ட நான்கு ஆஸ்ரமங்களில் நீ எதைப் பின் பற்றியுள்ளாய்

என்பதை முதலில் நீ நன்குணர்ந்து கொள்ள வேண்டும். மேற் கண்ட நான்கினுள் ஒரு ஆஸ்ரமத்தைக் கொண்டவன் அதன் கொள்கைப்படி நடக்காதவன் எவனுக இருப்பினும் அவன் தன்னைத்தானே கெடுத்துக் கொண்டவனுகி விடுகிறுன் என்பதை நீ மறந்து விடலாகாது. மனமே! உனக்கு கொள்கையை விட்டு, நீ மாருமல், அதை வெறுக்காமல் இருப்பது உனது முதற்கடமையாகும். உனது முன்னேற்றத் திற்காக ஏற்பட்டுள்ள கடமைகளில் முதலில் உனக்கு சுய நம்பிக்கை இடைவிடாமலிருந்து வரவேண்டும். தன்னம்பிக்கை இல்லாதவன் எவனுக இருப்பினும் அவன் கடவுளிடமும் உறுதியாகநம்பிக்கை வைக்கமாட்டான் என்பதை நீமறவாதே. எவன் எந்தக் கொள்கையைப் பின்பற்றுகிறுனே, அவன் கொள்கைக்கு மாறுபட்ட விரோதமான கொள்கைகளை (செய்கைகளை) எதிர்க்க வேண்டி, சந்தர்பத்தில் உறுதியாக ஊக்கமாக, எதிர்ப்பதும் முக்கியமான முதல்தரமான கடமை யாகுமென்பதையும் உனக்குச் சொல்லி விட்டேன். மறந்து விடாதே. தாட்சண்யம் இருப்பின், கோழைத்தனம் உனக்கு வருமாஞல் உனது கடமை, ஒழுக்கநிலை கெட்டுப்போகும். மனமே! கோழைத்தனத்தினுலும், பலஹீனத்தாலும் எதிர்க்க வேண்டியதை எதிர்க்காவிடின் நீ ஒரு பேடியாகி விடுவதுடன் உன்னை நீயே கெடுத்துக்கொண்டு விட்டவனுமாகி விடுவாய். மறவாதிருப்பாயாகுக மனமே! நீ எதைச் செய்யப்போகிறுயோ அதற்குண்டான கடமைகளை முதலில் சரிவரத் தெரிந்து கொண்டு, பற்றற்றவனுய், கடமைகளைச் சரிவர செய்வதில் உயிரையும் தியாகம் செய்ய சித்தமாக இருப்பாயாகுக. மறவாதே.

47. ஏ மனமே! பலவீனனும், சோம்பேறியுமானவன் தன்னை தனக்குள் உணர முடியாத பாவியாகி விடுவன். பேடிகள் தனதாத்மாவை அறிந்துகொள்ள மாட்டார்கள். ஆசையும், அச்சமும், உள்ளவன் ப்ரும்மவிசாரம் செய்ய

அருகலதையற்றவன் என்பதை நீ மறந்து விடாதே. போலித் தனத்தினாலும், நடிப்பினாலும், உண்மையை உள்ளத்தில் உணர்ந்து கொண்டு விடமுடியாது. மனமே! நீ மேலான நிலையை எய்த வேண்டுமானால், உனக்குள் தீங்கு செய்யும் இந்திரியங்களை நீ உறுதியாக எதிர்த்துத்தான் ஆகவேண்டும். மனமே! முக்திக்கு வழியை மாத்திரம் நீ கேட்டு வைத்துக் கொண்டிருந்தால் போதாது. தனது ஸ்வதர்மமாகிய கர்மத்தைச் செய்து முடிக்கத் தெரியாத கர்மயோகி தன்னையு மறியாது பாவத்தையே செய்து குவித்துக் கொண்டிருப்பன். மனமே! கடவுளை அறிவது(தன்னைத் தான் அறிவது) என்றால் அது சோம்பேறியின் வேலை என்று நீ நினைத்தாயா? சுறுசுறுப் புடன் ஊக்கமாக, உறுதியாக, கர்மாக்களைச் செய்யத் தெரியாத மூடனிருப்பதை விட சாவதே நல்லதென்பதை நீ மறந்து விடாதே. மனமே! கடவுளின் கட்டளையை நிறை வேற்றவே வந்துள்ள ஒவ்வொருவனும் சோம்பேறியாய் பூமிக்குப் பாரமாய் இருந்துவர கடவுள் சம்மதிக்கமாட்டார் என்பதையும் உனக்குச் சொல்லிவிட்டேன். மனமே! உனது உள்ளும், புறமும் உன்னைக் கெடுக்கும் தீமைகளை முதலில் நீ வெல்லாதவரை கடவுளைப் பற்றி நீ பேசும் பேச்செல்லாம் உதவாது போகுமென்பதை மறந்துவிடாதே. சோம்பேறிக்கும் பலஹீனனுக்கும், கர்மத்தைச் செய்ய முடியாது. மனமே! நீ சதாகாலமும் விழிப்புடன் இருந்து கொண்டு செய்வனத் திருந்தச் செய்து வருவாயாகுக. மறவாதே.

48. ஏ மனமே! நீ சதாகாலமும் குழம்பிக் கொண்டிருப் பதற்குக் காரணம் இன்னுமா உனக்குப் புரியவில்லை.? உனது குழப்பத்திற்குக் காரணத்தை கூறி விடுகிறேன் கேள். மனமே! எதையும் ஸரியாகப் புரிந்து கொள்ளாமல், தீர விசாரணை செய்யாமல், அனைத்தும் தெரிந்தவனைப் போல் நீ பேசி வருவதினால் தான் உனக்குக் குழப்பம் உண்டாகி வருகிறது. ஒன்றையும் உறுதியாகத் தெரிந்து கொள்ளாத பேச்சினால்

என்ன பிரயோஜனம்; தனக்கும், பிறருக்கும் பிரயோஜன மற்றத்தைச் செய்து வருபவனை என்ன பெயர் சொல்லி அழைப்பது.? முட்டாளே! குடம் நிறைந்து விட்டால் சப்தம் அடங்கி விடும். அரை குறையாக இருப்பின் சப்தம் வந்து கொண்டேதான் இருக்கும். தன்னை உணர்ந்து கொண்ட ஞானிகளைப்பார். பேசவா செய்கிறார்கள்.? அவர்களுக்கு உபன்யாசமும், உபதேசமும் தேவையில்லை. அவர்கள் இருப்பதே, பார்ப்பதே, நடப்பதே, செய்வத த்துமே உபன்யாஸமும், உபதேசமும் ஆகி விடுகின்றன. மனமே! குழம்பாதே. நீ குழம்புவதுடன் மற்றவற்றையும் குழப்பாதே; எதை நீ வழிபடுகிறாயோ அந்த ஒன்றை உறுதியாகப் பற்றி அதன் உண்மையை, சத்தியத்தை நன்கு விசாரணை செய்து பார்த்து உனக்குள், நல்ல முடிவான உறுதியான பூரணப் பொருளே, உனதாத்மாவே அதுதான். நானே அதுவாகக் இருக்கிறேன், அதுவே நானாக இருக்கிறேன் என்பதை உறுதியாக உண்மையாக உனது அனுபவத்தில் கொண்டு வந்து விடுவையானால் உனக்குண்டான குழப்பம் அகன்று விடும். படிப்போ, பேச்சோ, எழுத்தோ, தியாகமற்ற செய்கைகள் எதுவானாலும், அது உனக்குக் குழப்பத்தையே உண்டு பண்ணும் மனமே! அனைத்தையும் தியாகம் செய்து விடு. மிஞ்சியதை உறுதியாகப் பற்றிக் கொள். அதையே விஜாரணை செய். விடாது உறுதியாக விஜாரணை செய்து வா. மிஞ்சியது எதுவோ அதுவாவாய் நீ. பிறகு அதுவே சொல்லும். ஜாக்ரதை.

49. ஏ மனமே! உண்மையான அன்பிடம் ஆசையோடு கூடிய பற்றுதல் அணுவளவும் இராது. அன்பு பிறருக்கோ, தனக்கோ கடுகளவும் துக்கத்தை உண்டாக்காது. துக்கத்தை உண்டாக்கும் அன்பு பொய்யன்பாகும். மெய்யன்பு சதா காலமும், இடைவிடாத, குறைவற்ற ஸந்தோஷத்தையே

கொடுத்துக் கொண்டிருக்கு மென்பதை நீ மறந்து விடாதிருப் பாயாக. மனமே! அழிவற்ற அன்பையே கடவுளாகவும், மக்கள் ஒவ்வொருவருடைய உள்ளத்தில் இருக்கும் ஆத்மா வாகவும் கண்டு வழிபடுவையாகுக. கடுகளவு சுயநலமிருப் பினும் அது பொய்யன்பாக மாறி, தீராத துயரத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும். மனமே! பற்றற்ற உள்ளத்துடன் அணுவளவும் சுயநலமற்றவனுக இருந்து கொண்டு, அன்பு செலுத்துவாயாகுக. அப்பொழுதுதான் நீ உனக்குள் அழிவற்ற பேரின்ப மயமான அன்பை உணரமுடியும். நீ எந்நாளும் துன்பமில்லாது இருக்க வேண்டுமானுல் சுய நலத்தை அறவே தியாகம் செய்துவிடு. செய்வனத் திருந்தச் செய். இம்மையில் குறையற்ற செல்வம் உனக்குள் பெருக் கெடுக்கும். மறவாதே. மறவாதே.

50. ஏ மனமே! உனக்கு விடுதலை வேண்டுமானுல் நான் சொல்வதைக்கேள். முதலில் உன்னிடமுள்ள சுயநலத் தையும், ஆசைகளையும் தியாகம் செய். சுய நலத்துடன் உனக்குள் எதனிடமாவது ஆசைஉண்டாகுமானுல், அதுவே உன்னைக் கெடுக்கும் கொடிய மாயப் பிசாசாகும். அழியக் கூடிய அனைத்தும் கொடிய சத்ருவான மாயையேயாகும். உன்னைக் கெடுக்கவந்த மாயைகளை எல்லாம் நன்கு நீ தெரிந்து கொண்டு அவைகளை அறவே வெருத்து ஒதுக்குவாயாக. உன் உள்ளத்தில் நீயல்லாது, வேருெருவருக்கு இடம் கொடுத்து விடுவையானுல் நீ உறுதியாக கெட்டே போவாய். உனக்குக் கேடுவராதிருக்க வேண்டுமானுல் நீ எவரையும் எதையும் (கடவுளானுலும் சரி) நினைத்துக் கொள்ளாதே. மனமே கடவுள் என்பவர் உனக்குள்தான் இருக்கிருர். அவர் உனக்குள் இல்லையென்ருல் நீ உயிருடன் இருக்க முடியாது. அதனுல் கடவுள் வெளியிலும், உனக்குள்ளிலும், இருப்பதால் கடவுளை நீ நினைக்காவிட்டாலும் கடவுள் உனக்குள் உண்மய

மாகவேதான் இருக்கின்றார் மனமே! நீ எதையும் நினையாத போது கடவுள் உனக்குள், உண்மயமாகவே இருப்பதை அப்பொழுதுதான் உணரமுடியுமென்பதை நீ மறந்து விடாதே கடவுளை உனக்கு வேருக நினையாதே. கடவுளாக வேறு ஒன்றையும் நீ நினைக்காதே. நீ நினைப்பதெல்லாம் முடிவில் உன்னைக் கெடுக்கும் சத்ருக்களாகவே வந்து உன்னைத் தாக்கும் சுயநலத்தைத் தியாகம் செய். பற்றற்று பணி புரிந்து கொண்டு அன்பு செலுத்துவாயாக.

51. ஏ மனமே! நல்லது கெட்டது என்பதெல்லாம் உன்னிடமுள்ள ஆசையினால் உண்டாவதாகும். பற்றுள்ளவரை வினைகள் உன்னைத் துரத்திக் கொண்டுவரும். அனைத்தும் ஈசன் செயல் அவனன்றி அணுவும் அசையாது, ஒவ்வொரு உயிருக் குள்ளும் இறைவனே ஊடுருவி இருந்து வருகிறான் என்று இறைவனுடைய பெருமைகளையும் அவன் சான்னியத்திலிருந்து தான் உலகம் இருந்து வருகிற தென்று நீ உறுதியாக நம்பி விடுவாயானால், அக்ஞான இருள் உன்னைவிட்டு விலகி விடும் இவ்வுலக மனைத்திற்கும் கர்த்தாவாகிய இறைவனை மறந்து தான், தான் என நினைப்பவன் மிகக் கொடியத் தெய்வத் துரோகியாகி விடுகிறான் இவ்வுளகிலுள்ள அனைவரிடமும் கடவுளே யிராகவும், அறிவாகவும், ஆத்மாவாகவும், இருந்து வருவதை நம்பி உணர்ந்து கொண்டு, எல்லோருக்கும் எவன் மரியாதைகளைச் செலுத்துகிறானோ அவனே உண்மை யான கடவுள் வழிபாடு உடையவனாகிறான். இறைவனே இவ்வுலகில் காணும் அனைத்துமாக இருக்கிறானென்பதை உறுதியான நம்பிக்கையுடன் இருப்பவனைப் பற்றுதல்கள் ஒன்றும் செய்து விட முடியாது. காண்பன் அனைத்தையும் கடவுளாகவே கண்டு வருபவனை ஆசைகள் என்ன செய்யும் அவனுக்கு வினையாற்றும் கடமையில்லாது போவதினால் அவன் தனதாத்மாகவே இருந்து வரும் கடவுளிடம் இன்புற்று அதிலேயேத் திருப்தியடைந்து அந்த கடவுளாகிய ஆத்மாவில்

